உ

சிவமயம்



# அகநூல்



இது
திருவருட்பயன் விளக்கவுரை முதலிய நூல்களை
இயற்றியவராகிய
யாழ்ப்பாணம் புலோலிநகர்
சு. சிவபாத சுந்தரம் B. A.
செய்தது.



:: சென்னை ::
புரோகிரசிவ் அச்சுக்கூடம்

இந்நூல்
எனது மாமியாரும்
எனக்குத் தமிழ்க்கல்வி யூட்டியவருமாகிய
தவச்செல்வியார்
வ. பார்வதியம்மையாருடைய
திருவடிகளுக்குச் சாத்தப்பட்டது.

## முகவுரை.

உலகம் சிரமேற்கொள்ளும் நூல்களுள் இந்நாளில் வளர்ச்சியாலும் பயனாலும் ஒப்புயர்வின்றி விளங்குவது அகநூலாகும். ஆதலால், இந்நூலைக் கற்றற்குப் பெருந்தொகையினர் ஆர்வங்கொள்வர். ஆயினும், மேலைத்தேசத்தார் கண்ட அகநூற்கொள்கைகளைக் கூறும். விரிந்த நூல்கள் தமிழில் இன்மையாலும், அகநூற்பொருள் தமிழிலே சைவ சாத்திரங்களிலே தத்துவப் பிரகரணத்திலே சுருக்கமாய்ச் சமய நூலுணர்ச்சியில்லாதார் அறிதற்கரிதாய்க் கூறப்பட்டிருத்தலாலும் அப்பொருளை விரிவாயும் எளிதாயும் விளக்கும் ஒரு தமிழ்நூல் வேண்டப்படுகிறது. இதற்காக மேனாட்டுக் கொள்கைகளுட் சிறந்தவற்றை ஆதாரமாகக்கொண்டு இச்சிறு சுவடியை எழுதத்துணிந்தேன்.

இந்நூற்பொருள் முதலதிகாரத்திற் றொகுத்தும் மற்றையவற்றில் வகுத்துங் கூறப்படுகின்றது. மனிதனுடைய மூவகையாற்றல்களாகிய அறிவுதொழிலிச்சைகளுள், இச்சை இரண்டாம் மூன்றாம் நான்கா மதிகாரங்களிலும், தொழில் அடுத்த ஐந்ததிகாரங்களிலும், அறிவு பின் வரும் ஐந்ததிகாரங்களிலும், இவற்றின் தொகுதியாகிய தன்மை பதினைந்தாமதிகாரத்திலும் விளக்கப்படுகின்றன.

இந்நூல் மனிதரினியல்பைக் கூறுதலால் யாவர்க்கும் உரியதாயினும் சிறுவர்களைப் பயிற்றுவோராகிய பெற்றோர்க்கும் ஆசிரியர்க்கும் சிறப்பாக உரியது. ஆசிரியர்க்கு வேண்டிய கல்விபயிற்றும் முறைகள் அகநூல்விதிகளினின்று பிறக்குமாறு ஆங்காங்கு காட்டப்படுகின்றது.

இந்நூலியற்றும்போது பெருந்துணை புரிந்தோர் கொழும்பு அரசினர் ஆசிரியர் கல்லூரி அதிபரும் எனது நண்பருமாகிய ஸ்ரீமான் H. S. பெரேரா [M. A. Lond.] அவர்களும், சுழிபுரம் விக்ரோறியாக் கல்லூரி அதிபரும் எனது சிறியதந்தையார் புதல்வருமாகிய சிரஞ்சீவி கு. சிவப்பிரகாசமும் [M. Sc., Ph. D. Lond.], திருநெல்வேலி சைவாசிரியர் கலாசாலை உப அதிபரும் எனது மாணாக்கருமாகிய சிரஞ்சீவி பொ. கைலாசபதியுமாம் [B. Sc. Lond]. இவர்கள் செய்த நன்றி என்றும் பாராட்டத்தக்கது.

யாழ்ப்பாணம், கந்தவனம். }
யுவ௵ ஐப்பசிமீ ௧௨௨ }

சு. சிவபாதசுந்தரம்.

# அதிகார முறை

அதி. பக்கம்





அதி. பக்கம்



---

உ

சிவமயம்

# அகநூல்

## முதல் அதிகாரம்

### பிரவேசம்

அகநூலின் அகலம்—பயன்—ஆதார விதி—ஆக்க முறை

#### அகநூலின் அகலம்

அகநூலாவது மனிதனுடைய வாழ்க்கையைப் பற்றிக்கூறும் நூல். இவ்வாழ்க்கைக்கு முக்கிய சாதனம் மனமாதலால், இந்நூல் அகநூல் எனப்பட்டது. அகம் என்பது மனம்.

மனிதனுடைய வாழ்க்கையாவது அவன் தன்னுடைய தேவைகளைப் பெறுதற்கு வேண்டிய தொழில்களைச் செய்தலும் அங்ஙனஞ் செய்து பெற்றவைகளை அநுபவித்தலுமாம்.

மனிதனுக்குத் தேவையானவற்றுட் சாமானியமானவை ஊண், உறக்கம், உறைவிடம், தற்காப்பு, கலவி முதலியன. அவன் நாடும் பொருள்கள் கல்வி, செல்வம், அறம், புகழ், கடவுள்வழிபாடு முதலியவற்றுட் சிலவேனும் பலவேனுமாம். இவற்றுள் முக்கியமானவற்றை அவன் தேடாமலிருத்தல் அரிது; அவற்றைத் தேடத்தக்கனவாய் அவனுடைய மனமும் உடலும் அமைந்திருக்கின்றன.

தேவைப் பொருள்களைத் தேடுமாறு தூண்டுவன ஊக்கங்கள்*. இவை மனத்தில் இயல்பாயுள்ளவை. பசியூக்கத்தினால் அவன் உணவைத் தேடுகிறான். வலியவனொருவன் பகைத்து வரும்போது, அச்ச ஊக்கத்தினால் ஏவப்பட்டுப் பகைவனுக்குப் பணிந்தாயினும் தப்பியோடியாயினும் பகைவன் செய்யத்தக்க பொல்லாங்கினின்றும் நீங்குகிறான்; பகைவன் மெலியவனானால், போரூக்கத்தின் ஏவுதலாற் போர்செய்து பகைவனை அடக்குகிறான். ஊக்கங்கள் வேறும் பலவுள.

கல்வி செல்வம் முதலிய நாட்டப் பொருள்களைத் தேடுவித்தற்கு ஊக்கங்கள் தடித்துப் பற்றுகளாகின்றன. எப்படியெனில், ஒரு புதியபொருளைக் காணும்போது அது யாதென்றும், முன் காணாத ஒருவரைக் கண்டால் அவர் யாவரென்றும், ஒரு சத்தம் சடுதியாகக் கேட்டால் அது எதனால் உண்டானதென்றும் வினவச் செய்வது ஆராய்வூக்கம். இவ்வூக்கம் கல்வியில் அதிகமாகச் சென்று தடித்துக் கல்விப் பற்றாகின்றது.

தேவைகளைப் பெறுதற்குத் தொழில்செய்தல் வேண்டும். தொழில் மனத்தினாலும் உடலினாலும் செய்யப்படுவது. ஒரு தொழிலைத் தொடங்குமுன், அது தக்கதோ தகாததோ என்பதையும், அது தக்கதாயின் அது செய்தற்கு வேண்டிய கருவிகள் எவை என்பதையும் ஆராய்தற்குத் துணையாவது மனவாற்றலாகிய விவேகம்*. அது தக்கதென்றறிந்தபின், "அதை நான் செய்வேன்" என்று துணிபு செய்யும் மனவியல்பு அகங்காரம்*. அந்தத் தொழில் தொடங்கியபின், அதை நிறைவேற்றற்காக

* இவை முறையே இச்சா ஞானக் கிரியாசத்திகளின் துவாரம் எனற்பாலன.



மனத்தில் நிகழும் இயக்கம் முயலல் என்றும் அகமுயற்சி என்றும் பேர்பெறும்.

ஒரு தேவைப் பொருளைப் பலவகையான தொழில்களாற் பெறலாம். உணவுப்பொருள் வேண்டுமாயின், பயிர்செய்து அதை நேரே பெறலாம். இல்லையேல், வேறுதொழிலைச் செய்து பொருளைச் சம்பாதித்து அப்பொருளைக் கொடுத்து அதைப் பெறலாம். அல்லது, பொருளையேனும் உணவையேனுங் களவினாற் பெறலாம். களவு முதலிய தகாத வழிகளினாலே பொருளைப்பெறுதற்கு விருப்பமுண்டாகும்போது, அவ்விருப்பத்தை அடக்குதற்கு நாம் முயலுதலும் உண்டு.

தேவைகளைப் பெறுதற்காக நாம் தொழில் செய்யும்போது, பிறனொருவன் அத்தொழிலுக்கு இடையூறு செய்தாற் கோபமும், துணைசெய்தால் நேசமும், பெருந்தடைகள் பிறவழியால் வந்தால் அச்சமும் உண்டாகும். இந்த நிகழ்ச்சிகள் சுவைகள் எனப்படும்.

தொடங்கிய தொழில் முற்றுப்பெற்றால் இன்பமும், முற்றுப்பெறாவிட்டால் துன்பமும் உண்டாகும். இன்ப துன்பங்கள் வேதனைகள் எனப்படும். சுவைகளும் வேதனைகளும் தாக்கங்களாம்.

மேலே கூறிய ஊக்கம் தாக்கம் முதலிய மனநிலைகளும், விவேகம் முதலிய ஆற்றல்களும், மனிதனிடத்தே வெவ்வேறளவினவாய் இருக்கின்றன. சிலருக்குச் சில தொழில்களில் விசேஷ விருப்புண்டு. ஒருவனுக்கு உண்ணுதலிலும், வேறொருவனுக்குக் கல்வியிலும், மற்றொருவனுக்குப் போரிலும் அதிகமான விருப்பமிருக்கும், இந்த விசேஷ விருப்புக்குக் காரணம் ஊக்கங்களது வன்மையின் தாரதம்மியமாம்.

ஒரே தன்மையான தொழிலை இருவர் தொடங்கினால், ஒருவன் தன் தொழிலை மனவமைதியோடு ஆறுதலாய்ச் செய்வான்; மற்றவன் பரபரத்து மனக்கலக்கத்தோடு செய்வான். இந்த வேறுபாடு அகமுயற்சியின் வேற்றுமையால் வருவது. சிலர் எடுத்த கருமத்தை என்ன இடர்வந்தாலும் கைவிடார். வேறு சிலர் இலகுவிற் கைவிடுவர். இவ்வேற்றுமை அகங்கார வன்மை மென்மையாலாவது.

சிலர் தொழில் செய்யும்போது விரைவில் இளைப்பர்; வேறு சிலர் விரைவில் இளையார். சிலர் மெல்லெனச் செய்வர்; வேறு சிலர் விரைவில் முடிப்பர். சிலர் கோபம் முதலியவைகளால் அதிகமாய்த் தாக்கப்படுவர்; வேறு சிலர் தாக்கப்படார். இவை பெரும்பாலும் உடற்கூறுகளின் வேற்றுமையால் உண்டாவன.

இப்படியாக மனநிலையாலும் உடல் நிலையாலும் மனிதருக்கிடையேயுள்ள பேதங்கள் குணத்தின் பேதங்களாம். மனிதர் குணத்தினாலன்றி விவேகம் ஞாபகசத்தியாதிய ஆற்றல்களாலும் பேதப்படுவர். குணமும் மனவாற்றல்களும் சேர்ந்து தன்மையாகும்.

மனித வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களும், அப்பொருள்களிலே இச்சையை ஆக்கும் ஊக்கங்களும், அப்பொருள்களைப் பெறுதற்கு வேண்டிய தொழில்களின் வகையும், தொழிலைச் செய்தற்கு வேண்டிய விவேகம் செயற்றுணிபு அகமுயற்சியாகிய இவையும், தொழில் செய்யும் போதுண்டாகுந் தாக்கங்களும், அறிவைப் பெறும் வகைகளும், மனிதனின் தன்மையும் இந்நூல் கூறும் பொருள்களாம்.



## பயன்

நூல்களின் பயன் கற்போருக்கு அறிவைக் கொடுத்து அவர்களுடைய ஆற்றலை ஏற்றுதல். அகநூலானது வாழ்க்கைத்துறைக்கு வேண்டிய அறிவைக் கொடுத்து நல்வாழ்க்கைக்கு வேண்டிய ஆற்றலை ஏற்றுதற்குத் துணையாகத்தக்கது. மனிதன் தனிமையாக வாழாமற் பிறரோடு கலந்து வாழவேண்டி யிருத்தலால், தனக்கும் பிறருக்கும் நன்மை உண்டாக வாழுதலே நல்வாழ்க்கை யெனப்படும். அங்ஙனம் ஒருவன் நல்லவனாக வாழவேண்டுமாயின், அவன் தன்னுடைய தன்மையையும் பிறருடைய தன்மையையும் அறிதல் அவசியம். இவற்றைப் பிழையின்றி அறிதற்கு அகநூலறிவு வேண்டப்படுகின்றது.

முன்னாட்களில் ஊர்வழக்கமுங் குடும்ப பாரம்பரியமும் வாழ்க்கைக்குப் பிரமாணமாயிருந்தன. இக்காலத்திலே பல ஊரவர்கள் பல வேறுபட்ட கொள்கைகளோடு ஒவ்வோர் இடத்திலுங் கலத்தலினாலே, வழக்கங்களும் பாரம்பரியமும் நிலைகுலைந்து போயின; கொள்கைகளும் ஆசாரங்களும் நாளுக்கு நாள் மாறுதலடைகின்றன. பெற்றோரது கட்டளைக்குப் பிள்ளைகளும், ஆசிரியரது கட்டளைக்கு மாணாக்கரும், முதலாளியுடைய கட்டளைக்குத் தொழிலாளியும் தடையின்றி அமைதல் முன்னாட்களில் வழக்கமாயிருந்தது. இவர்கள் இந்நாட்களிலே தத்தங் கருத்துக்கிசைந்த கட்டளைகளுக்கே பெரும்பாலும் அமைகின்றனர். ஆதலால், இவர்களுடைய கருத்து எப்படியிருக்குமென்பதைத் தலைவர்கள் அறிந்துகொண்டால்மாத்திரம் இருபகுதியாரும் ஒற்றுமையாய் வாழலாம். அநேக பெற்றோரும் ஆசிரிய

றும், அகநூலுணர்ச்சியின்மையால், உத்தமராய் வரத்தக்க சில பிள்ளைகளுடைய வாழ்க்கையைக் கெடுத்துவிட்டனர். அவர்களுடைய நீதியீனங்களைச் சகிக்கமாட்டாமற் சிலர் தற்கொலை செய்தனர். வெறுப்பான பார்வைக் கஞ்சும் நொய்தான மனமுள்ள பிள்ளைகளை அவர்கள் அடித்துக் குத்திக் கெடுத்தனர்; சுமக்கமாட்டாத சுமையைச் சுமத்திச் சிலரைக் கள்வராக்கினர்; அச்சுறுத்தி ஏங்கவைத்துச் சிலரைப் பித்தராக்கினர்.

முன்னாட்களிலே கூட்ட வாழ்க்கையிலே ஒருவர் செய்த சிறு பிழையை மற்றவர் பாராட்டாமல் விடுதல் வழக்கமாயிருந்தது. இக்காலத்திலே ஒன்றுக்கு இரண்டு கொடுத்தலே வழக்கமாய் விட்டது. அகநூலுணர்ந்தோர் பிறர் தீமைசெய்தற்குக் காரணம் அவரது ஆற்றாமையென்பதை அறிந்து பகை பாராட்டாமல் விடுதற்கிடமுண்டு.

அன்றியும், சிலர் மனிதருடைய தன்மையிலுள்ள வேறுபாடுகளைச் சிந்தியாமல், மற்றவர்களுந் தங்களைப் போன்றவர்கள் என்று கருதி, கடுங்கோபியைப் பொறுமையுள்ளவன் என்றெண்ணிக் கோபம் மூட்டியும், மந்தனை விவேகியென்று நினைத்து அவன் விளங்கமாட்டாததைச் சொல்லியும், அயோக்கியனை யோக்கியனென்று நம்பி ஏய்க்கப்பட்டும் இடர்ப்படுகின்றனர்.

சீவனத்தொழிலை நிச்சயித்தற்கும் அகநூல் பெருந்துணைபுரியும். அகநூன்முறையினாலே மனிதருடைய ஆற்றல்களை ஒருவாறு அளவிடலாம். அளந்தபின்பு, அந்தந்த ஆற்றலுக்குத் தக்கதொழிலைத் துணிந்து கொள்ளலாம். அப்படித் துணிந்துகொண்டால், ஒவ்வொருவனும் தன்தன் தொழிலைச் சோர்வின்றிச் செய்



வான்; தொழிலினாற் பெரும்பலனையும் பெறுவான். அநேகர் தமது ஆற்றலுக்குத் தகாத தொழிலை மேற்கொண்டு துன்பப்படுகின்றனர். முதலாளிமார் தொழிலாளரைத் தேவைப்படும்போது, அபேட்சகர்களை அகநூல் முறையாகப் பரீட்சித்துத் தகுதியுடையோரைத் தெரிந்து கொள்வாராயின், அவர்களுடைய தொழில் தக்கவாறு நடைபெற்று விருத்தியடைந்து பெரும்பலனைக் கொடுக்கும். ஒழுக்க முறைகளும் சமய அநுட்டானங்களும் மனிதருடைய ஆற்றல்களுக்குத் தக்கவைகளாய் அமையவேண்டியிருத்தலால், அவற்றைக்கூறும் நீதிநூல்களுக்குஞ் சமயநூற்பகுதிகளுக்கும் அகநூல் ஆதாரநூலாகின்றது.

இவைகள் யாவற்றிலும் மேலானதாய் அகநூலின் முக்கிய பயனாயுள்ளது மனிதன் தன்னை அறிதலாம். சந்திரசூரியர்களின் தன்மையையும், காற்று மழைகளின் காரணங்களையும், முக்கோண விருத்தங்களின் இயல்பையும், அனல் ஒளிமின்களின் தர்மங்களையும், சடப்பொருள்களின் தோற்றத்தையும், புல் பூண்டு விலங்கு பறவை முதலியவற்றின சுபாவங்களையும் அறிதலிலும் பார்க்கத் தன்னுடைய தன்மைகளை அறிதல் மனிதனுக்கு மிக முக்கியமானது. எமது எண்ணங்கள், இச்சைகள், சுவைகள், வேதனைகள் எப்படி உண்டாகின்றன என்பதை அறிதல் எமக்குப் பெரும்பயனைத் தருதலுமன்றி மிகத் திருப்திகரமாயும் இருக்கும். நாம் எண்ணத் தகாதவற்றை எண்ணுதற்கும், விரும்பத்தகாதவற்றை விரும்புதற்கும், செய்யத்தகாதவற்றைச் செய்தற்கும் காரணமென்ன என்பதை நாம் அறிதல் அவசியம். ஆதலால், அகநூலைக் கல்லாமை குறைகளுக்குள்ளே பெருங் குறையாகும்.

## ஆதாரவிதி

நூல்கள் தாம் எடுத்துக்கொண்ட விஷயத்தின் அங்கங்களை விளக்கித் தொடர்புறுத்தி இயன்றவரை பொது விதிக்குள் அமைத்தல் அவற்றின் இயல்பு. உதாரணமாக, இரசாயனநூல் பொருள்களைத் தனிப்பொருள் கூட்டுப்பொருளென வகுத்து, அவைகளையும் அவைகளுக்குள்ள தொடர்புகளையும் விளக்கி, அவைகளை அநேக பொதுவிதிகளுக்குள் அமைத்திருக்கின்றது. இந்தப் பொதுவிதிகளை ஆக்குதற்குக் காண்டல் கருதல் ஆகிய இருபிரமாணங்களும் போதியனவல்ல. இவ் இருபிரமாணங்களையும் பிரயோகித்தற்கு ஆதாரவிதிகள் வேண்டப்படும். உதாரணமாக, பௌதிக நூலின் ஆதாரவிதி, "பொருளையேனும் ஆற்றலையேனும் ஆக்கல் அல்லது அழித்தல் சாலாது" என்பது. வானசாத்திரத்தின் ஆதாரவிதி அகிலகவர்ச்சி விதி. இப்படியே அகநூலுக்கும் ஆதாரவிதி வேண்டப்படும்.

அகநூலின் ஆதாரவிதியைப்பற்றி அபிப்பிராய பேதமுண்டு. ஏனெனில், மனத்தின் தன்மை எளிதில் வரையறைப் படுவதன்று. சடப்பொருள்களை ஆராய்வதிலே பெரும் இடர்ப்பாடுகள் வரா. அவற்றின் தன்மைகள் அளக்கப்படத் தக்கவை. ஒரு படி தண்ணீரை ஆவியாக்குதற்கு எவ்வளவு சூடு வேண்டுமென்பதைச் சற்றேனும் பிழையின்றிக் கணித்தல் கூடும். ஒரு நட்சத்திரம் குறித்த நேரத்தில் எங்கே இருக்குமென்பது கணிக்கப்படத் தக்கது. உயிருள்ள பொருள்களின் தன்மை சடப்பொருள்களின் தன்மையிலும் பார்க்க நுண்ணியது. ஒரு சாரைப்பாம்பு இந்நேரத்தில் இன்ன இடத்தில் நிற்குமென்று சொல்லல் இயலாது.



ஏனென்றால், சீவப்பொருள்களின் தன்மை வரையறுத்தற்கரியது. மனிதனுடைய ஆற்றல்களும் தொழில்களும் பிறபிராணிகளின் ஆற்றல்தொழில்களிலும் பார்க்க மிகப் பின்னலானவை. இதனாலே, அகநூலின் ஆதார விதிகளைத் துணிதல் அரிதாயது.

ஒருசாரார் மனிதனுடைய அறிவும் விவேகமும் சடசம்பந்தமானவை யென்றும், பௌதிக நூலின் ஆதார விதிகளே அகநூலுக்குரியன வென்றுங் கூறுவர். இவர்களது கொள்கை பின்வருமாறு:—

ஒரு கல் ஒரு சுவருக்குமேல் இருக்கும்போது, அதை ஒருவர் தள்ளிவிட்டால், அது கீழே விழும். ஒரு மனிதன் சுவருக்கு மேலே நிற்கும்போது, அவனைத் தள்ளிவிட்டால், கல் விழுவதுபோலவே அவனும் விழுவான்.

ஒருவன் ஒரு முழங்காலை மற்ற முழங்காலுக்கு மேலே வைத்துக்கொண்டு முழங்காற் சில்லுக்குக் கீழேயுள்ள தசைநாரைத் தட்டுவானாயின், அவனுடைய கால் அசையும். அது அசைதல் அவனுடைய விருப்பத்தாலாவதன்று. அது யந்திரம்போல் அசைவது.

இதிலும்பார்க்கச் சற்றே தொழிற்பாடு கூடிய செயல்கள் சர்க்கரையை நாவிலிடும்போது வாயூறுதலும் இதுபோல்வனவுமாம். இவைகளும் சடப்பொருள் முறையாக நடப்பவையென்று இவர்கள் சாதிக்கிறார்கள். எப்படியெனில், சர்க்கரை நாவிலேபட, நாவிலிருந்து செல்லும் புலனாடிகள்வழியாய் மூளை தாக்கப்பட, மூளையிலிருந்து செல்லும் அசை நாடிகள் மூலமாய் வாயிலுள்ள ஊறற் கருவி தொழிற்பட, நீர் ஊறுகின்றது; இது பௌதிகநூன் முறையாகவும் இரசாயனநூன் முறையாகவும் நடைபெறுவது. சர்க்கரை நாவிற்படுதல்

ஒரு தீபனம் என்றும், வாயூறுதல் அதன்பிரதியாக வரும் இயக்கமென்றும், உடற்றொழில்கள் யாவும் தீபனப்பிரதிகள் என்றுஞ் சொல்லுவர்.

எண்ணுதல் நினைத்தல் முதலிய முயற்சிகளும் பௌதிகமுறைப்படியே நிகழ்வனவென்றும், அறிவெனப் படுவதெல்லாம் மீட்டலால்வரும் ஒருபழக்க மென்றும் இவர்கூறுவர். பெருக்கல் வாய்பாட்டைக் கற்கும் இரு மாணவர்களை "ஆறொன்பது எத்தனை" என்று கேட்டால், ஒருவன் "ஐம்பத்து நாலு" என்கிறான்; மற்றவன் "ஐம்பத்தாறு" என்கிறான். முதற் பையனுடைய மறு மொழி சரியானதிற்குக் காரணம் அவன் "ஆறொன்பது ஐம்பத்து நாலு" என்று சொல்லும் பழக்கத்தைப் பழகினமை என்றும், மற்றவன் பிழையாகச் சொன்னதுக் குக் காரணம் நன்கு பழகாமை என்றும், ஆராய் வறிவெல்லாம் சொற்பழக்கமல்லாமல் வேறொன்றல்ல என்றும் இவர் கூறுவர். எல்லாவிதமான செயலும் அறிவும் தீபனப் பிரதியாகவேனும் பயிற்சியின் பயனாக வேனும் நிகழ்வன என்னும் இக்கொள்கை சடவாதம் எனப்படும். இக்கொள்கை பெருக்கல்வாய்பாடு கற்ற லைப் போன்ற தனியாற்றலை விளக்குமேயன்றி நுண்ணிய ஆராய்தல்களை விளக்கமாட்டாது.

வேறொருசாரார் மனநிகழ்ச்சி தீபனப்பிரதி யன் றென்றும், மூளை தொழில்செய்யும்போது உண்டாகும் ஒருநிகழ்ச்சி யென்றுங் கூறுவர். மரத்தின் நிழல் அதன் அம்சமாகாமல் அதனாலுண்டாகும் ஒரு தோற்றமாவது போல, மனநிகழ்ச்சிகள் மூளைத்தொழிலின் அம்சமாகா மல் அதனாலுண்டாகும் ஒரு தோற்றம் என்பது இவர்க



ளுடைய கொள்கை. இது நிழல்வாதம் எனப்படும். இக் கொள்கைக்கு ஒருவிதமான ஆதாரமுமில்லை.

வேறொருசாரார் மனசுக்கும் மூளைக்கும் ஒருவித மான தொடர்பு மில்லையென்றும், தொடர்பில்லையேனும் அவைகள் ஒரு நேரத்தில் ஒரே தொழிலில் ஈடுபடுவன என்றும், ஒரே நேரத்தைக் காட்டும் இரு வேறு வகை யான கடிகாரங்களை நிகர்ப்பன என்றுங் கூறுவர். இது அகவுடற் செய்மைவாதம் எனப்படும்.

மனம் ஒரு பொருளைக் கண் வழியாக அறிகின்றது. அப்படி அறிதற்குக் கண்ணுக்கும் மனத்துக்குந் தொடர் பிருத்தல் வேண்டும். ஆதலால், மனத்துக்கும் உடலுக்குந் தொடர்பில்லை யென்னும் இக்கொள்கை பொருந்தாது.

மனம் வேறு உடல் வேறு என்பதும், அவைகள் அன்னியோன்னிய தொடர்புடையன என்பதுமே அதி கம் பொருத்தமான கொள்கை. இது அகவுடற்றொடர்பு வாதம் எனப்படும்.

சடவாதிகள் சொல்வதுபோல நாங்கள் சடப் பொருள்களாயின், எங்கள் தொழில்கள் என்ன நோக்க மாகச் செய்யப்படுகின்றனவென்று வினவுதற்கு இடம் வராது. நதி ஒரு சடப்பொருள். அது என்ன நோக்க மாகப் பாய்கிறதென்பதை நாம் விசாரிப்பதில்லை. நாங் கள் சடப்பொருளல்ல என்பதும், நாங்கள் சித்துப் பொருளென்பதும் மேலே காட்டப்பட்டன. அப்படி யாயின், எமது செயல்களுக்கு நோக்கங்கள் இருத்தல் வேண்டும். "செயல்கள் யாவும் நோக்கமுடையன" என்பதே எமது அகநூலின் ஆதாரவிதி.

இந்த நோக்கம் யாதெனில், இன்பத்தைப் பெறு தலே நோக்கமென்று இன்பவாதிகள் கூறுவர். ஒரு

வன் உண்ணினும், உடுப்பினும், கல்வி செல்வத்தைத் தேடினும், ஒவ்வொன்றினும் வருகிற இன்பமே அவனுடைய நோக்கமென்று இவர்கள் கூறுகின்றனர். இவற்றால் இன்பம் வருதல் உண்மையேயாயினும்,எமது நோக்கம் அதைப் பெறுதல் அன்றென்பது சற்றே சிந்தித்துப் பார்க்கில் நன்கு புலப்படும். நாம் உண்பது பசி தீர்த்தற்கும், உடுப்பது மானத்தைக் காத்தற்கும், கற்றல் அறிவைப் பெறுதற்கும், பொருதல் பகை நீக்கத்துக்குமாம்; இன்பத்திற்காக அல்ல.*

## ஆக்கமுறை

இந்நூலுக்கு வேண்டிய உண்மைகளை அறியும் முறை இயற்கைக்காண்டல் செயற்கைக்காண்டல் என இரு வகைப்படும். இயற்கைக்காண்டலாவது இயற்கைப் பொருள்களைக் கண்டு ஆராய்தல். ஒரு பூனை தன்னுடைய இரையை எப்படி அகப்படுத்துகின்றதென்பதை அவதானித்தல் இயற்கைக்காண்டல். செயற்கைக் காண்டலாவது ஒரு பொருளை நாம் வேண்டியபடி கட்டுப்பாட்டுள் அமைத்து அதன் தொழிலை அவதானித்தல். ஒரு பூனையை ஒரு கூட்டுக்குட் புகுத்தி, ஒரு கொழுக்கியாற் கூட்டைப் பூட்டிவிட்டு, அதற்குப் பெரும்பசி வந்தபின்பு கூட்டுக்கு வெளியே அதற்கு விருப்பமான உணவை வைத்தால், அந்தப்பூனை கூட்டுக்கு வெளியே வருதற்குச் செய்யும் முயற்சிகளை அவதானித்தல் செயற்கைக்காண்டலாகும்.

காண்டல் மேலும் இருவகைப்படும். அவை அகக்காண்டலும் புறக்காண்டலுமாம். அகக்காண்டலாவது

* இதன் விரிவை எட்டாம் அதிகாரத்திற் காண்க.



ஒருவன் தன் மனத்தொழிலை மட்டிடுதல். ஒருவன் ஒரு சரித்திரத்தை வாசிக்கும்போது, எந்தப் பகுதியிலே தனக்கு வெறுப்பு வருகின்றது, எந்தப் பகுதியிலே மகிழ்ச்சி வருகின்றது, எந்தப் பகுதியிலே துக்கம் வருகின்றது என்று அவதானித்தல் அதுவாம். புறத்தொழிலை மட்டிடுதல் புறக்காண்டலாம். பிறனொருவன் ஒரு பாட்டை எவ்வளவு நேரத்தில் மனனம் பண்ணுகிறான், அல்லது நூறு வினாக்களுள் எத்தனை வினாக்களுக்கு விடை அறிந்திருக்கிறான் என்பதை அவதானித்தல் புறக்காண்டலாகும்.

செயற்கைக் காண்டலிலே அநுமானப் பிழைகள் அதிகமாய் வரும். ஒருவனைப் பரீட்சிக்கும்போது கூச்சம் அல்லது தடுமாற்றம் உண்டானால், அவனுடைய மனநிலையும் உடல்நிலையும் வேறுபடும். அவனுடைய இயல்பான ஆற்றலை அறிதல் சாலாது. அப்படியே, இளைத்த நேரத்தில் அல்லது மனக்கவலையுள்ள நேரத்தில் ஒருவனைப் பரீட்சித்தால் பரீட்சை பிழைபடும். பரீட்சிக்கும்போது இப்படியாக வரும் பிழைகளுக்கிடம் வைத்துக் கணித்தல் அவசியம்.

இயற்கைக் காண்டலில் நீடிய ஆராய்வாகிய இதிகாசமுறை ஒருவகையாகும். ஒருவனுக்குப் பைத்தியம் வந்துவிட்டால், அதன் காரணத்தை அறிதற்கு, அவனுடைய பழைய சரித்திரத்தை ஆராய்தலும், பின்பு அவனுக்குப் பலவகையான சிகிச்சைகளைச் செய்யும்போது அவற்றால் வரும் நயநட்டங்களை ஆராய்தலும் இதிகாச முறையாகும். ஒரு பரோபகாரியினுடைய முற்சரித்திரத்தையும் பிற்கால சரித்திரத்தையும் ஆராய்ந்து அந்தத் தன்மை அவனில் எவ்வாறு வளர்ந்து வந்தது

என்பதையும் அவற்றுக்குக் காரணம் எவையென்பதையும் அறியும் முறையும் இதுவாம்.

இம்முறைகளுள், செயற்கைக் காண்டலே பெரும் பலனைத் தரத்தக்கது. இதுவே பௌதிக ரசாயன சாத்திரங்களை இவ்வுந்நத நிலைக்கு உயர்த்தியது. அகநூலை வளர்த்து அதை ஓர் அகலமான சாத்திரமாக்கி வருவதும் இதுவே. நூல்களுள்ளே பெரும் பயனுடையதும் மிகப் பழமையானதும் அகநூலாயினும், இது நெடுங்காலமாய் விருத்தியடையாது வந்ததற்குக் காரணம் இம்முறை இந்நூலில் அநுசரிக்கப்படாமல் வந்தமையே. இப்போது இம்முறை கையாளப்பட்டு வருதலால், இந்நூல் இன்னுஞ் சில ஆண்டுகளில் நூல்களுக் கெல்லாந் தலைமைபெற்று விளங்குமென்பதிற் கையமில்லை.

## வினாக்கள்

க. மனிதனுடைய தேவைகளுள் சாமானியமானவை எவை (ரு) ?
உ. அகநூல் கூறும் பொருள்கள் எவை (ங) ?
ங. தன்மையின் கூறுகள் எவை (உ) ?
ச. அகநூல் எத்துறைகளிற் பயன்படும் (சு) ?
ரு. அகநூலின் ஆதாரவிதி யாது ?
சு. அகநூலின் தற்கால வளர்ச்சிக்குக் காரணம் யாது ?

---

# இரண்டாம் அதிகாரம்

## தேவைகள்

தேவைகளின் வகை—தேவைகளின் கலப்பு—தேவைகளின் விரிவு—தேவைகளின் ஒடுக்கம் (பற்றுக்கள்)—பற்றுக்களின் அகல ஒடுக்கங்கள்.

### தேவைகளின் வகை

தேவைகள் உயிர்களுக்கு இயல்பாயமைந்தவை. எந்தப் பொருளுக்குத் தேவையில்லையோ அது உயிரில்லாதது. தேவைகளுள் முக்கியமானது உணவு. இது உடல் நிலைத்தற்காக வேண்டப்படுவது. நிலையியற் பொருள்களாகிய புல் பூண்டு முதலியவை தங்களுடைய உணவை வேரினாலும் இலையினாலுங் கொள்ளுகின்றன. இயங்கியற் பொருள்கள் தங்கள் உணவைத் தேடிப் பெறுகின்றன. உணவைத் தேடுமாறு தூண்டுவது பசி. பசி தோன்றுதற்குக் காரணம் உணவுக் குறைவினால் இரத்தத்திலுண்டாகும் ஒரு வேற்றுமையும், இரைப்பையின் அசைவுமாம். உணவுத்தேவை* மற்றையவைகளிலும் வலியதாதலால் "பசி வந்திடப் பத்தும் பறந்திடும்" என்னும் பழமொழியும், "சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே" என்னும் ஆன்றோர் வாக்கும் பிறந்தன.

* இங்கே தேவை யென்றது தேவைப்படுதலை. தேவைப் படுதலாவது ஒரு தேவையைப் பெறுதற்கு இச்சித்தல். உணவுத் தேவையாவது உணவைப் பெறுதற்குண்டாகும் இச்சை. இவ்வதிகாரத்திலே தேவை என்பது பெரும்பாலும் இச்சையையே குறிக்கின்றது; சிறுபான்மையாகத் தேவைப் பொருளைக் குறிக்கின்றது.

உயிர் நிலைத்தற்கு உணவு மாத்திரம் போதிய தன்று. பிற உயிர்களாலே தீமை வராமற் காப்பதும் அவசியம். இந்தத் தேவை **பகைநீக்கம்** எனப்படும். பகைகளாவன தீமை செய்யும் பிற மனிதரும் விலங்கு முதலியனவுமாம். தீமையாவது எத்தேவைக்காயினுந் தடையாய் வருந்தொழில். உதாரணமாக, ஒருவனுடைய உடம்பை வருத்துதலும், அவனுடைய உணவை அபகரித்தலும், அவனுடைய மனைவிமக்களுக்குத் தீங்கு செய்தலும், அவனுடைய வீட்டுக்கு நெருப்பு வைத்தலுந் தீமைகளாம். ஆகவே, பிறதேவைகளுக்குத் தடையாய் வருவனவற்றை நீக்குதல் பகைநீக்கம். பிற தேவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளை வேண்டி நிற்க, பகைநீக்கமாகிய தேவை அப்படியான ஒரு வகைப் பொருளை வேண்டி நில்லாமற் பிற தேவைகளுக்குத் துணையாய் நிற்கின்றது. ஆதலால், இதைப் பொதுத் தேவையென்பாருமுளர்.

பகையை நீக்குதற்குரிய வழிகள் எதிர்த்தலும் ஒதுங்குதலுமாம். ஒரு சிறு குழந்தைக்குத் துன்பஞ் செய்தால், அவன் அழுது கைகால்களை அடிப்பான்; வயது சற்றே ஏறிவிட்டால், துன்பஞ் செய்பவர்களைக் கைகால்களால் அடிப்பான், பற்களாற் கடிப்பான், நகங்களாற் கிள்ளுவான். அக்குழந்தையின் கையிலுள்ள ஒரு விளையாட்டுப்பொருளைப் பறித்து மனசுக்குத் துன்பஞ் செய்தாலும் அப்படியே செய்வான். சற்றே வயதேறிய பின்பு, சிறுவர்கள் அற்ப காரியங்களுக்கும் சண்டையிடுவார்கள். வளர்ந்தவர்கள் பகை காரணமாக அடிபட்டு, சில சமயங்களில், ஒருவரை யொருவர் கொன்றும் விடுகிறார்கள்.



எதிர்த்தற்குப் போதிய வலியில்லாதவர்கள் தம் பகைவரை ஏசுகிறார்கள், தூற்றுகிறார்கள், அல்லது இவை போன்ற பிற ஆற்றாச் செயல்களைச் செய்கிறார்கள். எதிர்த்துப் பகைநீக்கும் முறைமையைச் சிலர் மிக நல்ல வழியிலே உபயோகிக்கிறார்கள். ஒருவன் தான் செய்யுந் தொழில் விரைவிலே கைகூடாவிட்டால், அதை ஒரு பகையாகப் பாவித்துப் பெருமுயற்சி செய்து அதை நிறைவேற்றுகிறான். ஒரு மாணாக்கன் கணக்குச் செய்யும்போது, அதைச் செய்யும் வழி தோன்றாவிட்டால், அந்தக் கணக்கை ஒரு பகையாகப் பாவித்து அதைச்செய்தலை ஒருபோராகக் கருதித்தன்னாலியன்ற முயற்சிசெய்து அதை நிறைவேற்றுதலுண்டு. அருந்தொழில்களைப் போராகக் கருதிப் பெருமுயற்சி செய்து அவற்றை நிறைவேற்றுவோர் போரில் வென்றவர்கள் அடையும் பெருமகிழ்ச்சியைப் பெறுகின்றனர்.

எதிர்த்துப் பகைநீக்குந் தன்மை சிறு குழந்தைகளிலும் இருத்தலால், இது பிறவியில் அமைந்துள்ளதென்று கொள்ளுதற்குத் தடையில்லை. ஒதுங்குதலாற் பகைநீக்கும் உபாயமும் பிராணிகளில் இயல்பாயுள்ளது. இடிமுழக்கத்தைக் கேட்டுத் திடுக்கிடுதல் எங்களிடத்தில் அச்சம் இயல்பாயமைந்திருத்தலைக் காட்டும். அஞ்சுதல் இயல்பாயுள்ளதாயினும், அச்சத்துக்குக் காரணமான பொருள்கள் காலத்துக்குக் காலம் மாறி மாறி வரும். சிறு குழந்தைகள் பாம்பு,* புலி, கரடி

* ஒரு குழந்தைக்கென வைத்த பாலை ஒரு நாகபாம்பு குடித்துக் கொண்டிருக்க, அந்தக்குழந்தை அப்பாம்பைத் தட்டிக்கொண்டிருந்ததைக் குழந்தையின் பெற்றோர் வேலைத்தலத்திலிருந்து திரும்பி வந்தபோது கண்டார்களென்று ஒருபத்திரிகை கூறியது.

முதலியவற்றிற்கு அஞ்சமாட்டார்கள். அவைகளாலே தீமைவருதலை அறிந்தபின்பே அஞ்சுகின்றனர். இந்த அறிவைக் குழந்தைகள் அனுபவத்தினாலும், தாய்தந்தை யருடைய பயக்குறிப்பினாலும், கேள்வியினாலும் பெறு கின்றனர். வயது முதிர, அறிவு வளர, பழைய அச்சங் களுட் சில தீரும்; புதிய அச்சங்கள் சேரும். அச்சம் வேதனையை அதிகப்படுத்துவதும் உண்டு. சத்திரவைத் தியஞ் செய்யும்போது, நோயாளி பராக்காயிருந்தால், வேதனை குறைவாயிருக்கும்.

பகைநீக்கத்துக்குரிய தொழில்களாகிய போருக் கும் பயந்தோடுதற்கும் சரீரபலம் ஏற்றமாகவேண்டும். இந்த மேலதிகமான பலம் சலாசயத்தின் மேலேயுள்ள ஓர் ஊற்றுப்பையிலுள்ள சத்து இரத்தத்துடன் சேர் தலினாற் பெறப்படுகின்றது.

பகைநீக்கத்தின் வேறொரு வகை உவர்த்தலெனப் படும். அஃதாவது தீமையுள்ள சடப்பொருள்களை அருவருத்து அவற்றினின்றும் நீங்குதல். அழுகின பொருள்களையும், கள் முதலியவற்றையும், அவற்றின் மணக்குறிப்பினால் உவர்க்கின்றோம். இரைச்சலொலி சரீராரோக்கியத்துக்குத் தீமைபயத்தலால், அதுவும் உவர்க்கப்படுகின்றது. இருட்டிலே அபாயத்துக்கிடம் வருதலால், இருளை உவர்க்கின்றோம். அறிவேறியபின்பு, இந்த உவர்ப்பு தீய பழக்கஒழுக்கங்களிலும் தீயோரது சகவாசத்திலுஞ் சென்று அவற்றிலே அருவருப்பை ஆக்குகின்றது.

ஒய்வின்றித் தொழில் செய்தால் உடல் பழுதடை யும். ஆதலால் இடையிடையே ஒய்வது அவசியம். புறத்தொழில் செய்யாது ஒய்ந்திருக்கும் போதும், மூளை



யும் மனமுந் தொழில் செய்கின்றன. இவைகளும் ஒயும் நிலை உறக்கமெனப்படும். ஆதலால், முழு ஒய்வாகிய உறக்கமும் ஒரு தேவை. இதுவும் இயல்பாக அமைந் திருக்கிறது. ஒரு சுகதேகிக்கு எப்போது உறக்கம் வேண்டியதோ அப்போது அது தானாகவே வரும். ஆயினும் மனக்கலக்கமும், தொழிற்பற்றும், சில வகை யான பொறித்தாக்கங்களும், சிற்சில நோய்களும் உறக் கத்தை வராமல் தடுக்கும். உறங்கவேண்டிய நேரத்திலே கோபம் அச்சம் முதலிய சுவைகளினாலே மனம் அமைதி கெட்டிருக்கும்போது, அகமுயற்சியின் முனைப்பினாலே தொழில் நடைபெறும்; உறக்கம்வராது; தளர்ச்சி மறைந்து நிற்கும். ஆயினும், இறுதியிலே பெருந்தளர்ச்சி யுண்டாகி உறக்கத்தை வருவிக்கும். இரைச்சலொலி கொசுகுக்கடி முதலியவற்றால் வரும் பொறித்தாக்கங்க ளும் நித்திரையைக் கெடுக்கும். உறக்கத்துக்குச் சகாய மானவை தளர்ச்சியும், நீட்டி நிமிர்ந்து படுத்திருத்தலும், பசுமையான படுக்கையும், இனிய ஓசையும், பேருண்டியும் பிறவுமாம். பேருண்டி அதிகமான இரத்தத்தை இரைப் பைக்கிழுத்து மூளைக்குப்போகும் இரத்தத்தைக்குறைத்து நித்திரைக்குக் காரணமாகின்றது. இதனாலே "ஊணன் கருமமிழந்தான்" என்னும் பழமொழியுண்டாயது.

உறக்கம் தொழிலைத் தடுத்து உடலிலும் மனத்திலு முள்ள தளர்ச்சியை நீக்குவதோடுமாத்திரம் அமையாது வேறுபல சகாயங்களையுஞ் செய்கின்றது. உறக்கத்திலே தொழிலில்லாமையினாலே தேய்வுப்பொருள் குறையும். தேய்வுப்பொருள் இரத்தத்தோடு சேர்ந்து அதை அசுத்தப் படுத்துவதாதலால், அதுகுறையும்போது இரத்தசுத்தி ஏறும்.

பிராணிகளிலே காணப்படும் வேறொரு பிரதான மான தேவை கலவித் தேவையாம். இயங்கியற் பொருள் களுள், சீவவிரிவில் முதிர்ந்த பிறவிகளாகிய மனிதர் விலங்கு பறவை முதலியவற்றிலே இத்தேவை இரத்தத் திலே தோன்றும் ஒரு சத்தினால் உண்டாகின்றது. பசி யானது காலத்துக்குக்காலம் தோன்றுவது போல, இதுவுங் காலத்துக்குக்காலந் தோன்றும். ஆயினும், இது, பசியைப் போல, பிறந்தவுடனே தோன்றாமல், சரீரம் வளர்ந்தபின்பே தோன்றும். உணவு பகைநீக்கம் உறக்கமாகிய தேவைகள் உயிரை நிலைப்பித்தற்குச் சாதனமாதல் போல, கலவித்தேவை சந்ததிவிருத்திக் கேதுவாகி அந்தந்தப் பிராணிகளின் இனத்தை நிலை நிறுத்துகின்றது.*

பகைநீக்கத்தைப் போலவே பிறதேவைகளுக்குத் துணையான வேறொரு தேவை ஆராய்வு. உணவுப் பொருளாயினும், பகைப் பொருளாயினும், கலவிப் பொருளாயினும், வேறெப்பொருளாயினுங் காட்சிக் குத் தெளிவாய்ப் புலப்படாவிட்டால், அது இன்ன தென்று நிச்சயித்தல் பெரும்பாலும் அவசியமாகும்.

சில சமயங்களிலே பிராணிகள் ஆராய்வின்றி ஐயப்பாட்டோடு தொழில்செய்தலுண்டு. ஒரு மான் காட்டிலே மேய்ந்து கொண்டிருக்கும்போது, வழக்க மில்லாத சரசரப்புக் கேட்டால், அது யாதென்று ஆராயாமல் ஓடித் தப்ப முயலும். ஒரு பாம்பைக் கண்டவுடனே அது விஷப்பாம்போ அன்றோ என்று

*பிராணிகளையும் இனங்களையும் நிலைப்படுதற்கு வேண்டிய சாதனங் கள் பிராணிகளில் இயல்பாய் அமைந்தவை யாதலால், இவைகள் நிலைத் தற்கு ஒரு நோக்கமிருத்தல் வேண்டும். இந்நோக்கம் சமயநூல்களிற் கூறப்படுகின்றது.



ஆராயாமற் கொல்லுகிறவர்களும் உண்டு. வேட்டைக் குப் போகிறவர்கள் குந்தியிருக்கும் மனிதரைப் பன்றி யென்று நினைத்துக் கொன்றிருக்கிறார்கள்.

இங்ஙனம் ஐயப்பாட்டோடு தொழில் நடைபெறா விட்டால், புதிதாகத் தோன்றும் பொருளை ஆராய்தல் தேவையாகும். ஆராயும்போது, காட்சிக்கு வேண் டிய துணைகளேனும் சமீபித்தலேனும் பிறபொறிகளின் துணையேனும் வேண்டப்படும். இருட்டிலே பாம்பு போலக்கிடக்கும் பொருளை நிச்சயித்தற்கு விளக்கும், தூரத்திலே கேட்கும் அழுகுரலின் காரணத்தை அறிதற் குச் சமீபித்தலும், பசுநெய்யிலே எண்ணெய் கலந்திருத் தலை யறிதற்கு மணத்தலும் சுவைத்தலும் வேண்டும். ஆராய்வு மனிதனுக்கு விசேஷமாய் அத்தியாவசிய மானது. இது விரிந்து நிரைப்பட்டுக் கல்வியாகின்றது.

அநேக வகையான பிராணிகள் தங்கள் குட்டிகளை அல்லது குஞ்சுகளைக் காக்கின்றன. குளவி முதலிய வைகள் கூட்டுக்குள் முட்டையையிட்டு முட்டைக்குக் கீழே குஞ்சுக்கு வேண்டிய உணவை வைத்துவிட்டுப் போய்விடுகின்றன. குஞ்சைப் பாதுகாக்குந் தேவை அவைகளிடத்தில்லை. வேறு அநேக வகையான பிரா ணிகள் தங்கள் குட்டிகளைச் சிலகாலத்துக்காயினுங் காக்கவேண்டியனவாய் இருக்கின்றன. இந்தத்தேவை **மகவுக்காப்பு** எனப்படும். மீனினத்திலே குஞ்சுகளைக் காப்பது ஆண்மீன். பட்சிகளுக்குள்ளே பெரும்பாலும் ஆணும் பெண்ணுங் குஞ்சுகளைக் காக்கின்றன. பால் கொடுக்கும் இனங்களிலே மகவைக் காப்பது தாய். ஈன்றவுடனே தாயுடைய இரத்தத்திலே ஒரு சத்து*

*'இதுவாற்சல்லியச் சத்து' எனப்படும்.

உண்டாகி, பாலைத் தோற்றுவிப்பதுமன்றி, பிள்ளை யிலே பற்றுவைத்தற்குக் காரணமுமாகின்றது. மனித சாதியாரிலே குழந்தையுடைய இனிமையான தோற்ற மும் சிரிப்பும் பிறசெயல்களும் விசேஷ பற்றுக்குக் காரணமாகின்றன. இப்படியாக வந்தபற்று, இரத்தத்தி லேயுள்ள வாற்சல்லியச் சத்து அற்றுப்போன பின்பு, குழந்தையினுள்ள அன்பை நிலைபெறச்செய்யும். ஒரு குழந்தையினுள்ள பற்று அடுத்த குழந்தை பிறந்த வுடனே சற்றே குறையும்.

மான் மரை முதலிய விலங்குகளை வேறு சில விலங் குகள் இரையாக்குகின்றன. இவைகள் தனிமையாய் வாழ்ந்தால், அந்தப் பகைவிலங்குகளுக்குத் தப்புதல் அரிதாய் விடும். ஆதலால், இவை கூட்டங் கூட்டமாய் வாழுதல் அவசியமாயது. இந்தத்தேவை கூட்டத்தேவை எனப்படும். ஒரு கூட்டத்தைச் சேர்ந்த மாடுகள் ஒரு மித்தே யுலாவும். ஒரு மாட்டை அதன் கூட்டத்தி லிருந்து பிரித்துவிட்டால், அது தன் கூட்டத்தோடு சேர ஆசைப்படும்.

இந்தத் தேவை மனிதவாழ்க்கைக்கு அத்திபாரமா யுள்ளது. பெரும்பாலானவர்கள் நெடுநேரம் தனியே யிருக்க விரும்பார்கள். தனியே யிருக்கிறவர்கள் வேறொரு நோக்கமுமின்றிப் பிறர்பாற் சென்று அவர்க ளோடு கூடுகிறார்கள். சில திருவிழாக்களுக்குச் சனங் கள் பெருந்தொகையாகப் போதல் கூட்டத் தேவையை விரும்பியேயாம். மனிதர்கள் கூடிக் கிராமங்களும் நகரங்களும் உண்டாதற்கு இது ஒரு முக்கிய காரணம். கூட்டத்தேவை மனிதனிடத்தில் இல்லாமலிருந்தால்,



அவனுடைய வாழ்க்கை புலி கரடி முதலியவற்றின் வாழ்க்கையின் அளவினதாய் விடும்.

வலிகுறைந்த பிராணிகள் துன்பப்படும்போது, துணையை வேண்டி நிற்கும். துணையைப் பெறுதற்காக அவைகள் அழுதல் வழக்கம். குழந்தைகளுக்கு எவ் வகைத் தேவை யிருந்தாலும் அவர்கள் அழுகின்றனர். வளர்ந்தவர்கள் வேதனைப்படும்போது ஒரு பயனு மின்றிக் குரலிடுதற்குக் காரணம் இத்தேவை இயல்பா யமைந்திருத்தலாம். இத்தேவை துணைதேடல் எனப் படும்.

சில பிராணிகள் உணவுதேடல் முதலிய அநேக தொழில்களைத் தாய்மாரிடமிருந்தே பழகுகின்றன. கோழிக் குஞ்சுகள் தாய்க்கோழியைப் பார்த்துக் குப் பையைக் கிளறப் பழகுகின்றன. தாய்க்கோழி அஞ்சு கிறதைப்பார்த்துக் குஞ்சு அஞ்சுகின்றது. குஞ்சுகள் அல்லது குட்டிகள் தாயோடு வாழும்போது, அவை களைப் பின்பற்றி நடக்கும். பின்பற்றல் பிறதேவைகளுக் குத் துணையாதலால் அதைப் பொதுத்தேவை யெனவும் பொருந்தும். கீழ்ப் பிராணிகளுள், பின்பற்றலிற் சிறந் தது குரங்கு. மனிதனுடைய ஆரம்பக் கல்வியிற் பெரும் பகுதி பின்பற்றலால் வருவது. அவனுடைய பழக்க வழக்க ஒழுக்கங்கள் பெரும்பாலும் பின்பற்றலால் வருத லால், ஔவையார் "நல்லாரைக் காண்பதுவு நன்றே" என்றும், "தீயாரைக் காண்பதுவுந் தீதே" என்றுங் கூறினர். அரச சேவையிலே சில பகுதியினுள்ளவர்கள் நேர்மை யுடையவராயிருத்தற்கு முக்கிய காரணம் அவர் களுக்கு முன்னிருந்தவர்களுடைய நேர்மையான ஒழுக்க மாம். வேறு சில பகுதிகள் வெளிவெளியாக நேர்மை

கெட்டிருத்தற்குக் காரணம் அவர்களுடைய பாரம்பரியமே.

வாழ்க்கைச் சுகம் வேண்டுமாயின், ஒவ்வொரு பிராணியும் தன் கருமத்திலே கண்ணாயிருந்து அதிலே தன்னுடைய உரிமையைநாட்டி முதன்மையைச் சாதிக்க வேண்டும். இங்ஙனம் முதன்மையைச் சாதித்தல் முதன்மைத் தேவையெனப்படும். இந்தத்தேவை நாய்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. இரண்டு நாய்கள் ஓர் உணவுப் பொருளைக் கைப்பற்றப்போனால், வலியது மெலியதைத் துரத்திவிட்டுத் தானே அதைத்தின்னும். வலியற்றவைகள் நெடுங்காலம் உணவு பெறமாட்டாதவைகளாய் இறுதியில் இறந்துபோம். மனிதர்கள் தங்கள் உரிமைகளை நீதிஸ்தலங்களிலுஞ் சாதிப்பார்கள். இராச்சியங்கள் மிருகங்களைப் போலவே தாங்கள் உரித்தாடுவனவற்றைத் தங்கள் பலத்தினாற் பெறுகின்றன. முதன்மைத் தேவை குழந்தைகளிலுமுள்ளது. அவர்கள் எப்போதும் மற்றையவர்களுடைய துணையை வேண்டியிருத்தலாற் பணிந்து நடக்க வேண்டியவர்களாயினும், தாங்கள் நினைத்ததை மற்றவர்களைக்கொண்டு செய்விக்க முயலுகின்றனர். அந்தச் சிறுவயதிலே இந்த முதன்மைத்தேவை இருத்தலினாலே, இதுவும் எவரிடத்தும் இயல்பா யமைந்திருப்பதென்பது பெறப்படும். இந்தத் தேவையின் முனைப்பினாலேயே உலகத்திலே பெருநன்மைகளுந் தீமைகளும் பிறக்கின்றன. கல்வியிலோ, விளையாட்டிலோ, அதிகாரத்திலோ, கீர்த்தியிலோ, எதிலாயினும் பெருமை பெறுதற்குச் செய்யும் முயற்சியெல்லாம் இம்முதன்மைத்தேவையால் உண்டாகின்றது. முன்னாட்களிலே அரசுகளுக்கிடையில் நடந்த போர்கள்



பெரும்பாலும் முதன்மைத் தேவையால் உண்டானவை.

அருஞ் செயல்களைச் செய்யமாட்டாதவர்கள் தங்கள் முதன்மைத் தேவையைத் திருப்திப் படுத்தற்காகப் புளுகுவார்கள்; தோற்றவர்கள் வெட்கப் படுவார்கள், மனம் எரிவார்கள், பொறாமை கொள்ளுவார்கள், அல்லது பழிவாங்குவார்கள்.

முதன்மைக் கெதிரானதாகிய பணிதலும் யாவருக்குந் தேவையானது. ஒழுக்கத்தினாற் சிறந்தவருக்கு மற்றவர்கள் பணிதல் இயல்பு. செல்வத்தால் மேம்பட்டவர்களுக்குஞ் சிலர் தாமாகவே விரும்பிப் பணிகின்றனர். ஒரு கூட்டத் தலைவருக்கு அக்கூட்டத்தவர் யாவரும் பணிவர். உத்தியோகத்தர் தமது மேலோருக்குப் பணிகின்றனர். காட்டில் வாழும் மிருகங்களுக்குள்ளே கூட்டமாய் வாழும் எருமை பசு முதலியவைகள் தங்கள் கூட்டத்திலே பலத்தாற் கூடிய ஒரு மிருகத்துக்குப் பணிகின்றன. பணியுந் தன்மை இயல்பாய்அமைந்திராவிட்டால் உலகத்திலே உயிர்கள் வாழுதல் அரிதாய்விடும். வலிகுறைந்த பிராணி வலிகூடிய ஒன்றுக்குப் பணியாவிட்டாற் சீவமோசமும் நேரும். வலிகூடிய நாய் ஒன்றை வலியற்ற வேறொருநாய் பிடிவாதமாய் எதிர்த்து நின்றால், அது இதைக் கொன்றுவிடும். நிராயுதனான ஒரு மனிதன் சிங்கத்தை எதிர்த்தானாயின், அதனாற் கொல்லப்படுவான். அரசாட்சியாரால் ஆக்கப்பட்ட கட்டளைச் சட்டத்துக்குப் பணியாமல் நிற்பவன் சிறைச்சாலையில் இடப்படுவான். தாய்தந்தையருக்குப் பணியாதபிள்ளைகளுடைய வாழ்வும், ஆசிரியனுக்குப் பணியாத மாணாக்கனுடைய கல்வியும் கெடும். குடிகளுடைய கருத்துக்குப் பணியாத

அரசன் உயிர்விடவேண்டியும் வருகின்றது. ஆதலால், பணிவு எவருக்கும் இன்றியமையாத் தேவை. சமயத்துக்குத் தக்கபடியும் இடத்துக்குத் தக்கபடியும் பிராணிகள் தங்களுடைய செயல்களை மாற்றிக் கொள்ளுதலும், பிழையான வழியிலே போனவர் பிழையென்று கண்டு பின் அதைத் தவிர்த்தலும், சமயாசாரங்களை அநுட்டித்தலும் பணிதலின் வகைகளாம்.

சிலரிடத்தே முதன்மைத் தேவையும் வேறு சிலரிடத்தே பணிவுத்தேவையும் பலமாய் நிற்கும். சிலர் எவ்வளவு தகுதியற்றவரானாலும் தலைமையான இடங்களைப் பெற ஆசைப்படுகின்றனர். வேறு சிலர் எவ்வளவு தகுதி வாய்ந்தவர்களாயினும் தலைமையான இடங்களை உவர்க்கின்றனர். இன்னுஞ் சிலர் தங்கள் தங்கள் தகுதிப்படி முதன்மையை விரும்புகிற அளவு பணிவையும் விரும்புகின்றனர்.

விலங்குகள் எந்த இடத்திலும் ஒதுங்கிக் கொள்ளும். பறவை பாம்பு முதலிய பிராணிகள் தங்கள் முட்டைகளை யிடுதற்கும் குஞ்சுகள் அல்லது குட்டிகள் வசித்தற்கும் இருப்பிடங்களை ஆக்குகின்றன. எறும்பு முதலியவைகள் புற்றை யுண்டாக்குகின்றன. மனிதன் தன்பொருட்டு வீட்டையும், தன்னுடைய ஆடுமாடுகளுக்காகக் கொட்டில்களையும், பிள்ளைகளுடைய கல்விக்காகப் பள்ளிக்கூடங்களையும், நோயாளிகளுக்காக வைத்திய சாலையையும், வழிபாட்டுக்காகக் கோயிலையும், எண்ணிறந்த பிற தேவைகளுக்காக வேறு கட்டடங்களையுங் கட்டுகிறான். இந்தத் தேவை **கட்டல்** எனப்படும்.

சில பிராணிகள் தங்களுடைய உணவை எல்லாக் காலங்களிலும் பெற்றுக்கொள்ளமாட்டா. தேனீ



தேனைப் பூவுள்ள காலத்திலே தான் பெறும். ஆதலால், அது பூவில்லாத காலத்திற்கு வேண்டிய உணவையும் பூவுள்ள காலத்திலே சேகரித்து வைக்கும். அகழான் தனக்கு வேண்டிய தானியங்களை விளைவு காலத்திலே சேகரிக்கும். இப்படிச் சேகரித்து வைத்தற்குத்தேவைப் படுதல் **ஈட்டுதற்றேவை** யெனப்படும். சிலர் போதிய செல்வமுடையவர்களாயிருந்தும் மேலும் பொருள் சம்பாதிக்க முயலுதல் இந்தத்தேவை இயல்பாக அமைந்து ஏவுதலினாலேயாம். இந்தத்தேவை தடிக்கப்பெற்றவர்கள் எவ்வளவு பொருளிருந்தாலும் உணவைச் சுருக்கியும் பொருளை ஈட்டுகிறார்கள்.

சில பட்சிகள் தங்களுடைய உணவைத் தேடுதற்குப் பிற இடங்களுக்குப் போகவேண்டிவரும். சில விலங்குகளும் இப்படியே இடம் மாறுகின்றன. இடம் மாறுந்தேவை இடப்பெயர்ச்சி எனப்படும். "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்ற திருவாக்கின்படி மனிதரும் இடம் பெயரவேண்டியவர் ஆகின்றனர். பொருட்சம்பாத்தியத்துக்காக ஏற்பட்ட இடப் பெயர்ச்சித் தேவை மனிதனிடத்து இயல்பாயிருத்தலால், அவன் பொருள் தேவையில்லாத போதும் பிற இடங்களுக்குப் போகத் தேவைப்படுகிறான். சிலர் பெரும்பொருள் செலவு செய்தும் பல வசதியீனங்களுக்குட்பட்டும் பிற இடங்களுக்குப் போகிறார்கள். அவர்களை "ஏன் போகிறீர்கள்" என்று யாராவது கேட்டால், "ஊர் பார்க்கப் போகின்றோம்", அல்லது "தீர்த்தமாடப் போகின்றோம்" என்று சொல்லுவார்கள். உண்மையான காரணம் அவர்களுக்கே தெரியாது.

### தேவைகளின் கலப்பு

மேலே சொல்லிய தேவைகள் ஒன்றோடொன்று கலத்தலுமுண்டு. இவற்றுள் பின்பற்றல் எப்போதும் பிற தேவைகளோடு கலந்தே வரும். ஏனெனில் அது தன்னளவில் ஒரு தேவையன்று; அது பிற தேவைகளைப் பெறுதற்கு வழியாதலினாலே தேவையானது. ஆதலால், இது பிற தேவைகளோடு கலவாமல் வராது. கைத்தொழில் செய்து பொருளீட்டுகிறவனை ஒருவன் பின்பற்றுவானாகில், அப்பின்பற்றல் ஈட்டுதற்றேவைக்குத் துணையாகின்றது. பகையரசன் ஊரைப்பிடிக்க வரும்போது போருக்குப் போகிறவர்களைப் பின்பற்றுவோனுக்கு பின்பற்றல் பகைநீக்கத்துக்குத் துணையாகின்றது. ஆசிரியனுடைய சொல்லையுஞ் செயலையும் பின்பற்றும் மாணுக்கனுக்கு பின்பற்றல் அறிவுத்தேவைக்குத் துணையாகிக் கல்வியிலே செல்கின்றது. இந்தக் கலப்பினால் வந்த கல்வி உணவுத் தேவையோடு கலந்து சீவனத்துக்கு வேண்டிய கல்வியை நாடச் செய்கின்றது.

பின்பற்றல் பணிதலோடு சேர்ந்து புதுநாகரிகங்களுக்குக் காரணமாகின்றது. ஒருபெண் கொண்டை முடித்த விதத்தை அவளுக்குப் பணிவான வேறொரு பெண்பார்த்துத் தன்னுடைய கொண்டையையும் அப்படியே முடிக்கிறாள். இது "கண்டபாவனையிலே கொண்டை முடித்தல்" எனப்படும். எங்களை ஆளும் ஐரோப்பியரை நாம் பின்பற்றவேண்டி வந்தமைக்குக் காரணம் எங்கள்பணிவு. மாணுக்கர் ஆசிரியரது பழக்கங்களைப் பின்பற்றலும் இதனாலேயாம்.

முதன்மைத்தேவையும் பிறதேவைகளோடு கலக்கின்றது. காட்டில் வாழும் மாட்டுக் கூட்டத்திலே வலிமிகுந்த ஒன்று அந்தக் கூட்டத்துக்குத் தலைமாடாகின்றது. ஊரிலுள்ள ஒருவன் கல்வி செல்வம் சரீரவன்மை முதலியவற்றுள் ஒன்றாலேனும் பலவாலேனுஞ் சிறந்தவனாய் முதன்மைத்தேவை அதிகமுடையவனாகில், அவன் அந்த இடத்திற்கு ஒருதலைவனாகிறான். ஒருவிளையாட்டுக் கூட்டத்தாருள் அதிக சாதுரியமுள்ளவன் அந்தக்கூட்டத்துக்கு முதல்வனாகின்றான். இம்மூன்றிலும் முதன்மைத்தேவை கூடற்றேவையோடு கலந்து தலைமைத் தேவையாகின்றது.



முதன்மை போராடலோடு சேர்ந்து ஒருவன் தன் அதிகாரங்களை நிலைநிறுத்தற்காக அவனைப்போராடப் பண்ணுகின்றது. இந்த இரண்டனோடுங் கூட்டத்தேவையும் ஒருவனிடத்தே சேர்ந்தால், அது அவனைத் தன்னுடைய கூட்டத்தவர்களுக்காகப் போர்செய்விக்கும்.

முதன்மை சில தேவைகளோடு தனித்தனி சேர்ந்து அவ்வத் தேவைக்குரிய பொருள்களைப்பற்றி எதிரிடையை யுண்டாக்கும். இது உணவுத்தேவையோடு சேர்ந்து உணவுப்பொருளிலே எதிரிடையை யுண்டாக்குகின்றது. இரண்டு நாய்கள் இரையைக்கண்டால், அதைப்பிட்டு எதிரிடையுண்டாகிக் கடிபடுகின்றன. இந்த வகையான எதிரிடை மனிதர்களிடையே யுண்டாகிக் கொள்ளையடிக்க ஏவுகின்றது. முதன்மைத்தேவை கலவித்தேவையோடு சேர்ந்து கலவிப் பிராணியிலும், கல்வித் தேவையோடு சேர்ந்து கல்வியிலும், ஈட்டுதற்றேவையோடு சேர்ந்து ஈட்டலிலும் எதிரிடையை யுண்டாக்குகின்றது.

இந்த எதிரிடை மனிதர்களையும், குழுஉக்களையும், ஊர்களையும், தேசங்களையும் போர் புரியச்செய்து கலக்

கிக் கெடுக்கின்றது. பெரிய தேசங்களுக்கிடையில் உண்டாகும் போர்களும், இருசாதியார்களுக் கிடையிலுள்ள பகையும், சனங்கள் திருவிழாக்களிலும் விவாகங்களிலும் பொருளைச் சிதைத்தலும் எதிரிடையாலுண்டானவாம்.

### தேவைகளின் விரிவு

சில தேவைகள் தங்கள் தங்கள் எல்லைகளைக் கடந்து விரிகின்றன. பெண்கள் தங்கள் பிள்ளைகளைக் காப்பதே இயல்பாயினும், சிலர் பிறருடைய குழந்தைகள் தவிக்கும்போது தங்களுடைய பாலைக் கொடுத்து அப்பிள்ளைகளையுங் காக்கின்றனர். பெரும்பாலார் பிறருடைய குழந்தைகளிலே மனமுருகி அவர்களுக்குத் துணைசெய்கிறார்கள். பூனைகள் பிற பூனைகளின் குட்டிகள் போனாலும், அவைகளைத் தங்கள் குட்டிகள் போல வளர்த்து வருகின்றன. இளம் பெண்களுக்குக் குழந்தைகளிலே இயல்பாகப் பற்றுண்டு. இவைகளெல்லாம் மகவுக்காப்பின் விரிவுகளாம்.

இம் மகவுக்காப்பின் விரிவு இவ்வளவோடு நில்லாமல், குழந்தைகளைப் போலவே துணையை வேண்டிநிற்கும் முதியோரிலும் நோயாளிகளிலும் வறியவர்களிலும் குருடர் முதலியோரிலும் விரிந்து பரவுகின்றது. இது இவ்வாறு விரிந்து இரக்கமென்னும் பெயரைப் பெறும். ஆகவே, செயல்கள் யாவற்றுள்ளும் மேலானதாய்த் தெய்வத் தன்மையுடையதாய் விளங்கும் இரங்கல் மகவுக்காப்பின் விரிவாம்.

ஒரு கூட்டத்தின் அங்கத்தவர் அந்தக் கூட்டத் தலைவருக்குப் பணிதலே இயல்பு. கூட்டத் தலைவரல்லாத பெரியோர்களுக்குப் பணிதல் பணிதலின் விரிவாம். கல்விமான் அல்லது ஒழுக்கமுள்ளவன் எங்கள் குழூஉவிற்குச் சேராதவனாயினும், அவனுடைய மேம்பாட்டை யுணர்ந்து, நாம் அவனுக்குப் பணிகின்றோம். இந்தப் பணிவும் கடவுளுண்டென்னுங் கொள்கையுடையோன் கடவுளை வணங்குதலும் பணிதலின் விரிவுகளாம்.



உணவு சரீர சுகத்துக்கும் பலத்துக்குமே தேவையானது. உணவுத்தேவை இவ்வளவோடு நில்லாது சுகத்துக்கும் பலத்துக்குங் கேடு வரத்தக்கதாய் உண்ணுதற்கும் ஏவுதலுண்டு. சிலர் ஒரே நேரத்தில் எல்லை கடந்துண்பர்; ஒரு நாளில் நாலைந்து முறையுண்பர். இவை உணவுத் தேவையின் விரிவாம். கலவித் தேவை விரிந்து தூர்த்தத் தன்மையாகின்றது. எதிர்த்தல் பகை நீக்கத்தோடு நில்லாமல் வலிகுறைந்தவர்களை நலிவிக்கின்றது.

### தேவைகளின் ஒடுக்கம்

சில தேவைகள் ஒவ்வோரினத்துப் பொருள்கள் யாவற்றினுஞ் செல்லுவதோடு சிற்சில பொருள்களிலே மிக உறைப்பாகச் செல்லும். கூடற்றேவை அயலிலுள்ளவர்கள் யாவரிலும் பொதுப்படச் செல்லுவதோடு, நண்பர்களில் மிகுதியாகச் செல்லும். இவ்வாறு தேவைகள் தனிப்பொருள்களில் உறைத்து நிற்கும்போது, அவைகள் பற்று எனப்படும். அவைகள் தனிப்பொருள்களிற் குறுகி நிற்றற்குத் தக்க அளவு ஆழமாயும் பலமாயுமிருக்கும். ஆதலால், மனிதனுடைய இச்சைகள் பெரும்பாலும் அவன் பற்றுக்களின் வழிப்பட்டே நிகழும். அவனுடைய பற்றுகள் எவையோ அவற்றுக்குத் தக்கதாகவே அவனுடைய வாழ்க்கையுமிருக்கும்.

கலவித் தேவை பலரிலுஞ் செல்லாமற் குறுகி மனையாள் ஒருத்தியோடு நிற்பது வழக்கம். அப்படி நிற்கும் போது, ஆடவர்கள் பிற பெண்களையும், பெண்கள் பிற ஆடவர்களையும், இச்சியாது விடுகின்றனர். பட்சிகளுள்ளும் சிலவற்றிலே கலவித் தேவை குறுகி ஒவ்வொன்றும் ஒவ்வொரு பட்சியோடு கூடி இறக்கும் வரையும் பிரியாமல் வாழுகின்றன.

உணவுத் தேவை சுருங்குதலாற் சிலருக்குத் தாவர உணவிலே பற்றுண்டாகின்றது; தாவர உணவுகளுக்குள்ளும் சிலவற்றிலே விசேஷ பற்று உண்டாகின்றது; தோசை கொழுக்கட்டை பிட்டு முதலியவற்றுள் ஒன்றிலும், முருங்கைக்காய் பாகற்காய் பயற்றங்காய் முதலிய கறிகளுள் ஒன்றிலும், பாற்சோறு சர்க்கரைச்சோறு புளிச்சோறு தயிர்ச்சோறு முதலியவற்றுள் ஒன்றிலும் விசேஷபற்று உண்டாகின்றது.*

## பற்றுக்களின் அகல ஒடுக்கங்கள்

ஒருவன் பற்று வைக்கும் பொருள்கள் காலத்துக்குக் காலம் கூடியுங் குறைந்தும் வரும். பாணிப்பனாட்டை முன்னொரு காலமுந் தின்னாதவன் அதைத் தின்னும் போது அது அவனுக்குச் சுவைக்குமானால், பின் அதைத் தேவைப்படுவான். கூத்துக்குப் போகாதவன் ஒரு முறை போனால் பின்னும் போக விரும்புவான், அல்லது அருவருப்பான். கட்குடியன் குடிவகைகள் ஒன்றுமில்லாத ஊரிலே அநேக ஆண்டுகள் வாழ்வானாயின் கள்ளிலுள்ள பற்றைக் கைவிடுவான்.

இவ்வாறின்றிப் பற்றுக்கள் பிறருடைய ஏவுதலினால்

* பற்றுகள் நாலாம் அதிகாரத்தில் விளக்கப்படுகின்றன.



ஆக்கப்படுதலும் அழிக்கப்படுதலும் உண்டு. தாய், தந்தை, குரு, நண்பர் முதலியோருடைய கருத்திற் கிசைதற்காக ஒருவன் சில பற்றுக்களை விடவும், சிலவற்றைப் புதியனவாக ஆக்கவும் நேரும். அவர்களுடைய கருத்துக்கிசைய விருப்பமில்லாதவிடத்து, முதல் மூவருந் தண்டிப்பர் என்றஞ்சியேனும், தண்டித்த பின்னேனும், அவர்களுக்காக விருப்புவெறுப்புக்களை மாற்றுதலும் உண்டு. ஊரவர்கள் பழிப்பார்கள் என்றஞ்சியும் சிலர் பற்றுக்களை மாற்றுகிறார்கள். பிறருடைய மதிப்பை விரும்பியே அநேகர் நீதியீனங்களிலிருந்து விலகுகிறார்கள். ஊர்மதிப்பு தராசுபோல் இருந்தால் விதிவிலக்குகளுக்கமைதல் இலகுவாகும்.

## வினாக்கள்

௧. தேவைகளின் வகைகள் எவை (௧௪)?
௨. பிறதேவைகளுக்குத் துணையாகுந் தேவைகள் எவை?
௩. இரக்கம் எத்தேவையின் விரிவால் வருவது?
௪. பற்றுக்களாவன யாவை?
௫. கல்விப்பற்றுக்கு மூலமான தேவை யாது?
௬. கல்விப்பற்றுக்குத் துணையான தேவைகள் யாவை?
௭. மாணாக்கர்களது முதன்மைத் தேவையை எவ்வாறு நல்வழிப் படுத்தலாம்?
௮. கூட்டத்தேவைக்கும் விளையாட்டுக்குமுள்ள தொடர்பு யாது?
௯. மாணாக்கர்களுக்கிடையில் வரும் எதிரிடையாலுண்டாகும் நன்மைதீமைகள் எவை?
௧0. ஈட்டுதற்றேவை உரைத்தலினால் உண்டாகும் நயநட்டங்கள் எவை?

# மூன்றும் அதிகாரம்

## ஊக்கங்கள்

தேவையும் ஊக்கமும்—கலவி யூக்கம்- காப்பூக்கம்-பின்பற்றூக்கம்

### தேவையும் ஊக்கமும்

பிராணிகள் தத்தந்தேவைகளைப் பெறுதற்கு முயலுகின்றன; ஆயினும், அவைகள் ஒவ்வொரு தேவைப் பொருளும் இன்ன இன்ன பயனைத் தருமென்று ஆராய்ந்தறிந்து தேடுவனவாகத் தோன்றவில்லை. சில அவற்றின் பயனை அறியவே மாட்டா.

ஒரு குளவி கூடுகட்டும்போது, அந்தக் கூட்டின் பயன் அதற்கு விளங்கு மென்றெண்ண இடமில்லை. அந்தக்கூடு அதுக்குத் தேவையானதன்று; அதிலே அந்தக் குளவி வசிக்கமாட்டாது; தான் கட்டுவது கூடு என்பதை அது அறியாமலிருக்கவுங்கூடும். அது முட்டையிடுங்காலத்துக்குச் சற்று முன்னர் அதைக் கட்டத் தொடங்குகின்றது. பிறகுளவிகள் கூடுகட்டுவதைப் பின்பற்றி அதுகட்டுகின்றதெனில், அவைகள் கட்டுவதைக் கண்டவுடனே அது கட்டவேண்டும். அப்படியின்றி, ஒரு பருவம் வரும்போது மாத்திரம், அது கட்டுகின்றது.

கோழி பருந்தைக் கண்டு அஞ்சும்போது, அதன் குஞ்சுகள் பருந்தைக்காணுமலும், தாய்க்கோழி செய்வதைப் பின்பற்றிப் பதுங்குகின்றன. ஆதலால், இப்படிப் பதுங்குதலின் பயனை அவைகள் அறியமாட்டா.

ஒரு கூட்டத்தைச் சேர்ந்த பசு அக்கூட்டத்திலிருந்து பிரிந்துவிட்டால், ஒருவிதமான அபாயமுந்



தோன்றுமலிருக்கும் போதும் தன்னுடைய கூட்டத்தைச் சேர முயலுகின்றது.

மனிதருக்குள், உபவாசவிரதம் அநுட்டிப்போருக்கு உணவும், மகப்பேறு வேண்டாதார்க்குக் கலவியும், தீயோர் அயலில் வசிப்போர்க்கு அவர்களைப் பின்பற்றலும், அபாயமில்லாதார்க்குக் கூட்டமும் வெளிக்குத் தேவையல்லாதவையாயினும், விரதகாரருட் சிலர் உணவையும், மகப்பேற்றை வேண்டாதார் கலவியையும் தேவைப்படுகின்றனர்; தீயோர் அயலில் இருப்பவர்கள் தங்களுக்குத் தெரியாமலே அவர்களுடைய சில பழக்கங்களைப் பின்பற்றுகிறார்கள். இங்ஙனமாக, மனிதர் தமக்கு வேண்டாதவற்றையும் கீழ்ப்பிராணிகள் பயன் தெரியாதவற்றையுந் தேவைப்படுதற்குக் காரணம் பிராணிகளின் மனசில் இயல்பாயமைந்த ஒரு தன்மையாதல் வேண்டும். இத்தன்மையே எவ்வகைத் தேவையையும் பெறுமாறு பிராணிகளை ஏவுவது.

இத்தன்மைக்கு இச்சாமூலம் என்றும் ஊக்கமென்றும் பெயர். இச்சாமூலம் என்பதன் பொருள் ஆசைகளின் காரணம் என்பதாம். இது தேவைப் பொருள்களிலே ஆசையையாக்கும் இயல்புடையது. தேவைகளுட் சிலவற்றை எமது கட்டுப்பாடுகளாற் கைவிட வேண்டியிருக்கும்போதும், அவற்றோடு தொடர்புடைய ஊக்கங்கள் அவற்றிலே ஆசையை உண்டாக்கி நிற்கின்றன.

ஆசை தொழிலுக்குக் காரணமாதலால், ஆசைகளை ஆக்குவதாகிய ஊக்கமே தொழிலுக்கு மூலகாரணம். தொழிலுக்கேயன்றித் தொழில் செய்தற்குத் துணையாக வருஞ் சுவைக்கும் ஊக்கமே காரணமாதலால்,

உயிர்வாழ்க்கை முழுவதையும் இயக்குவது ஊக்கமெனல் பொருந்தும்.

ஊக்கம் ஒன்றோ பலவோவெனில், சிலர் ஒன்றென்பர்; வேறுசிலர் பல என்பர். உயிர்களுக்கு மூலத் தேவை ஒன்றுதானுள்ளதென்றும், அத்தேவையைப் பெறுதற்கு பிராணிகளை ஏவும் ஊக்கம் ஒன்றே உள்ளதென்றும், ஏனைய தேவைகள் அந்தத் தேவைக்குத் துணையானவைகளென்றும், அவைகள் துணையாதலால் அவைகளைப் பெறுதற்கு வேண்டிய முயற்சியைச் செய்யுமாறு அவ்வூக்கமே ஏவுமென்றும் சிலர் கூறுவர். அவ்வூக்கம் யாதெனில், சிலர் கலவியூக்கமென்றும் வேறு சிலர் முதன்மை யூக்கமென்றும் பலவாறாகக் கூறுவர்.

ஓர் ஊக்கம் மூல ஊக்கமாயின், அது யாவரிடத்தும் பேராற்றலுடையதாயிருத்தல் வேண்டும். ஆயினும், சிலரிடத்தே கலவியூக்கமும் வேறு சிலரிடத்தே முதன்மையூக்கமும் மிக மெலிவாயிருத்தலால், இவை மூலவூக்கமாகா. ஏனைய ஊக்கங்களும் சிற்சிலரில் மிகவலி குன்றியவைகளாய்க் காணப்படுகின்றன. ஆதலால் மூல ஊக்கம் ஒன்றே உண்டென்பது பொருந்தாது. ஊக்கங்கள் பல என்ற கொள்கையே பொருத்தமானது. முதலில் விருப்பு வெறுப்பு என இரண்டு ஊக்கங்கள்மாத்திரம் இருந்தனவென்றும், இவைகள் காலகதியில் விரிந்தன என்றும் ஆன்றோர் சிலர் கூறுவர்.

இவ்வூக்கங்களுட் சில உடல் நிகழ்ச்சிகளாலே தொழிற்படுவன. உடல் நிகழ்ச்சிகளாலாவன: பசி, தாகம், உறக்கம், காதல் முதலியவைகளாம். இவை சரீரத்திலுண்டாகுஞ் சிற்சில வேறுபாடுகளாலே தோன்றுவன. இவ்வகையான ஊக்கங்கள் விடாவூக்கங்களெனப்



படும். ஏனைய ஊக்கங்கள் புறப்பொருள்களின் காட்சியினாலே தொழிற்படுவன. வலி குறைந்தவன் எதிர்த்து வருதலைக் காணும்போது போரூக்கம் தொழிற்படுகின்றது; பிறனொருவன் ஒரு புதுத்தொழிலைச் செய்யக் காணும்போது, பின்பற்றாக்கம் தொழிற் படுகின்றது. இவ்வகையான ஊக்கங்கள் பிரதி ஊக்கங்களெனப்படும். தேவைகளும் அவற்றை ஆக்கும் ஊக்கங்களும் பின்வருமாறு:—

| தேவை | ஊக்கம் |
|---|---|
| உணவு | உணவூக்கம் |
| உறக்கம் | ஓய்வூக்கம் |
| பகை நீக்கம் | போரூக்கம்<br>ஒதுங்கூக்கம்<br>அருவருப்பூக்கம் |
| கலவி | காதலூக்கம் |
| முதன்மை | முதன்மையூக்கம் |
| ஆராய்வு | ஆராய்வூக்கம் |
| மகவுக்காப்பு | காப்பூக்கம் |
| கூடல் | கூட்டூக்கம் |
| பணிதல் | பணிவூக்கம் |
| துணைதேடல் | அரற்றாக்கம் |
| கட்டல் | கட்டூக்கம் |
| ஈட்டுதல் | ஈட்டூக்கம் |
| இடப்பெயர்ச்சி | இடமாற்றவூக்கம் |
| பின்பற்றல் | பின்பற்றாக்கம் |

இவ்வூக்கங்களுள் முக்கியமானவற்றை ஆராய்வாம்.

மனிதனுடைய வாழ்நாளிற் பெரும்பகுதி இல்வாழ்க்கையிற் கழிகின்றது. இல்வாழ்க்கைக்குக் காரணமான ஊக்கங்கள் காதலூக்கமுங் காப்பூக்கமுமாம். காதலூக்கத்தால் விவாகமும் மகப்பேறும் நிகழும். காப்பூக்கம் குடும்பப் பற்றுக்குக் காரணமாய்ப் பிற்சீவியம் முழுவதிலுந் தலையூக்கமாக விளங்கும்.

இவற்றுள், காதலூக்கம் பன்னிரண்டு வயதுவரையில் அரும்பி மறைவாக நின்று தொழில் செய்யும். இவ்வயதுக்கு முன் சிறுவர்களும் சிறுமிகளும் ஒருவரோடொருவர் ஒரு பேதமுமின்றி ஊடாடுவார்கள். இந்த வயதுவர, அவர்கள் தங்களையறியாமல் ஒருவரோடொருவர் மரியாதையாக நடக்கத் தொடங்குகிறார்கள். பதினைந்து வயதுக்கு முன்பின்னாக இவ்வூக்கம் வெளிப்படையாகத் தோன்றும். சூடான தேசங்களிலே இந்த வயதுக்கு முன்னும், குளிரான தேசங்களிலே இதற்குப் பின்னும் இது தோன்றுவதுண்டு. சரீர முயற்சி அதிகஞ் செய்தாலும் இது தோன்றும் வயது பின்னிடும். ஒரே தேசத்தில் ஒரேயளவு சரீரமுயற்சி செய்பவருள்ளும், அவரவர் சரீர இயற்கைக்கும் மனப்பான்மைக்குந் தக்கதாகவும் இது தோன்றுங்காலம் முற்படுதலும் பிற்படுதலுமுண்டு.

இவ்வயதிலே சரீர பலமும் வளர்ச்சியும் அதிகப்படும். ஆடவர்கள் எப்போதுஞ் சுறுசுறுப்பாயிருப்பார்கள். பெண்கள் ஒவ்வொரு மாதத்திலும் பாதிக் காலஞ் சுறுசுறுப்பாயும், பாதிக்காலம் ஓய்வாயும் இருப்பார்கள். இந்தக் காலத்திலே வரும் மேலதிகமான சரீர பலத்துக்குத்தக்க தொழில் இவர்களுக்குக் கிடைக்க வேண்டும். நன்முயற்சி போதிய அளவில்லாவிட்



டால் இந்த ஆற்றல் தீய வழியிலே செல்லும். இதையறிந்த பெற்றோரும் ஆசிரியர்களும் இவர்களுக்கு வேண்டிய அளவு வேலையைச் சரீர முயற்சியிலும் படிப்பிலும் கொடுக்கிறார்கள். வீட்டிலே போதிய சரீரமுயற்சியில்லாதவர்கள் பள்ளிக்கூடத்திலே வேண்டிய அளவு விளையாடுவார்கள். இவர்கள் படிக்கும் பாடங்கள் தொகையாலும் அளவாலுங் கூடியவைகள். சரீர பலம் அதிகப்படுதலினாலே, இவர்களுக்கு வீரச்செயல்களிலே விருப்பும் மதிப்பும் உண்டாகின்றன. சரீர முயற்சியிலே பற்றில்லாத இளைஞர்கள் அரசியல் வாதங்களில் ஈடுபட்டு, அவைவாயிலாகத் தங்கள் வீரத்தைக் காட்டுகிறார்கள். அவற்றிலும் மனஞ் செல்லாதவர்கள் சமய ஆராய்விலும் கடவுள் வழிபாட்டிலும் பற்று வைக்கிறார்கள். இந்தவயதிலே, ஒரு சமயத்தைவிட்டு வேறொரு சமயத்தைத் தழுவ மனம் ஏவுதலுண்டு. சிலருடைய மனம் தங்களை அழகாக்குவதிலே சென்று சிறந்த ஆடையாபரணங்களைத் தேடுவிக்கும்; அல்லது சிருங்கார ரசமுள்ள புத்தகங்களை வாசிக்க ஏவும். அறிவிற் குறைந்தவர்கள் காதல் வழியிலே மனத்தை விட்டு உலைவார்கள். வேறு சிலர் காதலூக்க வலிக்குறைவினாலேனும் பிற ஊக்கங்களின் வலியினாலேனும் இந்த வயதிலே ஒருவிதமான மாறுதலுமடையாமல் முன்போலவே அமைதியாய் வாழ்வார்கள்.

காதலூக்கம் விவாக வழியிலே செல்ல வேண்டுமென்பது திருத்தமான தேசங்களிலுள்ள ஒரு கட்டுப்பாடு. சில நாடுகளிலே இது கட்டளைச் சட்டமாய் இருக்கிறது. அந்த நாடுகளிலே ஒருவன் மனைவியல்லாதாளோடு கலத்தலும், ஒருத்தி கணவனல்லாதவனோடு கலத்தலுந் தண்டனைக்கிடமான குற்றங்களாகின்றன.

விவாக மென்னும் இந்தக் கட்டுப்பாடும் பிற தடைகளால் மேலுங் கட்டுப்படுகின்றது. ஒருவனுடைய மனசுக்கிசைந்த பெண்ணேனும் சுற்றத்தவருடைய சம்மதமேனும் குடும்பத்தை நடத்துதற்கு வேண்டிய பொருளேனும் இல்லாவிடத்து விவாகந் தடைபடுகின்றது. இப்படித் தடைபடும்போது, காதலூக்கங் குறைந்தவர்கள் இந்தச் சுமையில்லாமையே நல்லதென்று மகிழ்ந்து விவாகமின்றி வாழ்வர்; வேறு சிலர் மகிழ்ச்சியேனுந் துக்கமேனுமின்றி யிருப்பர்; இன்னுஞ் சிலர் துக்கம் வந்தாலும் அதைத் தாங்கிக்கொள்ளுவர்; ஒழிந்த சிலர் கவலையைத் தாங்கமாட்டாமல் மனம் புண்படுவர், அல்லது கட்டுப்பாட்டைக் கடந்து நடப்பர். விவேகிகள் காதலூக்கம் முனைக்குங்கால், அதன்வலியைக் கெடுத்தற்குக் கடினமான சரீரமுயற்சி செய்வர்; அல்லது இனிய பொழுது போக்குகளால் அதன் முனைப்பைத் தீர்ப்பர். விவாகமாய்விட்டால், இவ்வூக்கம் பலவாறாக மெலிவடையும். குடும்ப வாழ்க்கையிலே கணவனுக்கும் மனைவிக்கும் மெய்யன்புண்டாகுமானால், இவ்வூக்கம் தணியும். குழந்தைகள் பிறந்தால், அவர்களைக் காத்தலில் அவ்வூக்க வாற்றல் செல்லும். சீவனத்துக்குவேண்டிய பொருளீட்டுவதிலும் அதன் ஆற்றல் சென்று பயன்படும்.

### காப்பூக்கம்

காப்பூக்கம் பெண்களிலே சிறு வயதிலே தொழிற்படத்தொடங்குகின்றது. அப்போது, அவர்கள் பாவைப் பிள்ளைகளைத் தங்கள் பிள்ளைகள் போலப் பாவிக்கிறார்கள்; சற்றே வயதேற, பிறருடைய பிள்ளைகளைத் தூக்கி வைத்துப் பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள். வயது



போன கன்னியர்கள் குழந்தைகளிலேயன்றிப் பசுக்கன்று முதலியவற்றிலும் அன்பு பாராட்டுகிறார்கள்.

விவாகஞ் செய்தவர்கள் பிள்ளைப்பெற்றால், அவர்களுடைய இரத்தத்திலே ஒரு சத்து வந்து அவர்களுக்குப் பிள்ளையிலே விசேஷ பற்றை யுண்டாக்குகின்றது; இதைவிட, காப்பூக்கத்தினாலும் பற்றுண்டாகின்றது. பிதாவிலும் காப்பூக்கந் தொழிற்படும். இருவரும் கூடிக் குழந்தையை வளர்த்து வருவார்கள். குழந்தைகளுக்கு நோய் இடையிடையே வருதல் இயல்பாதலால், அதனாலே பெற்றோருக்குத் துன்பமும் அதற்குப் பரிகாரஞ் செய்தலிற் பெருஞ்சிரமமும் உண்டாகும். சிலகாலங்களிலே ஊணுறக்கமின்றி அவர்கள் வருந்தவும் நேரும். இவ்வகையான துன்பங்களை அவர்கள் தாங்கத் தக்கதாக இருத்தல் காப்பூக்கத்தின் வன்மையினாலாம்.

குழந்தைகள் தங்களுடைய தேவைகளை வெளியிடமாட்டாமல் வருந்துபவராதலால், அவ்வருத்தத்தைத் தீர்த்தற்கு அவர்கள் அன்பையும் ஆதரவையும் அதிகமாக வேண்டுவர். தாயினுடைய அருட்பார்வை அவர்களுடைய துன்பத்தை எளிதிலே தீர்க்கும். அவர்கள் மிக வருந்தி அழும்போது, தாய்மாருடைய முகத்தைக் கண்டவுடனே அழுகை தீருகின்றது. மற்றைய சுற்றத்தவர்கள் ஆயிரம்பேர் இருந்து கொண்டு ஒரு குழந்தையை எவ்வளவு அன்பாக வளர்த்து வந்தாலும், தாய் முகங்காணுதலாற் குழந்தைக்கு வரும் பூரிப்பு அவர்களால் வராது. அவர்களுக்கு வேண்டிய அன்பும் ஆறுதலும் கிடையாவிட்டால் அவர்களுடைய மனம் கன்றிவிடும். அதனாலே அவர்கள் பிற்காலத்திலே கல்மன முள்ளவர்களாகித் துட்டர்களாவார்கள். வேலைக்

காரரால் வளர்க்கப்படுங் குழந்தைகளுடைய கதி இதுவாம்.

பெற்றோர் பிள்ளைகளை வளர்க்கும்போது, அநேக அரிய நற்பழக்கங்களைப் பழகி நற்குணமுடையோராகின்றனர். பொறுமையும், சிரமத்தில் விருப்பும், துன்பத்தைச் சகிக்கும் வன்மையும், மற்றவர்களுக்காகத் தம்மை ஒறுக்குஞ் சீலமும் பிள்ளைகளை வளர்த்தலாலுண்டாகும். இவர்கள் மற்றவர்களோடு கூடி வாழும்போது, அவர்களோடு இனிமையாய் நடந்துகொள்ளுதற்கு இப்பயிற்சிகள் பெருந் துணையாகின்றன. இவ்வரிய தன்மைகள் இல்வாழ்க்கையாற் பெறப்படுதல் "இல்லறமல்லது நல்லறமன்று" என்பதை வற்புறுத்துகின்றது. பிள்ளைப் பெறாதார் பாவிகள் என்ற கருத்தும் இதனாலுண்டாயது போலும்.

பெற்றோர் பிள்ளைகளைத் தங்களோடு வைத்துக் காப்பாற்றிவருங் கால எல்லை அவரவர் நிலைக்குத் தக்கதாய் வேறுபடும். கல்விசெல்வங்களாற் கூடியவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு நெடுங்காலம் கல்வி கற்பித்துப் பாதுகாத்து வருகிறார்கள். இதனாலே, அக்குழந்தைகள் நயப்படுவதோடு தேசமும் கல்வியேற்றத்தினாலே திருந்தும். அவ்வளவு இயல்பில்லாதவர்கள் மட்டாகக் கல்வி கற்பித்து, அதன்மேற் பிள்ளைகளைப் பொருள்சம்பாதிக்க விடுகிறார்கள். முட்டுப்பட்டவர்கள் சிறுவயதிலே குழந்தைகளைக் கூலிவேலைக்கு விடுகிறார்கள். பிள்ளைகள் பொருள்சம்பாதிக்கத் தொடங்கிய பின்பும் பெற்றோர் அவர்களிலே பற்றுடையராகவே யிருக்கிறார்கள். அவர்களுக்கும் பிள்ளைகளுக்கும் பிணக்குண்டாகிற காலத்திலே மகவூக்கம் மறைந்துநின்று தொழில் செய்யும்.



## கூட்டூக்கம்

இந்த இரண்டு ஊக்கங்களின் பின் ஆராயத்தக்கது கூட்டூக்கம். மனிதன் மற்றெல்லாப் பிராணிகளைப் பார்க்கிலும் அதிகமாகக் கூட்டவாழ்க்கையை வேண்டி நிற்கிறான். அவனுடைய கூட்டம் காலத்துக்குக் காலம் விசாலித்துக் கொண்டுவருகின்றது. ஒரு குழந்தை முதலிலே தன் தாய் தந்தையரோடும் ஏனைய சுற்றத்தாரோடும் வாழ்கின்றான். அதன்பின்னர் அவர்களோடும், ஆசிரியர் உடன்மாணாக்கர் முதலாயினாரோடுங் கூடி வாழ்கின்றான். அந்தக் குழந்தை வளர்ந்து குமாரப் பருவமடைந்து சீவனத்துக்காகத் தொழில் செய்யும்போது, அத்தொழிலிலே தொடர்புடையவர்களோடு கூடுகிறான். அவன் விவாகஞ் செய்தபின் மனைவியோடும் அவளுடைய சுற்றத்தவரோடும் பிறரோடும் ஊடாடுகிறான். ஆகவே சிசுப்பருவம் தொடங்கி முதுமைப் பருவம் வரையும் மனிதவாழ்க்கை கூட்ட வாழ்க்கையாகவே இருக்கின்றது. இதனாலே தனியே யிருத்தல் ஒரு துன்பமாகித் தனி வாழ்க்கையாகிய சிறைவாசம் தண்டனையாயது.

கீழ்ப் பிராணிகளுட் சிற்சில இனங்கள் ஒவ்வொரு காரணத்தினாலே கூட்ட வாழ்க்கையைத் தேடுகின்றன. இரையாகும் விலங்குகளாகிய பசு, மான், மரை முதலியவைகள் தங்களைப் பிடித்துத் தின்னவரும் மிருகங்களிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளுதற்காகக் கூட்டமாக வாழும்.

வேட்டையாடும் மிருகங்களாகிய நாய் முதலியவை தங்களுக்கு இரையாக வேண்டிய மிருகங்களை வளைத்துப் பிடித்தற்காகக் கூடுகின்றன.

தேனீ எறும்பு முதலியவை தங்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய வேலைகளைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுச் செய்தற்காக ஒருமித்து வாழுகின்றன.

குரங்குகள் சந்தோஷங் கொண்டாடும் பொருட்டுக் கூட்டங் கூட்டமாகச் சேருகின்றன.

மனிதர் இந்நால்வகை நோக்கங்களையுங் கொண்டு கூட்டவாழ்க்கையை விரும்புகின்றனர். காட்டு மிருகங்களாலும் அவைகளைப் போன்ற மனிதராலும் இடர்ப்படாமைக்காக அவர்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் கூடி வாழ்கின்றனர். "அயலோ தாயோ" என்ற பழமொழிப்படி, அயலிலுள்ளவர்கள் தாய் பிள்ளைகள் போல ஒருவருக்கொருவர் துணையாயிருக்கிறார்கள். தொழிலாளிகள் முதலாளிமாருடைய அக்கிரமத்தைத் தடுத்தற்காகச் சங்கங்களாகக் கூடி ஒத்து வேலை செய்கின்றனர்.

வேட்டைநாய்கள் தம்மிலும் வலி குறைந்த மிருகங்களைக் கொன்று தின்னுதற்குக் கூடுவதுபோல, பிறர் பொருளை அபகரிப்போர் கொள்ளைக் கூட்டங்களாகச் சேருகின்றனர். வல்லரசுகள் சிற்றரசுகளைப் பிடித்து ஆளுகின்றன.

தொழிற்சாலைகளி லுள்ளவர்கள் தேனீக்களைப் போல அங்குள்ள தொழிலைப் பிரித்து நிறைவேற்றுகின்றனர். நாடுகளிலுள்ளவர்கள் வகுப்பு வகுப்பாகப் பிரிந்து ஒவ்வொரு தொழிலைச் செய்து ஒருவருக்கொருவர் துணையாகின்றனர்.

சந்தோஷம் கொண்டாடுதற்காக, விவாகம் புத்திரப்பேறு கிருகப்பிரவேசம் முதலிய மங்கல காலங்களிலே, பெருந்தொகையானவர்கள் கூடி இன்புறுகின்றனர். சிலர் நித்திய கொண்டாட்டத்துக்காகச் சங்கங்களை நிறுவிப் பந்தடித்தல் தர்க்கஞ் செய்தல் கீத நடனம் பயிலல் முதலிய வழிகளிலே பொழுதுபோக்கிக் களிக்கின்றனர்.

இந்நால்வகைக் கூட்டங்களுள் முதலாவதில் ஒதுங்கூக்கமும் இரண்டாவதில் முதன்மை யூக்கமும் கூட்டூக்கத்தோடு சேருகின்றன.



### பின்பற்றூக்கம்

கூட்ட வாழ்க்கையிலே அதிகமாகத் தொழிற்படும் ஊக்கம் பின்பற்றூக்கமாம். சார்ந்ததன் வண்ணமாதல் மனிதனுடைய இயல்பு. ஆதலால் பின்பற்றல் கூட்டத்திலே அதிகமாய் நிகழும். கூட்டத்துள்ளுஞ் சற்றே நீடித்த சகவாசம் அழுத்தமான பின்பற்றலுக்குக் காரணமாகும்.

இவ்வூக்கம் பொதுத்தன்மையாயுள்ளது. உணவூக்கம் உணவைத் தேடுதற்கும், ஒதுங்கூக்கம் தப்புதற்கும், கட்டூக்கம் கட்டுதற்கும் ஏவுவனவாம். பின்பற்றூக்கம், உணவு தேடலாயினும் தப்பியோடலாயினும் கட்டலாயினும் மற்றெவ்வகைத் தொழிலாயினும் முன்னறியாததாயின், அதைப் பிறர் செய்யும்போது பார்த்துச் செய்யுமாறு ஏவும்.

பின்பற்றலின் சிறப்பியல்பு ஆராய்வின்மை. ஆராய்வினாலே காரிய காரணத் தொடர்பை யறிந்து செய்யுந் தொழில் பின்பற்றலன்று. ஒருவர் வேறொருவரைக்காணும்போது கைகூப்ப, அதைக்கண்ட பிறனொருவன் அதன் நோக்கத்தையறியாமல் தானுங் கை

கூப்புவானாயின், அது பின்பற்றலாகும். அதன் நோக்கத்தையறிந்து செய்வானாயின், அது ஆராய்வுத் தொழிலாகும். பின்பற்றல் ஆராய்வுத்தொழிலன்றாயினும், முன் ஆராய்ந்தறிந்தவற்றோடு முரணுவதை ஒருவன் இலகுவிலே பின்பற்றமாட்டான்.

வாக்கினாலுங் காயத்தினாலும் பின்பற்றுந் தன்மை மனிதனில் அதிகமாக உள்ளது; அதிகம் பயனையுங் கொடுப்பது. இவ்வகைப் பின்பற்றல் பார்த்தொழுகல் எனப்படும். சிறு குழந்தைகள் பேசப் பழகுதலும் முதிர்ந்தோர் பிற சாதியாரோடு வாழ்ந்து அவர்களுடைய பாஷையைப் பேசப் பழகுதலும் பின்பற்றலேயாம். குழந்தைகளுடைய ஆராயும்வன்மை அற்பமாதலால், அவர்களுடைய செயல்கள் யாவும் பின்பற்றலின் துணைகொண்டே கற்கப்படல் வேண்டும். வளர்ந்தவர்களுள் அறிவிற் குறைந்தவர்கள் தத்தந் தொழில்களைப் பழகுதலும், ஊர்வழக்கங்கள் நிலைத்தலும், உடை நடை பாவனைகள் பரம்புதலும் பின்பற்றலால் நிகழ்கின்றன. "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்பதும் "தீயாரைக் காண்பதுவுந் தீதே" என்பதும் எங்களிடத்துள்ள பார்த்தொழுகுந் தன்மையின் பலத்தைக் காட்டுகின்றன. கள்ளுண்பவன் கள் தீயதென்று கண்டு அதை விடுதற்குத் தானாகப் பெருமுயற்சி செய்வானாயினும், அதை அவன் கைவிடுதல் கஷ்டமாகும்; கள்ளுண்ணாதவர்களாகிய பெரியோருடன் கூடுவானாயின், அவர்கள் கள்ளை அருவருத்தலைக் கண்டு அவர்களிலே கொண்ட மதிப்பினாற் பின்பற்றி அருவருக்கத் தொடங்குவான்; பின்பு, அவர்கள்போல மதுபானமின்றி வாழ்வான்.



ஆரம்பக் கல்விக்கு அடிப்படையாயுள்ளதும் பார்த்தொழுகுதலாம். கல்வியின்பொருட்டுப் பார்த்தொழுகும்போது, சிரமமும் மிகுந்த அவதானமும் வேண்டும். சிறுவர்கள் எழுத்துக்களைக் கற்கும்போது, லகர ழகர ளகரங்களின் பேதத்தை நன்குணரல் அவசியம். ஆசிரியர் இவைகளை உச்சரித்துக் காட்டுவதோடு உச்சரிக்குங்கால் நாக்கு நிற்கும் நிலையையும் விளக்க வேண்டும். அப்பொழுது பார்த்தொழுகுதல் ஆராய்வோடு சேர்ந்து பலமடையும்; எழுத்துக்களை எழுதும்போதும் படங்களை வரையும் போதும் பார்த்தொழுகலோடு விளக்கம் சேர்ந்தாற் பயிற்சி விரைவிற் கைவரும்.

ஆடல் பாடல் முதலியவற்றையும் கைத்தொழில்களையும் கற்றற்கு மிகுந்த சிரமமும் அவதானமும் வேண்டும். அத்துணை அவதானம் வருதற்கு அவற்றிலே போதிய பற்று இருத்தல் வேண்டும். அவற்றிலே பற்றில்லையாயின் அவற்றினால் வரும் பயனிலாயினும் அவற்றைப் பயிற்றும் ஆசிரியரிலாயினும் பற்றிருத்தல் வேண்டும்.

பின்பற்றல் காயத்தொழில்களோடு நில்லாது சுவை இச்சை அறிவு ஆகியவற்றிலுஞ் செல்லும். ஒரு கலியாண வீட்டுக்குப் போகிறவன் அங்குள்ளவர்களுடைய களிப்பைக் காண்பான். அவர்களுடைய களிப்பைக் கண்ணுற, களிப்பான சொற்கள் காதிலேற, அந்தக்காட்சியுங் கேள்வியும் அவற்றுக்குக் காரணமான களிப்பை அவனில் உண்டாக்கிவிடும். இது தீபனப்பிரதியாக வருவது*. ஒருவன் இழவுவீட்டுக்குப் போய்ப் பிணம் கிடக்குமிடத்திலே நின்றானாயின், அதைச் சூழ்ந்திருக்குஞ் சுற்றத்தவ

*தீபனப்பிரதியின் இலக்கணத்தை ஐந்தாம் அதிகாரத்திற் காண்க.

ருடைய துக்கக் குறிகளையுஞ் செயல்களையுங் காணும் போதும் அவர்களுடைய சொற்களைக் கேட்கும்போதும் அவனுடைய மனந்தளர்ந்து அவனுக்குத் துக்கமுண்டாகும். விவாகக் கொண்டாட்டங்களையும் மரணவியாகுலங்களையும் கூறும் புத்தகங்களை வாசிக்கும்போதும், அவற்றை நடிக்கும் நாடகங்களைப் பார்க்கும் போதும், இச்சுவைகள் உண்டாகும். களிப்பும் துக்கமுமேயன்றி ஏனைய சுவைகளும் கூட்டத்திலே தோற்றுகின்றன. பயந்தவனோடு கூடுகிறவனுக்குப் பயமும், தைரியசாலியோடு கூடுகிறவனுக்குத் தைரியமும், இரக்கமுள்ளவனோடு கூடுகிறவனுக்கு இரக்கமும், வன்கண்ணனோடு கூடுகிறவனுக்கு வன்கண்மையு முண்டாகின்றன. இவ்வகையான பின்பற்றல் சகவேதனை அல்லது சகரசம் எனப்படும்.

பின்பற்றலின் மிக அகலமான பாகம் பிறர் சொல்லுவதை ஏற்றுக்கொள்ளுதல். இது நம்பிக்கை யெனப்படும். நம்பிக்கையின் எல்லை முன்னறிவுக்கு மாறுபடாமை. குழந்தைகளுக்கு முன்னறிவு சிறிதாதலால், அவர்கள் பெரும் பொய்களையும் எளிதிலே நம்புவார்கள். ஒரு மாதுளம் முத்தை விழுங்கிவிட்டால், அது வயிற்றிலே முளைத்து மரமாகும் என்பதை நம்புவார்கள்; ஆயினும் பால் கசக்கும் என்பதையும் நெருப்புக் குளிரும் என்பதையும் நம்பார்கள். அறிவிற் குறைந்த முதியோர் பேய் அடித்தலினாலே அம்மை நோயுண்டாகும் என்பதையும் முகில்கள் கடலிலே தண்ணீர் குடித்து மழையைப் பெய்யும் என்பதையும் நம்புவார்கள்; மாதுளம் வித்து வயிற்றிலே முளைக்குமென்பதை நம்பார்கள். இவர்களினுஞ் சற்றே அறிவு கூடியவர்கள் இவற்றை நம்பாமல், கார்த்தவராயருக்கு ஆடு நேர்ந்தால் வியாதி தீரும்



என்றும், சாராயம் முதலிய குடிவகைகள் சரீரபலத்தை ஏற்றும் என்றும் நம்புவர். இப்படியே, ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கு விரோதமல்லாதவற்றைமாத்திரம் நம்புவர். "பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லு" என்னும் பழமொழியிலே பொருந்தச் சொல்லுதலாவது கேட்போருடைய முன்னறிவுக்குப் பொருந்துதலாம். "சொல்லுவார் சொன்னாலுங் கேட்பாருக்குமதியென்ன" என்ற பழமொழியும் இதையே குறிக்கின்றது.

பொருத்தமான பொய்களும் எல்லையில்லாமல்வரும். இவற்றை ஆராய்வினாற் கண்டு நம்பாது விடுதல் அவசியம். உலக அநுபவம் குறைந்தவர்களும் சொல்லுவோருடைய குணங்குறிகளை அறியமாட்டாதவர்களும் நுண்ணறிவில்லாதவர்களும் பொய்களை எளிதில் நம்புவார்கள்; ஏனையோர் எளிதில் நம்பார். அன்பும், மதிப்பும், விருப்பும் ஆராய்வின்றி நம்புதற்குக் காரணமானவை. நண்பர் ஆசிரியர் முதலியோரது சொல்லும், ஒருவருடைய விருப்பத்துக்குச் சார்பான சொல்லும் இலகுவாய் மனதில் ஏறும். அச்சுப் புத்தகங்களிலும் புதினப்பத்திரிகைகளிலும் பெரும்பாலார்க்கு மதிப்புண்டு. அடிக்கடி காணும் விளம்பரங்களும் பலராற் பலமுறை சொல்லப்படுவனவும், எவ்வளவு தவறுயிருப்பினும், எளிதில் நம்பப்படுகின்றன.

இவைகளேயன்றி யாவரும் மெய்யறிவென்று கொள்ளுவதன் பெரும்பாகமும் நம்பிக்கைக்குட்பட்டதாயே இருக்கிறது. நமது சமயக் கொள்கைகளும் அநுட்டானங்களும் அறநெறிகளும் தேசாசாரங்களும் பெரும்பாலும் நம்பிக்கைக்கு உட்பட்டவைகளேயாம். நாங்கள் கற்கும் பூமிசாத்திரம் சரித்திரம் வானசாத்திரம்

முதலிய நூல்களிலுள்ளவைகள், நாம் நேரே அறியமாட்டாதவைகளாதலால், நம்பவேண்டியவைகளாயிருக்கின்றன*. இரசாயனசாத்திரம் பௌதிகசாத்திரம் முதலியவற்றிலுள்ளவைகள் பெரும்பாலும் அநுபவசாட்சிக்குட்பட்டவைகளாயினும், அவைகள் ஒவ்வொன்றையும் பரீட்சித்தறிதற்குக் காலம் இடங்கொடாது. பேரறிஞர்களுள், ஒருவர் செய்த பரீட்சைகளின் முடிபை மற்றவர்கள் நம்பி ஆண்டு வருகிறார்கள். இவற்றை நம்பாமல், ஒவ்வொருவரும் தாம் தாம் அநுபவத்தாற்கண்டதையும் அதிலிருந்து கருதியதையும் மாத்திரம் மெய்யென்று கொள்ளுவதானால் அறிவு வளர்ச்சி குன்றும். ஆதலால், நம்பிக்கை எமது நல்வாழ்வுக்கு இன்றியமையாதது. ஆயினும், எம்மாலியன்ற அளவு ஆராய்வு செய்து அவற்றைத் தெளிதலே எமது கடன். இல்லையாயின் "கேள்விச் செவியன் ஊரைக்கெடுத்தான்" என்னும் பழமொழிக்கு இலக்காதலும் நேரும்.

நம்பிக்கையினாலே பெரும் நன்மைகளும் பெருந்தீமைகளும் வருதலுண்டு. ஓர் ஆசிரியர் சற்றே திருந்திவருகிற மாணாக்கனைப்பார்த்து, "நீ இப்போது 'கவனமாய்'ப்படிக்கிறாய். இப்படிப் படித்து வருவாயானால் நீ மிகவும் நயந்துவிடுவாய்" என்று இடைக்கிடை சொல்லிவருவாராயின், மாணாக்கன் அதைநம்பி உற்சாகப்பட்டுக் கல்வியிலே பற்றுவைத்து வல்லவனாவான். வைத்தியன் நோயாளியைப் பார்த்து "இது ஓர் அற்பநோய், விரைவில் மாறிவிடும்" என்று சொன்னால் அந்தச் சொல்லிலே கொண்ட நம்பிக்கையினாலே மனம் திடப்பட்டு உடம்பிலே கிளர்ச்சி யுண்டாக வியாதி விரைவிலே தீர்ந்துபோம்.

* விளக்கத்தக்கவற்றையும் சில ஆசிரியர்கள் நம்பிக்கையின்பாற்படுத்தி மாணாக்கரது அறிவுத்தெளிவைக் கெடுக்கின்றனர். பங்கயம் என்பதன் பொருள் தாமரை என்று நம்பச்செய்கின்றனர்; அதைப் பிரித்துப் பொருளைக் காட்டுகின்றிலர். காரணகாரியத் தொடர்பை விளக்கி நம்பிக்கையாயிருந்ததைத் தெளிவாக்க முயலுதல் ஆசிரியர் கடனாகும்.



இப்படியின்றி ஆசிரியர் மாணாக்கனைப் பார்த்து "உனக்குப் படிப்பு வராது, வீண்பாடுபடாதே" என்று சொன்னால், அவன் அதை நம்பிப் படிப்பைக் கைவிடுவான். வைத்தியன் நோயாளியைப் பார்த்து "இது கொடியநோய், இது மாறமாட்டாது" என்று சொன்னால் நோயாளியுடைய மனம் தளர்ந்து உடற்கருவிகள் சோரும்; இதனால் வியாதி ஏறும்.

## வினாக்கள்

௧. தேவைகளுக்கு மூலமானவை எவை?
௨. சரீரச் சத்துக்களாற் கூடும் ஊக்கங்கள் எவை (௩)?
௩. எந்தக்காலத்திலே பிள்ளைகளுக்கு வேலை அதிகமய்யா இடுதல் வேண்டும்?
௪. கூட்டுக்கம் எக்காரணங்களால் விசேஷமாகத்தொழிற்படும் (௪)?
௫. பின்பற்றலின் சிறப்பியல்புயாது? அதன் வகைகள் எவை (௩)?
௬. நம்பிக்கையின் இலக்கணம் யாது?
௭. பின்பற்றலாற் கல்விக்கு வரும் நயாட்டங்கள் எவை?

# நான்காம் அதிகாரம்

## பற்றுகள்

பற்றுக்களின் ஆக்கம்—பொருட்பற்று—கல்விப்பற்று—கலப்புப் பற்று—தற்பற்று—அறப்பற்று—பற்றுக்களின் முரண்.

### பற்றுக்களின் ஆக்கம்

ஒரு தேவை ஓரினத்துப் பொருள்கள் யாவற்றிலுஞ் செல்லுதலோடு அவற்றுட் சிலவற்றிலே உறைத்து நின்று பற்றுகளாகுமென்று இரண்டாம் அதிகாரத்திற் கூறப்பட்டது. தேவைகள் எவ்வாறு தனிப்பொருள்களில் நிலைக்கின்றன என்பதும், அவைகள் அவ்வாறு நிலைக்கும்போது உடனிகழ்வன எவை யென்பதும் இவ்வதிகாரத்தில் ஆராயப்படும்.

பற்றுகள் உண்டாகும் வகையைச் சில உதாரணங்களால் விளக்குவாம்.

பற்றுக்களுள் நட்பும் பகையும்* யாவரும் நன்கறிந்தவை. இவைகள் பள்ளிக்கூட மாணாக்கருக்குள் உண்டாகும் வழியை ஆராய்வாம். பள்ளிக்கூடத்துக்குப் போகும் ஒரு பையன் முதலிலே தன் வகுப்புப் பிள்ளைகளோடு கூடுகிறான். அவர்களுள்ளும் எவன் ஒத்த குணமுடையவனாய் இருக்கிறானோ அவனோடு இவன் அதிகமாகக் கூடுகிறான். ஒத்த குணமுடைமையால், அவனுடைய பேச்சுங் கருத்துஞ் செயலும் இவனுக்கு இனிமையா யிருக்கும். இதனாலே ஒருவனை ஒருவன் காணுதற்குத் தாகங்கொள்ளுவான். பின்பு அவர்கள் சந்திக்கும்போது தாகம் நீங்கிப் பெருமகிழ்ச்சி யடைந்து இன்புறுவார்கள்.

இப்படிச் சில காலஞ்செல்ல, இவர்களிடத்தே நட்பு என்னும் பற்று உண்டாகும். கூட்டத் தேவை உறைப்பாய் நிலைத்தலால், நட்பு உண்டாகின்றது. எவர்களிலும் செல்லும் இயல்புடையதாகிய கூட்டத்தேவை ஒருவனிலே நிலைத்தலாலே, இது பற்று எனப்படுகின்றது. இவர்கள் பிரிந்திருக்கும்போது தோன்றுந் தனிமைச் சுவை* இப்பற்றுக்குத் துணைக்காரணமாகும்.

இந்தப் பற்றினாலே ஒருவனுடைய நய நட்டங்களை மற்றவன் தனக்கு வந்தவைகளாகப் பாவித்து வருவான். அவனுக்கு இடர் வரும்போது, இவன் அவனைக் காக்க முயலுவான். அவனோடு யாராவது சண்டைக்குப் போனால், இவன் அவனுக்குத் துணையாகச் சண்டைக்குப் போவான். அவன் வெறுப்பவர்களை இவனும் வெறுப்பான். அவன் நேசிக்கிறவர்களை இவனும் நேசிப்பான்.

இனி அந்த வகுப்பிலுள்ள வேறொருவனுடைய பேச்சும் நடையும் இவனுக்கு அருவருப்பாயிருக்கும். அவனுடைய செயல்கள் இவனுக்கு ஒவ்வாமையினாலே அவைகளைக் காணக்காண இவனுக்கு அவனிலே வெறுப்புண்டாகும். இந்த வெறுப்பு முற்றிவர, ஒருவரை

* மனம் எந்தப் பொருளைப் பற்றுகின்றதோ அது பற்றுப்பொருளாகும். மனம் நண்பனிலே செல்வதுடன் நில்லாது பகைவனிலுஞ் செல்லுமாதலால், விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டும் பற்றுக்களாம். கடவுளைப் பற்றற்றான் என்னு மிடத்துப் பற்று என்னுஞ் சொல் இவ்விரண்டினையுங் குறித்தலைக் காண்க.

* தனிமைச் சுவையாவது ஒருவன் தனிமையாயிருக்கும்போது யாரோடாவது கூடவேண்டுமென்ற விருப்பத்தோடு உண்டாகுஞ் சுவை.

யொருவர் வையவும் நேரும். இதனாலே கோபச்சுவை அடிக்கடி நிகழும். இப்படி நடந்துவர, அவர்களுக்கிடையிலே பகை யுண்டாகும். ஆகவே, இவன் அருவருக்க வேண்டிய எப்பொருளினுஞ் செல்வதாகிய அருவருப்பு அவனிலே விசேஷமாக நிலைத்துப் பகையாகின்றது.

இவ்வுதாரணங்களிலிருந்து பல பொருள்களிற் செல்லும் ஊக்கம் ஒரு பொருளில் விசேஷமாகத் தொழிற்பட்டு நிலைத்தலாலே, பற்று உண்டாகிற தென்பது பெறப்படுகின்றது. ஊக்கம் பல பொருள்களிற் செல்லுதலாலும், பற்று ஒரு பொருளில்மாத்திரஞ் செல்லுதலாலும், ஒரு பொருளிற் செல்லும் பற்று அப்பொருளிற் செல்லும் ஊக்கத்திலும் வலிமையாற் கூடியதாயிருக்கும். பற்றின் வலிமைக்கு வேறொரு காரணம் அது உண்டாகும்போது உடனிகழ்வதாகிய சுவை. நண்பனைச் சந்திக்கத் தேவைப்படும் போதெல்லாம், தனிமைச்சுவை நிகழும். அவனைச் சந்திக்கும்போது அத்தாகம் நீங்கிக் கூட்டச் சுவை யுண்டாகும். பகைவனைச் சந்திக்கும் போது கோபச்சுவை யுண்டாகும். சுவைகள் மனத்தை அதிகமாய்த் தாக்குதலினாலே, அவை சேர்ந்து வரும் பற்றுகள் மனத்திலே வலிகூர்ந்து நிற்கும். அன்றியும், ஒரு பற்றினோடு பல ஊக்கங்கள் சேர்ந்து தொழிற்படும். நண்பனிலே கொண்ட பற்று காப்பூக்கத்தைச் செலுத்தி அவனை இடர்களிலிருந்து காக்குமாறு ஏவும்; போரூக்கத்தை ஏவி அவனோடு போர் செய்பவரோடு போர் செய்விக்கும்; அருவருப்பூக்கத்தை ஏவி அவன் அருவருப்பவற்றை அருவருக்கச் செய்யும்.

பற்றுக்களோடு அவ்வப் பற்றுக்களுக்குரிய சுவையேயன்றிப் பிறசுவைகளும் விரவும். பற்றுள்ளவர்கள்





பிழை செய்யில், சில சமயங்களிலே கோபமும், வேறு சமயங்களிலே துக்கமும், அவர்களுக்கு நயம் வரில் மகிழ்ச்சியும், இடர் வரில் இரக்கமும், அது தீரும் வரையும் துக்கமும் நிகழும்.

ஆகவே, பற்றானது ஓர் ஊக்கத்தின் தொழிலினால் இடையிட்டுத் தோன்றி, உடனிகழுஞ் சுவையினால் வன்மையேறி, பிற ஊக்கங்களின் துணையைப் பெற்று, பிற சுவைகளும் நிகழ்தற் கிடமாகின்றது.

சுவையின்றி வரும் பற்று அற்ப வலியுடையதாய், பிற ஊக்கங்களைத் துணைகொள்ளமாட்டாததாய், நிலையற்றதாய் இருக்கும். கடவுளை வழிபடும்போது பத்திச் சுவை தோன்றாதாயின், அவ்வழிபாட்டிலிருந்துவரும் கடவுட்பற்று வலியற்றதாயிருக்கும். வியப்பு முதலிய மென்சுவைகளினால் வரும் பற்றுக்களின் வலியும் அற்பமானது. ஒருவரைக் கல்விமான் அல்லது நல்லொழுக்கமுடையவரென்று கண்டு அவரிலே கொள்ளும் மதிப்பினால் மாத்திரம் ஒருவன் பற்று வைத்தால், அந்தப் பற்று வலிகுறைந்ததாயிருக்கும். அவருக்கு யாதாயினும் இடர் வரும்போது அவன் அதைத் தீர்க்க முயலுவானாயின், அம்முயற்சிக்குச் சிறு தடைகள் வந்தால், அத்தடைகளை நீக்க முயலுதற்கு மனம் செல்லாமலும் விடும். அவர் இவனுக்கு ஏதாயினும் உபகாரஞ் செய்தலினாலே உண்டான பற்றாயின், அது நன்றிச் சுவையோடு கூடியதாதலால் வலியதா யிருக்கும். இவனுக்கு உபகாரஞ் செய்யாவிட்டாலும், இவனுடைய தேசத்தவர்களுக்கு அல்லது சாதியாருக்குப் பேருபகாரஞ் செய்து வந்த ஒருவரிலுள்ள பற்று சிலரில் இன்னும் வலி கூடியதாயிருக்கும்.

சுவைவன்மையைப் பெற்ற பற்று நெடுநாளைக்கு நிலைக்கும். சுவைகளுக்கும் பற்றுக்களுக்குமுள்ள ஒரு வேற்றுமை பற்றுக்கள் நிலைத்தலும் சுவைகள் நேரத்துக்கு நேரம் தோன்றி மறைதலுமாம்.

மட்டான வலியுடைய பற்று நெடுநாளாகத்தொழிற் படாதிருப்பின், அது வலிகுறைந்து காலகதியில் மறைந்துவிடும். புலாலுண்போரும் கட்குடிப்போரும் அவற்றை யுண்ணுதாரோடு நெடுங்காலம் வசித்தலினுலே அவற்றிலுள்ள பற்றைக் கைவிட்டு அவற்றை மறந்து விடுகிறுர்கள். பற்று வலிதாயின், அது தொழிற்படாத காலமெல்லாம் வலியேறியேறிச் சந்தர்ப்பம் வாய்க்குங்கால் மிதமிஞ்சித் தொழில் செய்யும். உற்ற சிநேகிதர்கள் ஒருவரை யொருவர் நெடுநாட் காணுமலிருந்து காணும்போது, அவர்களுடைய அன்பும் இன்பும்பொங்கி வழிகின்றன.

## குழுஉப்பற்று

ஒரு மனிதனிலே பற்றுண்டாவதுபோல, ஒரு குழூஉவிலும் பற்றுண்டாகும். ஒரு குழூஉவினருடைய கொள்கைகள் அல்லது முயற்சிகள் ஒருவனுக்குப் பிரீதியானவைகளாயின், அக்குழூஉவிலே அவனுக்குப் பற்றுண்டாகும். ஓர் ஊரிலே அரசியற் கட்சிகள் இரண்டிருந்தால், ஒருவன் தன் கருத்துக்கிசைந்த கட்சியிலே பற்றுவைத்து அக்கட்சிக்குத் துணைசெய்வான். தொழிலாளிகள் தொழிலாளர் சங்கத்திலும், முதலாளிகள் முதலாளிமார் சங்கத்திலும் பற்றுவைப்பர். இரக்கமுள்ளவன் தேச சேவைச் சங்கத்திலும், கல்விப்பற்றுள்ளவன் பள்ளிக்கூடங்களிலும் கல்விச்சங்கங்களிலும் பற்று வைப்பான்.



## பொருட்பற்று

பற்று மனிதனிலேயன்றிப் பொருள்களிலும் உண்டாகும். ஒருவர் நெடுங்காலமாகப் பாராயணஞ் செய்து வந்த தோத்திரப் புத்தகம் ஒன்று சில ஒற்றைகள் தவறியும் வேறு சில மடிந்து பழுதுபட்டுமிருந்தாலும், அதைக் கைவிட்டுப் புதுப்புத்தகம் வாங்க அவருக்கு மனம் வராது. ஏனெனில், அந்தப் புத்தகத்தை யெடுக்கும்போதெல்லாம் கடவுளிலே கொண்ட பத்திச்சுவை தோன்றிவர அதனுலே அந்தப் புத்தகத்திலே அவருக்குப் பற்றுண்டானமையினுலாம். ஓர் அரிய நண்பன் அதைக் கேட்டாலும் அவர் அதைக் கைவிடார். இப்படியே, நாங்கள் நெடுங்காலம் உபயோகித்துவந்த பொருள்களிலும் குடியிருந்த வீடு முதலியவற்றிலும் பற்றுண்டாகின்றது.

ஒருவர்மீது வைத்த பற்று அவரைச் சேர்ந்தவர்களிலும் அவருடைய பொருள்களிலும் பிறகாரண மின்றிச் செல்லும். ஒரு நண்பனிலுள்ள பற்று அவனுடைய தாய் தந்தையரிடத்துஞ் செல்லும். அவனுடைய பகைவர்களுக்கு இவனும் பகைவனுவான். ஒரு பகைவனிலுள்ள வெறுப்பு அவனுடைய சுற்றமித்திரர்களிலுஞ் செல்லும். பிதாவிலுள்ள பற்றுனது அவர் உபயோகித்த எழுத்தாணி, கண்ணுடி, மிதிதடி முதலிய பொருள்களிற்சென்று அவைகளைப் பெருமைபாராட்டிச் சாவதானமாக வைத்தற்கு ஏதுவாகும். தொடர்பினுல் வரும் இவ்வகைப் பற்றுகள்வலி குறைந்தவை. இப்படியான பற்றுக்களிற் சில எங்களை யறியாமலே எங்களிடத்திருக்கும். பற்றுப் பொருள்களுக்கு இடர்வரும்போது அந்தப்பற்று வெளியாகத் தோன்றும். என்னுடைய நண்பனுடைய நண்ப

னோடு நான் ஒருகாலமும் உரையாடாமலிருந்தாலும், அவனை யாராவது இகழ்ந்தால் எனக்குக் கோபமுண்டாகும். இதனால் அவனில்வைத்த பற்றை நான் அறியலாகும்.

## கல்விப்பற்று

கல்விப்பற்று ஆராய்வூக்கத்தின் தொழிற்பாட்டினால் உண்டாவது. புதிதாகக்காணும் ஒன்றை ஆராயும் ஆசை இவ்வூக்கத்தால் வருவது. கல்வியாற் பெறப்படும் அறிவு புதியதாதலால், கல்விப்பற்றை உண்டாக்குதற்கு ஆராய்வூக்கம் ஒன்றேபோதியது. ஆசிரியர் மாணாக்கரது ஆராய்வூக்கத்தை எழுப்பிவிடுவரானால், மாணாக்கர் கல்வி கற்க ஆசைப்படுவர். அவர்களிடத்தே அந்த ஆசை உண்டானதும், அவர்களுடைய ஆற்றலுக்குத்தக்க வேலையை அவர்களுக்குக்கொடுத்துக் கற்றற்கு வேண்டிய துணையையும் ஆசிரியர் செய்வாராயின், மாணாக்கருக்குக் கல்வியிலே பற்று உண்டாகும். கல்விப்பற்றுள்ளவர்கள் ஒருவிதமான வலாற்காரமுமின்றிக் கற்பார்கள். படிப்பு அவர்களுக்கு ஓர் இனிய பொழுதுபோக்காகும்.

ஒரு மாணாக்கன் கற்குங் கலைகளின் வகையும் அளவும் அவனுடைய ஆற்றலுக்கு உட்பட்டனவாதல் வேண்டும். அவை ஆற்றலைக் கடந்தவைகளாயின், அவன் அவற்றைச் சுமக்கமாட்டாதவனாய்க் கள்வப்படவுங் கூடும். ஒவ்வொருவருடைய ஆற்றலுஞ் சிற்சில கலைகளுக்கு வாய்ப்பானதாயிருக்கும். அக்கலைகள் அவர்களுக்கு மிகவும் இரசிக்கும். அதனாலே வேறு சில கலைகளிலே பற்றுக்குறையும். இயல்பாகப் பற்றுச் செல்லாத கலைகள் ஒரு தொழிலைப்பெறுதற்குத் துணையாகுமாயின், அந்தத் தொழிலிலேயுள்ள பற்றினால் அந்தக் கலைகளிலே பற்றுண்டாகும். அந்தக் கலைகளினாலே கீர்த்திவரத்தக்கதாயின், கீர்த்தியிலுள்ள பற்றினால் அவற்றிலே பற்றுண்டாகும். அல்லது, அந்தக் கலைகளைப் படிப்பிக்கும் ஆசிரியரிலே பற்றுண்டாயின் அதனாலே அவற்றிலே பற்றுண்டாகும். இவ்வாறு சில கலைகளிலே வரும் பற்று ஆராய்வூக்கத்திலிருந்து தோன்றாமற், பிறவூக்கங்களிலிருந்து தோன்றும். இந்த ஊக்கங்களை ஆராய்ந்தறிந்து இவைகளை மாணாக்கரில் எழுப்பிப் * படிப்பிலே பற்றை வருவித்தல் ஆசிரியரது கடனாகும்.



கல்வியானது அறிதல், செய்தல், நயத்தல் என மூவகைப்படும். காண்டல் கருதல் உரை ஆகிய இவற்றால் அறிவைப்பெறுதல் அறிதலாம். ஆடல்பாடல்களையும் வரைதல் சித்திரித்தல் முதலிய கைத்தொழில்களையும் பயிலுதல் செய்தற் கல்வியாம். சங்கீதம் சித்திரம் இலக்கியம் ஆகிய இவற்றின் இரசங்களைக் காணுதல் நயத்தலாம். இம்மூவகையிலும் செல்லும் பற்றே பூரணகல்விப் பற்றாகும்.

## கலப்புப்பற்று

சில பற்றுகள் பல வூக்கங்களின் கலப்பினால் உண்டாகும். ஒருவன் ஒரு கல்விமானைக்கண்டு அவனுடைய கல்வியின் பெருமையை யறிந்தானாயின் அவனுடைய முன்னிலையிலே போகும்போதெல்லாம் மதிப்பாக நடக்கின்றான். மதிப்பென்னும் பற்று பணிவூக்கத்

* இரசிக்காத கலைகளைக் கற்க மனத்தைச் செலுத்துதற்கு அகங்கார ஆட்சி அதிகமாக வேண்டப்படும். பிற்கால சீவியத் தொழிலிலும் இரசிக்காத வேலைகள் வருதலுண்டு. இவற்றைச் செய்தற்கும் அகங்கார வன்மைவேண்டும்.

தால் வருவது. அந்தக் கல்விமானுடைய ஆற்றல் மிகக் கூடியதாயு மிருந்தால் வியப்புண்டாகின்றது. வியப்பு பணிவூக்கமும் ஆராய்வூக்கமும் சேருவதால் உண்டாவது. அவன் இவனுக்குப் பலவிதமான உபகாரஞ் செய்து வந்தவனானால், அவனிலேயுள்ள பற்று நேச மதிப்பாகின்றது. நட்பிலும் அன்பேயன்றி மதிப்பும் நன்றியும் இரக்கமுங் கலந்திருக்கின்றன. கலப்பாலுண்டாகும் பிறபற்றுக்களை உய்த்துணர்ந்துகொள்க.

### தற்பற்று

பற்றுக்களுள்ளே வன்மையாற் கூடியது ஒருவன் தன்மீது கொண்டபற்று. அது தற்பற்றெனப்படும். தற்பற்றானது தற்பெருமையென்றும் தன்மதிப்பென்றும் இருகூறாகும். இவற்றுள், தற்பெருமையாவது ஒருவன் பிறரைப் பொருட்படுத்தாமல் தன்னைப்பெரும் பொருளாகக் கொள்ளுதல். இதுவே மனிதர்செய்யும் பெரும் பொல்லாங்குகளுக்கு வித்தாயுள்ளது. இது மதியை மயக்கி, விதியை விலக்கென்றும் விலக்கை விதியென்றும் மாற்றிக்காட்டும். தற்பெருமை யுள்ளவன் தன்னிலும் மேலானவர்களைத் தாழ்ந்தவர்களென்று எண்ணுவதுமல்லாமல், தனக்கொரு நியாயமும் பிறர்க்கொரு நியாயமும் வைத்துக்கொள்ளுவான். தற்பெருமை அகந்தையாயேனும் மமதையாயேனுந் தோன்றும். அகந்தையுள்ளவன் பிறரை மதியான், பிறர் தன்னை மதிக்கவேண்டுமென்று விரும்புவான்; பிறருக்கு உதவிசெய்யான், பிறர்தனக்குத் துணைசெய்ய வேண்டுமென்று விரும்புவான்; தன்னுடைய காரியத்தைப் பெறுதற்காகப் பொய், புரளி, களவு பலாற்



காரம் ஆகியவற்றையுந் துணையாகக் கொள்ளுவான். மமதையுள்ளவன் தன் மனைவிமக்கள் முதலியோருடைய நயங்களை நீதி கேடாகப் பேணுவான்.

தன்மதிப்பாவது ஒருவன் தன்னை நல்லவனாக மதித்தல்; நல்லவனாக மதித்தலினாலே, நல்லவன் செய்ய வேண்டிய செய்கைகளையே அவன் செய்வான்; நல்லவனுக்குரிய குணங்களைப் பூணுவான்; எந்த ஆபத்து வந்தாலும் அறநெறி தவறாமல், அதனால் வருந்துன்பத்தை இன்பமாகக் கொள்ளுவான்; "பிழைத்தவை பொறுக்கையெல்லாம் பெரியவர்கடமை" என்றெண்ணி மற்றையவர்கள் செய்யுங்குற்றங்களைச் சகித்துக் கொள்ளுவான். பிறர் தனக்குத் தீங்குசெய்தால், அவர்களுக்கு நன்மைசெய்வதே தன் நிலைக்குத் தகுந்த செயலென்றெண்ணி அவர்களுக்கு நன்மைசெய்வான். துளசித்தாமருடைய மகனை அவருடைய அடிமையின் மகன் அடித்ததைக்கண்ட அவருடைய மனைவி அவருக்கு முறையிட்டபோது, அவனை அடித்துப் பழிவாங்குதல் தமது உயர்ந்த நிலைக்குத் தகாதென்று அவர் சொல்லி மனைவியைச் சாந்தப்படுத்தித் தன் மகனைக்கொண்டு அடிமையின் மகனுக்கு ஒரு மோதகங் கொடுப்பித்தார்.

சிறுபிள்ளைகளிலே நற்குணம் உதிப்பதற்கு அவர்களைத் தன்மதிப்புடையராக்குதல் ஒரு தக்கவழி. "தம்பி, நீ ஒரு நல்லபிள்ளை; நீ பிழையான வழிக்குப் போகமாட்டாய்" என்று மூத்தோர்கள் ஒரு சிறுபிள்ளைக்குச் சொன்னால், அந்தப்பிள்ளைக்கு அது பெருமகிழ்ச்சியை யுண்டாக்கி நல்லொழுக்கத்திலே பற்றை விளைவிக்கும். ஒரு பிள்ளையைப்பார்த்து "நீ கெட்டபிள்ளை" என்றால், அந்தப்பிள்ளை தன்மதிப்புக் கெட்டுத்

தீமைசெய்யக் கூசுதலை ஒழியும். சிறு தவறு செய்கிறவர்களை நீதிஸ்தலங்கள் குற்றவாளிகளாகக் கண்டு சிறைச்சாலைக்கு அனுப்புதல் அவர்கள் பெருந் துஷ்டராதற்கு வழியாகும். அவர்களுடைய பிழையின் மூலகாரணத்தை அறிந்து, அதை அவர்களுக்குக் காட்டி, அவர்கள் அதில் அகப்படாதிருத்தற்கு வேண்டிய உபாயத்தைச் சொல்லி, அவர்களிடத்துத் தன்மதிப்பையுண்டாக்கி, அவர்களைத் தீயவழியிலிருந்து காக்கமுயலுவதே முதன்முறை குற்றமான செயல்களில் அகப்பட்டோருக்குச் செய்யவேண்டிய பரிகாரம்.

தற்பற்று விரிந்து தன்னுடைய சாதி, மொழி, தேசம், சமயம், ஆகிய இவற்றிற் செல்லும். இவை முறையே சாதிப்பற்று, மொழிப்பற்று, தேசப்பற்று, சமயப்பற்று எனப்படும். இவற்றிலுள்ள பற்றும் பெருமை மதிப்பு என இருகூறாக வரும். தற்பெருமையுடையவர்கள் தங்கள் காரியங்களைப் பெறுதற்காக நெறிதவறுவதுபோல, தங்கள் சாதி சமயம் முதலியவற்றிலே பெருமை கொள்ளுகிறவர்களும் அவற்றுக்காக நெறிதவறுவார்கள். அவற்றிலே மதிப்புடையவர்கள் அவற்றை நயப்படுத்தற்காக அறநெறி தவறாமற் பெருமுயற்சி செய்வார்கள்.

## அறப்பற்று

இது வரையும் பற்றுப் பொருள்களாகக் கூறப்பட்டவை பொறிகளா லறியப்படும் பொருள்கள். இவைகள் மனிதரில் ஒரு சாராருடைய பற்றுப் பொருள்கள். இவர்களுடைய பற்றுக்களின் எல்லை பொறிப்பொருள்களாதலால், இவர்களைப் பொறிப்படியிலுள்ளவர்கள் அல்லது பௌதிகப்படியினர் எனலாம். பொறிகளுக்



கெட்டாத பொருள்கள் வாய்மை, பொறை, தயை, ஈகை, நடுநிலைமை முதலிய அறங்களாம். இவை புத்தியினாறியப்படுவன. இவற்றிலே பற்றுடையவர்களும் உண்டு. இப்படியானவர்களைப் புந்திப்படியினர் அல்லது அறப்படியினர் எனலாம். இவர்கள் பொருட்பற்றுடையராயிருந்து அப்பற்றாலுண்டாகுந் தொழில்களைச் செய்யும்போது, அறத் தொழில்களிலே விருப்பும் ஏனையவற்றில் வெறுப்பும் உண்டாகி வர அறத்தொழிலிலுள்ள விருப்பு பற்றாகத் தடிக்கப் பெற்றவர்கள். இவர்களுட் சிலர் ஒவ்வோர் அறத்திலே மாத்திரம்பற்றுடையராயிருப்பர். சிலர் ஈகையிலும், சிலர் வாய்மையிலும், சிலர் பொறுமையிலும் பற்றுடையராயிருப்பர். வேறு சிலர் பல அறங்களிலே பற்றுடையராயிருப்பர். ஒருவன் எந்த அறத்திலே பற்றுடையவனோ, அந்தஅறத்திலிருந்து அவன் விலகும்போது, யாராவது அதைக் காட்டி விளக்கினால், அவன் அறநெறியினின்றும் விலகான். பௌதிகப் படியிலுள்ளவர்கள் சில சமயங்களிலே ஏதாயினும் ஒரு பொருளைப் பெறுதற்குத் தீய வழியை அநுசரிக்கும்போது, அது அறவழியன்றென்று கண்டாலும் அப்பொருளிலேயுள்ள பற்றின்மிகுதியால் அதினின்றும் விலகார்கள்.* ஆயினும் அப்பொருள்

* ஆதலால் இவர்களுக்குப் புத்தி சொல்லி இவர்களைத் திருத்தலாமென்றெண்ணுதல் பேதைமை. தொழில் பற்றின் வழிச்செல்லுமன்றி அறத்தின் வழிச் செல்லாதென்பதை உணராமல், பெற்றோரும், ஆசிரியர்களும், பிரசாரகர்களும் முறையே தம் மக்களுக்கும் மாணாக்கருக்கும் கேட்போருக்கும் போதனை செய்து அப்போதனை பயன் படாமையைக கண்டு தம்முடைய வீண் போதனைக்காகத் தம்மை வைதற்குப் பதிலாக அவர்களை வைவர்.

அற்பமானதாயின் இவர்களுட் சிலர் தீயவழியினின்றும் விலகுவர். பொருட்பற்றுடையோரும் பெரும்பாலும் அறநெறிப் பட்டே யொழுகுவர்; பொருட்பற்று அறத்தோடு முரணும்போது அறநெறியினின்றும் விலகுவர். இப்படியே, அறப்பற்றுடையோரும் தமக்கு வேண்டிய பொருள்களைச் சம்பாதிக்கையில் அறப்பற்று பொருட்பற்றோடு முரணுமாயின், அவ்வகைச் சம்பாத்தியத்தைக் கைவிடுவர். இவ் விருபாலாருக்குமுள்ள வேற்றுமை இவைகளாம்.

இவ்விருபாலாரிலும் பலதிறத்தவர்களுளர். பொருட்பற்றுடையோர்களிற் சிலர் அற்பபொருளைப் பெறுதற்காகப் பெருங் கொடுமைகளைச் செய்வர். வேறு சிலர் பெருய்பொருளைப் பெறுதற்காகப் பெருங் கொடுமைகளைச் செய்வர். வேறு சிலர் பெரும்பொருளைப்பெறுதற்காக அற்ப நீதியீனஞ்செய்வர். அறப்பற்றுடையோரிற் சிலர் அற்பமான அறத்தைப் பேணுதற்காக எதையும் தியாகஞ்செய்வர். வேறு சிலர் அவ்வளவு தியாகஞ் செய்ய மாட்டாமல் அறத்தினின்றும் வழுவுவர்.

அறப்பற்றுக்குவேண்டிய மனப்பான்மை இயல்பாக அமைந்திருந்தால் ஒருகால் உண்டான அறப்பற்று என்றும் நிலைத்திருக்கும். ஒருவன் பிற்காலத்திலே தயையிலே பற்றுவைப்பவனாயின், அவன் சிறுவயதிலே பிறருடைய தயையைக்கண்டு மகிழ்வான். அவன் குழந்தையாயிருக்கும்போது, ஒரு பசுக்கன்று கயிற்றிலே கால்களை மாட்டிக் கொண்டு நடக்க மாட்டாமல் இடர்ப்பட அந்தச் சிக்கை யாராவது எடுத்து விடுவதைக்கண்டால் அவன் மகிழ்வான். இரக்கமில்லாத செய்கையைக்காணும்



போது கோபமும் இரக்கமான செய்கையைக் காணும் போது மகிழ்ச்சியும் அவனிடத்துண்டாகும். அன்றியும் வன்கண்ணரில் உவர்ப்பும் இரக்க முள்ளவர்களில் அன்பும் அவனிடத்தே உதிக்கும்.

இப்படியாகக் கோபம் உவர்ப்பு ஆகிய சுவைகள் வன்கண்மையோடும், மகிழ்ச்சி அன்பு ஆகிய சுவைகள் இரக்கத்தோடும் சேர்ந்து வருதலினால், வன்கண்மையில் வெறுப்பும் இரக்கத்திற் பற்றும் உண்டாகும். அதன் பின்னர், இரக்கத்தின் நன்மையைக் கல்வியினாலும் கேள்வியினாலும் அவன் அறிந்து அதிலே விசேஷ பற்று வைப்பான். இந்தப்பற்றை வளர்க்கத்தக்க பெற்றோர் அல்லது ஆசிரியர் அவனுக்கு வாய்த்தால், அவர்கள் அவனுக்கு இந்தத்துறையிலே பலவாறாகத் துணைசெய்வார்கள். இரக்கப்பற்றுடையோராகிய சிபி முதலியோர் உயிர்களிலே கொண்ட தயையினாலே செய்த அருஞ்செயல்களை எடுத்துக் காட்டுவார்கள், அல்லது அவர்களுடைய சரித்திரங்களை வாசிப்பிப்பார்கள். இவன் பிறருக்கிரங்கி உபகாரஞ் செய்யும்போது, அவர்கள் அதை மெச்சி அவனை உற்சாகப்படுத்துவார்கள். அவர்கள் பிற உயிர்களிலே கொள்ளுங் கருணையை அவன் பார்த்துப் பின்பற்றுவான். அறப்பற்றுக்கு வேண்டிய மனப்பான்மை இயல்பாய் அமைந்திராவிடில், ஒருகால் அதுதோன்றினாலும் இடையிலே அற்றுப் போகக்கூடும்.

ஒருவனுக்குச் சிறுவயதிலே இரக்கமான செய்கைகளிலே மகிழ்ச்சியும், கொடிய செய்கைகளிலே உவர்ப்புந் தோன்றாவிட்டாலும், அவனைச் சார்ந்திருக்கிறவர்கள் தயையிலே பற்றுடையவர்களாயின், அந்தப்

பற்று இவனுடைய மனத்திலே உண்டாதல்கூடும். அவர்களிலே இவன் எவ்வளவு அன்பாயும் மதிப்பாயும் இருக்கிறானோ அவ்வளவு அதிகமாக அந்தப்பற்று இவனிலே வளரும். கொடுஞ்செயல்களைக் காணும்போதும் கொடியவர்களைக் காணும்போதும் அவர்களிலுண்டாகும் அருவருப்பைக்கண்டு, இவனுக்குக்கொடுஞ்செயல்களிலே வெறுப்புண்டாகும். பிறபாஷை பேசுகிறவர்களோடு கூடி வாழுகிறவன் அந்தப் பாஷையைச் சிரமமின்றிக் கற்றுக் கொள்வதுபோல, சகவாசச் சார்பின் பலத்தினாற் சிறுவர்கள் அறங்களிலே பற்றை வளர்த்துக் கொள்ளுகிறார்கள். வீடும் வித்தியாசாலையும் உத்தியோக ஸ்தானமும் ஒரு பற்றுக்குத் துணைச்செய்யுமாயின், அந்தப்பற்று வலிபெற்று வளரும். ஆயினும், பயிற்சியால் வந்த பற்று சுவையினால் வந்தபற்றினும் மென்மையானது; பெரும் இடர்கள் வரும்போது கெட்டழிந்துபோம்.

பொருட்பற்றுடையோருக்குப் பொருளும் அறப்பற்றுடையோருக்கு அறமும் இனியவைகளாம். ஆயினும், பொருளினிமையினும் அறவினிமை அநேகமடங்கு கூடியது.

### பற்றுக்களின் முரண்

ஊக்கங்கள் முரணுவதுபோலப் பற்றுகளும் சில சமயங்களில் முரணும். அங்ஙனம் முரணும்போது, வலிகூடிய பற்று வலி குறைந்ததை அடக்கிவிடும். ஒருவனுக்கு நல்லொழுக்கத்திலுள்ள பற்று நண்பனிலுள்ள பற்றினும் வலியதாயின், நண்பனுடைய தீய ஒழுக்கத்தைக் கண்டு அவன் நண்பனைக் கைவிடுவான். தந்தையர் சிலர் நல்லுணவுகளைத் தாங்களே உண்டு



குழந்தைகளுக்கு நயமற்றவைகளைக் கொடுத்தற்குக் காரணம் அவர்களுடைய உணவுப்பற்று மகவுப்பற்றினும் வலிதாயிருத்தலாம்.

பற்றுகள் இப்படியாக வன்மையிற் கூடியுங் குறைந்து மிருத்தலால், அவற்றுள் ஒன்று மற்றவைகள் யாவற்றினும் வலிதாயிருத்தல்கூடும். இந்த ஒரு பற்று ஏனைய பற்றுக்களை அடக்கி யாளத் தக்கதாயிருக்கும். ஆதலால் இது இறைமைப் பற்றெனப்படும். மற்றைய ஒவ்வொரு பற்றும் அநேக ஊக்கங்களைத் துணை கொள்ளும் வன்மையையுடைமையால் அவையொவ்வொன்றும் ஒவ்வோர்சிற்றரசாக, அவற்றையெல்லாம் ஆளும்பற்று பேரரசாகிச் சகல ஊக்கங்களையும் ஆளத்தக்கதாகும். தொழில்கள் யாவும் ஊக்கங்களின் ஏவுதலால் உண்டாதலால், ஒருவனுடைய செயல்கள் யாவும் அவனுடைய இறைமைப் பற்றின் வழிப்பட்டே நிகழும். ஆதலால், ஒழுக்கத்தை ஆளுவது இறைமைப் பற்றாகும். ஒருவனுடைய இறைமைப்பற்றுச் செல்வப்பற்றாயின், அவன் செல்வத்தைப் பெறுதற்குத் தடையாயிருக்கும் ஊக்கங்களையும் பற்றுக்களையும் அடக்கி, தன்னுணவைக் குறைத்தும் தன் மனைவிமக்களை வருத்தியும் பிறர்பொருளை அபகரித்தும் இழிவான தொழில்களைச்செய்தும் பொருளை ஈட்டுவான்.

இறைமைப்பற்றுடையோர் ஆற்றல் மிகுந்தவர்களாயின், அவர்கள் பெரும் நன்மைகளையேனும் தீமைகளையேனுஞ் செய்து புகழையேனும் வசையையேனும் ஆக்கிக்கொள்வர். கன்னனுக்குக் கொடையும், பரதனுக்குச் சகோதரப்பற்றும், அரிச்சந்திரனுக்கு வாய்மையும், சிபிக்குச் சீவகாருண்ணியமும், அருந்ததிக்குக் கற்பும்,

தக்கனுக்கு அகந்தையும், நெப்போலியனுக்குப் பேராசையும் இறைமைப் பற்றுகளாயிருந்து பெருஞ்செய்கைகளைச் செய்வித்து அவர்களுடைய பேரை நிலவவைத்தன.

ஒருவனுக்கு இறைமைப்பற்றில்லையாயின், ஒவ்வொரு சமயத்திலும் எந்தப்பற்று முனைத்து நிற்கின்றதோ, அல்லது எந்தப்பற்று தன்னோடு முரணுவனவற்றிலும் வலிதாயிருக்கின்றதோ, அந்தப்பற்றின் வழிப்பட்டதாய் அவனுடைய ஒழுக்கம் நிகழும்.

### வினுக்கள்

க. பற்றுகள் எவ்வாறுண்டாகின்றன?

உ. பற்றுக்களுக்குஞ் சுவைகளுக்குமுள்ள பேதம் யாது?

ங. கல்வியின் வகைகள் எவை (ங)?

ச. கணிதம், சரித்திரம், பூமிசாத்திரம் ஆகிய நூல்கள் கற்றற்கு எவ்வூக்கங்களும் பற்றுகளும் துணையாகலாம்?

ரு. தற்பெருமைக்குந் தன்மதிப்புக்குமுள்ள ஒற்றுமை யாது?

சு. அறப்பற்றுடையவனுக்கும் பொருட்பற்றுடையவனுக்குமுள்ள பேதங்கள் எவை? அறப்பற்றுக்கு முக்கியமான மூலஊக்கம் யாது? பெற்றோர்க் கமையும் அறத்துக்கு மூலஊக்கம் யாது? அதற்குத் துணையானவை யாவை?

எ. அறப்பற்றுக்குப் பின்பற்றூக்கம் துணையாதல் எவ்வாறு?

# ஐந்தாம் அதிகாரம்

## தொழிலின் வகை

பிரதித்தொழில்—ஊக்கத்தொழில்—கலப்புத்தொழில்—தொடர்பூக்கத்தொழில்—எண்ணத்தொழில்—பழக்கத்தொழில்.

### பிரதித் தொழில்

தேவைகளைப் பெறுதற்குத் தொழில் செய்தல் வேண்டும். தொழில்களுள் ஒருவகைப்பட்டவை தாமாக நடைபெறுவன. இருளுள்ள இடத்திலிருந்து ஒளியுள்ள இடத்துக்குச் சடுதியாய்ப் போகும்போது கண்மணி சுருங்குகின்றது. * கண்மணி சுருங்குதல் ஒருவர் விருப்பத்துக்குட்பட்ட தொழிலன்று. அது தானகவே சுருங்குகின்றது. கையிலே கடுஞ்சூடு பட்டவுடனே நாம் கையை இழுத்தலும் * தவளையினுடைய தலையைச் சேதித்தபின்பு அதினுடைய காலிலே கீறினல் அது காலை இழுத்தலும் தாமாகவே நடைபெறுந் தொழில்கள். இவைகள் பிரதித்தொழில்களெனப்படும்.

உடலிலே புலனடி அசைநாடியென இருவகை நாடிகள் பொருத்துக்களாலே தொடுக்கப்பட்டிருக்கின்றன. கண்ணிலே கடும் ஒளி படும்போது, புலனடிகள் அதனலே தாக்கப்படும். அந்தத்தாக்கம் புலனடிகள்வழியாகச் சென்று நாடிப்பொருத்தை யடைந்து அசைநாடிகளைத் தாக்க, அந்தத் தாக்கத்தின் பிரதியாக

* பயத்தினுற் கண்மணி அகலிக்கும்; அப்போது ஒளி அதைச் சுருக்காது. அடுப்பிலிருக்கும் பாத்திரத்தை இறக்கும்போது கையிலே சூடுமாயினுங் கையைவிடாமலிருக்கலாம்.

அவைகள் தசைநார்களைத் தாக்கிக் கண்மணியைச் சிறுப்பிக்கின்றன. இதுவும் இதுபோன்ற செயல்களும் புலனுடிகளின் தாக்கத்துக்குப் பிரதியாக அசைநாடிகள் செய்யுந் தொழில்களாதலாற் பிரதித்தொழில் என்னும் பெயரைப் பெற்றன.

பிரதித்தொழில்கள் செய்வோனது விருப்பத்தை வேண்டாதனவாய், எப்போதும் ஒரேதன்மையினவாய், அவ்வவற்றுக்குக் காரணமான பொறித்தாக்கங்கள் உண்டாகும்போது உடம்பின் ஒவ்வோர் பகுதியில் உண்டாகி, காரணங்கள் மறைந்தவுடனே நின்றுவிடுவன.

### ஊக்கத்தொழில்

பிராணிகளுடைய மற்றைய தொழில்களெல்லாம் ஊக்கங்களின்பாற்பட்டுச் சந்தர்ப்பத்துக்கேற்பச் சற்றே தன்மையில் வேறுபட்டு நெடுந்தொழில்களா யுள்ளவை. பசித்த நாயொன்று முயலைக் கண்டால் அதைப் பிடித்துத் தின்னுவதை நோக்கமாகக்கொண்டு தொடர்ந்துபோகும். அது ஓடி மறைந்துவிட்டால் அவ்வளவோடு நில்லாது அதை அங்குமிங்குந் தேடிப்பார்க்கும்; அதைப் பிடிக்கும்வரையும், அல்லது அதைப்பிடித்தல் இயலாதென்று காணும்வரையும், அதைத் தேடும் முயற்சியைக் கைவிடாது. நோக்கங்கள் ஊக்கங்களால் வருவனவாதலால், நோக்கங்களையுடைய தொழில்கள் ஊக்கத்தொழில்களெனப்படும். ஆராய்வு ஊக்கத்தொழில்களுட் சிலவற்றிற் சேராமலும், மற்றையவற்றிற் சேர்ந்தும் இருக்கும். ஆராய்வுசேராத ஊக்கத்தொழில்கள் தனியூக்கத்தொழில்களெனப்படும்; அவை சுருக்கமாக ஊக்கத்தொழில்கள் எனப்படலாம்.



தனிக்குளவி கூடுகட்டுதல் ஓர் ஊக்கத்தொழில். அது பிரதித்தொழில்போல அந்தந்தநேரம் நிகழாததாய், நெடுநாட்பட்டதாய், கூடுகட்டும் விருப்பத்தினுல் நிகழ்வதாய தொழில். அதைச் செய்து முடித்தற்கிடையிற் பிறதொழில்கள் பலவற்றை அக்குளவி செய்கின்றது. அது ஒரு பருவத்தை அடையும்போது அதற்கியல்பாயமைந்த கட்டேக்கத்தின் தூண்டுதலாற் கூடுகட்டத் தொடங்குகிறன்து. கூடுகட்டுந் தொழிலை அது தாய்க்குளவியிடங் கற்றதன்று; அது தாய்க்குளவியை அறியாது. தாய்க்குளவி கூட்டுக்குள் இரையை வைத்து அதுக்குமேலே முட்டையை யிட்டுக் கூட்டை அடைத்து விட்டுப் போய்விடும். இவ்வகைக் குளவிகள் கூடிவாழும் வழக்கமில்லாமையால், அக்குளவி பிறகுளவிகள் கட்டுவதைப் பார்த்தறியவும் இடமில்லை. கூடுகட்டும் வன்மை அதற்கு இயல்பாயமைந்திருக்கிறது; பால்குடிக்கும் வன்மையும் பேசும் வன்மையும் நடக்கும்வன்மையும் குழந்தைகளுக்கு அமைந்திருத்தல்போல. இவ்வன்மை எவ்வாறமைந்ததெனில், பிராணிகளுக்குப் பொறிக்கருவிகளுந் தொழிற்கருவிகளும் * உண்டு. பொறிக்கருவிகளாவன கண், காது, மூக்கு, நா, தொக்கு ‡ என்பன. இவை முறையே ஒளி, ஓசை, நாற்றம், இரசம், ஊறு ஆகிய இவற்றை யறிவிக்கும், தொழிற்கருவிகளாவன வாய், கால், கை முதலியன. பொறிக்கருவியினுலே மனம் ஒரு பொருளை யறியும்போது, அந்தப்பொருள் ஓர்ஊக்கத்தோடு தொடர்புடையதாயின், அவ்வூக்கம் அதற்குரிய தொழிலைச் செய்தற்கு இச்சையை யுண்டாக்கும்.

* இவற்றுக்கு வடமொழிப்பெயர்கள் ஞானேந்திரியமும் கர்மேந்திரியமுமாம். ‡ பரிசத்தை யுணர்த்துங் கருவி.

இச்சை முற்றுப்பெறத்தக்கதாயின், தொழிற்கருவிகள் தொழிலை ஆரம்பிக்கும்.

உதாரணமாக ஒரு குழந்தைக்குப் பசி உண்டாகும் போது, அதனுடைய வாயிலே தாயுடைய முலை முதன் முறைபட, அந்தப் பரிசத்தினாலே உணவூக்கந் தொழிற் படும். இதனாலே வாயிலுள்ள தசைநார் முதலியன இயங்கிப் பால் குடித்தற்குக் காரணமாகின்றன.

ஓர் ஊக்கத்தொழிலைச் செய்தற்குப் பலவகைத் தொழிற் கருவிகள் வேண்டப்படின், முறுக்கிவிட்ட கடிகாரத்தின் தூக்குக்குண்டு அசைய அக்கடிகாரத்தி லுள்ள கருவிகளெல்லாந் தத்தந் தொழிலைச் செய்வது போல, முதற்கருவி தொழில் செய்ய எஞ்சியவை அதைத் தொடர்ந்து முயன்று தொழிலை நிறைவேற்றும். ஊக்கத்தொழில் மனிதருக்கும் உண்டு. குழந்தை பால் குடித்தலும், வளர்ந்தவர்கள் அச்சத்தினாலே திடுக்கிடு தலும், வேதனைப்படும்போது குரலிடுதலும், தற்பெரு மைக்குப் பங்கஞ் செய்தவனை எண்ணாமல் அடித்தலும், தனித்திருக்கமாட்டாமற் கூட்டத்தை நாடுதலும், இவை போல்வன பிறவும் மனிதரிலுள்ள தனியூக்கத் தொழில் களாம்.

அகநூல் வல்லோருட் சிலர் பொறிக்கருவிக்கும் தொழிற்கருவிக்கும் நேரே தொடர்புண்டென்றும், எத்தொழில் செய்தற்கும் ஊக்கமென்பதொன்று வேண் டியதில்லையென்றுங் கூறுவர். அப்படியாயின், குளவி மண்ணைக் காணுதற்கும் கூடுகட்டுந் தொழிற்கருவிக்கும் நேரே தொடர்பிருத்தல் வேண்டும். நேரே தொடர் பிருக்குமாயின், மண்ணைக் காணும்போதெல்லாம் குளவி கூடு கட்டவேண்டும். ஆண் குளவியைக் காணுதற்குங்



கலவிக் கருவிக்கும் நேரே தொடர்புண்டாயின், ஆண் குளவியைக் காணும்போதெல்லாம் அது கலவி செய்ய விரும்பவேண்டும். இப்படி நடத்தலைக் காணாமையால், பொறிக் கருவிகளுக்கும் இவ்வகையான தொழிலைச் செய்யுங் கருவிகளுக்கும் நேரே தொடர்பில்லையென் பதும், தொழிற்கருவிகளை ஏவுதற்கு ஊக்கம் வேண்டு மென்பதும் பெறப்படும்.

ஆயினும், ஊக்கத்தொழில் ஒவ்வொன்றும் எப் போதும் ஒரேவிதமாகச் செய்யப்படுவதன்று. அணில் தன் கூட்டைச் செய்தற்கு, தென்னந்தும்புள்ள இடத் தில் அதை எடுக்கும்; வாழைநாருள்ள இடத்தில் அதை எடுக்கும்; பன்னாடையுள்ள இடத்தில் அதிலுள்ள தும்பை எடுக்கும். கூடுகட்டும் இடங்களையும் அது வசதிக்குத்தக்கபடி மாற்றிக்கொள்ளும். ஆதலால் ஊக்கம் தொழிற்கருவியை இயக்கும்போது பொதுத் தன்மையாகவே இயக்குவதென்பது பெறப்படுகின்றது.

## கலப்புத்தொழில்

சிலசந்தர்ப்பங்களிலே தனியூக்கத்தொழில் அது கூலப்படாது; சற்றே விகாரப்படிற் சித்திக்கும். அங் ஙனம் விகாரப்படற்குப் பிற இயக்கங்களின் துணை வேண் டப்படும். இந்தத் துணையோடு செய்யப்படும் ஊக்கத் தொழில் கலப்புத்தொழில் எனப்படும். சந்தர்ப்பத்துக் கேற்க ஊக்கத்தொழிலை விகாரப்படுத்தும் வன்மை அறி வில் மிகக் குறைந்த பிராணிகளுக்கும் உண்டு.*

* சில அறிஞர் இந்த வன்மையை விவேகமென்னும் பிராணிகள் யாவற் றுக்கும் விவேகமுண்டென்றுஞ் சாதிப்பர்.

பிராணிகளுள் அறிவால் மிகக்குறைந்ததுக்குப் பிரதமதனு என்றும் தொன்மெய் †என்றும் பெயர். இந்தப் பிராணியொன்றை ஒருவர் ஒருமுறை கத்தியினால் இருகூருக்கினர். வேறொரு தொன்மெய் இந்தத் துண்டுகளுள் ஒன்றைக் கண்டு, தன்னுடைய உடம்பிலிருந்து நூல்களை விட்டு அவற்றால் அந்தத் துண்டைப் பிடித்துத் தன்னுடைய உடம்புக்குட் செலுத்திற்று. உள்ளே செலுத்தப்பட்ட துண்டு வெளியே வர முயன்றது. அப்போது அதை விழுங்கிய தொன்மெய் பின்னும் அதைத் தன்னுடைய உடம்புக்குட் செலுத்தியது. இரண்டாம் முறையும் இது நடந்தபின் அந்தத் துண்டு வெளியே வந்துவிட்டது. திரும்பவும் அந்தப் பெரிய தொன்மெய் அதை விழுங்கிற்று. அப்போது அந்தத் துண்டு முன்போன வழியாற் புறப்படாமல் பெரிய தொன்மெய்யின் உடம்பிலே வேறொரு பக்கத்தைத் துளைத்துக்கொண்டு வெளியே வந்தது. முதல் ஒருவிதமாகவும் பின் வேறொருவிதமாகவும் இது தப்ப முயன்றதிலிருந்து பிராணிகளுள் மிகத் தாழ்ந்தவற்றுக்கும் சமயத்துக்குத் தக்கதாகத் தொழில்செய்யும் ஆற்றலுண்டென்று கொள்ளப்படுகின்றது.‡

ஒருமுறை ஒரு குளவி கூடு கட்டிக்கொண்டிருந்தது. அதைக் கண்ட ஒருவர், அந்தக் குளவி கூட்டுக்காக மண்ணெடுக்கும்பொருட்டு எங்கேயோ போயிருந்தபோது, அந்தக் கூட்டிலே ஒரு துவாரத்தைச் செய்தார். குளவி மண்ணைக் கொண்டு வந்து வழக்கம்போல வேலைமுடிந்த

† இது ஆங்கிலத்திலே "ப்றெற்றெப்ளஸ்ம்" எனப்படும்.

‡ இது விவேகத்தின் துணைகொண்டு செய்யப்பட்டதென் றெண்ணப் பூரண சாட்சி யில்லை.



இடத்திலே வைத்தற்குப் பதிலாக, அந்தத்துவாரத்திலே கொண்டுபோய் வைத்தது. அதை யடைத்த பின்பு, அது முன்போலக் கூட்டைக் கட்டிக்கொண்டு வந்தது. அந்தக் கூட்டுவேலை முடியுமுன், அவர் அக்கூட்டின் வேறோரிடத்திலே ஒரு துவாரத்தைச் செய்தார். குளவி வந்து இந்தத் துவாரத்தைக் கண்டது. ஆயினும், இதை யடையாமல் அது வேலைசெய்த இடத்திலே மண்ணை வைத்தது. இரண்டாம் முறையும் மண்ணை அங்கேயே கொண்டுபோனது. மூன்றாம்முறை கூட்டுக்குள்ளே போய் உட்பக்கமாக நின்று அந்தத் துவாரத்தை யடைத்தது. குளவியுடைய தொழில் தனியூக்கத் தொழிலாயிருந்தால், அது துவாரத்தை யடைக்கமாட்டாது. அது முன்செய்த வேலையை இடையிலே விட்டுத் துவாரத்தை யடைத்தது ஆராய்வுத் தொழிலாம். இதனாலே குளவி முதலிய கீழ்ப்பிராணிகள் சந்தர்ப்பத்திற்கேற்க வழக்கத்தை மாற்றித் தொழில்செய்பவை என்பது பெறப்படுகின்றது.

குளவியானது கூட்டுக்குத் திரும்பி வரும்வழியை அறிதலினாலே அது நினைப்புவன்மையை யுடையதென்பதும் விளங்குகின்றது.

பட்சிகளுடைய வாழ்க்கை குளவிமுதலிய பூச்சிகளுடைய வாழ்க்கையிலும் நுண்மையானது. குளவிகள் செய்யமாட்டாத அநேக தொழில்களைப் பட்சிகள் செய்கின்றன. அவைகள் செய்யும் விசேஷ தொழில்களாவன, தமது குஞ்சைக் காப்பாற்றுதல், கூட்டைக் காப்பாற்றுதல், ஒன்றையொன்று கூப்பிடுதல், அன்பு பாராட்டுதல், அஞ்சுதல், மகிழ்தல், கவலைப்படுதல் முதலியவைகளாம். இப்படியாக வாழ்க்கை விரி

தற்குக் காரணம் அவைகள் குடும்பங்களாய் வாழ்தலாம். குடும்ப வாழ்க்கையினாலே குஞ்சுகள் தாய்மாரிடமிருந்து அநேக தொழில்களையும் பழக்கங்களையுங் கற்றுக்கொள்ளுகின்றன. ஆதலால் இவைகளுடைய தொழிற் கருவிகள் பக்குவமடையுங்காலம் நீடிக்கின்றது. இவற்றின் தொழில்களுக்கு ஆராய்வறிவு அதிகமாக வேண்டப்படுகின்றது. பட்சிகளிலும் பார்க்க ஆராயும் வன்மையிற் கூடியவைகள் எலிமுதலிய பிராணிகள். இவை அநேக புதுச்செயல்களை ஆராய்வினாற்செய்கின்றன.

ஒருவர் ஒரு எலியை ஒரு கூட்டுக்குள்ளே விட்டு அந்தக் கூட்டை ஒரு சுவரிலே தூக்கினார். அந்த எலிக்கு அதிக பசி வந்தபோது, தசையுள்ள எலும்புத் துண்டொன்றை நூலிலே கட்டி அக்கூட்டின் முற்பக்கத்திலே நூல் முட்டத்தக்கதாகத் தொங்கவிட்டார். எலும்புத்துண்டு கூட்டின் அடியிலிருந்து இரண்டு முழத்துக்குக் கீழே தொங்கினது. அந்த எலி உணவூக்கத்தால் ஏவப்பட்டுக் கூட்டின் ஓரத்துக்கு வந்து எலும்புத் துண்டை எட்டிப் பார்த்தது. அதைத் தூக்கியெடுக்கும் வழி அதற்குத் தெரியவில்லை. அந்தக் கூட்டுக்காரர் நூலைப் பிடித்து மேலுக்கிழுத்து, அந்த எலும்பை எலிக்குமுன்னே வைத்துவிட்டு, உடனே அதை எடுத்து முன்போலத் தொங்கவிட்டார். அதற்குப்பின், அவ்வெலி தன் முன்னங்கால்களால் நூலை இழுத்து எலும்புத்துண்டைத் தூக்கியெடுத்தது. முன் அறியாத ஒன்றைக் காட்டிக்கொடுக்க அதன்படி செய்யும் வல்லமை எலிக்கு உண்டென்பது இதனாலே பெறப்படும்.

பின்பும் அந்தக் கூட்டுக்காரர் அந்த எலும்புத் துண்டைக் கூட்டிலிருந்து எடுத்து முன்போலத் தொங்க



விட்டார். அப்போது எலி கூட்டின் ஓரத்துக்கு வந்து, நூலைப் பல்லினாற் கடித்துக்கொண்டு உள்ளே போதலினாலே எலும்பை மேலுக்கு வரப்பண்ணினது. இது விவேகத்தினால் அது புதிதாகக் கண்ட வழி. எலிகள் இப்படியாகப் பலவிதமான தொழில்களை ஆராய்வினாற் செய்ததைப் பலர் நேரிற் கண்டிருக்கிறார்கள்.

ஊக்கத்தொழில்களின் தன்மை பின்வருமாறு :—

(௧) ஒரு பிராணி ஓர் ஊக்கத்தொழிலைச் செய்யு முன் அதன் இறுதி நோக்கத்தை உணராமலிருக்கலாம்.

(௨) ஊக்கத்தொழில் பயிற்சியினாலே பூரணமடைகின்றது.

(௩) ஊக்கத்தொழில் அநுகூலப்படாதாயின் அது ஆராய்வினாலே திருத்தப்படுகின்றது.

(௪) ஓர் இனத்துப் பிராணி ஓர் ஊக்கத்தொழிலைப் பொது வகையால் ஒரே விதமாகவே செய்யும். உதாரணமாக ஓரினத்துப் பட்சிகள் ஒரே விதமான கூட்டையே கட்டும்.

ஊக்கத்தொழிலின் தன்மையை உணராதவர்கள் கீழ்ப் பிராணிகளுக்கு இயற்கையறிவென்று ஒன்று உண்டென்றும், அவ்வறிவைக் கொண்டே அவைகள் தொழிலைச் செய்கின்றனவென்றும் மயங்குவர். இயற்கையறிவைக்கொண்டே பட்சிகள் கூட்டையும், தேனீ வதையையும், கறையான் புற்றையும் ஆக்குகின்றன என்பது இவர்கள் கருத்து. அவைகளுக்கு இயற்கையறிவு இல்லையென்பதும், இத்தொழில்கள் யந்திரம் போன்ற கருவிகளினாற் செய்யப்படுவன வென்பதும், இக்கருவிகளை இயக்குவது ஊக்கமென்பதும், ஊக்க முயற்சிக்கு உடல் நிலையும் மன நிலையும் காரணமென்பதும், தொழில்

நிறைவேறுதற்கு ஆராய்வும் இடையிடையே வேண்டப்படுமென்பதும் மேலே காட்டப்பட்டன.

## தொடர்பூக்கத்தொழில்

பசியுள்ளநாய் சுவையான உணவைக் காணும்போது, உணவூக்கத்தின் ஏவுதலால் அதன் வாய் வழக்கத்திலும் அதிகமாய் ஊறும். சில வீடுகளில் உணவுநேரத்திலே மணியடித்தலுண்டு. அப்படியான ஒரு வீட்டிலே மணிச்சத்தங் கேட்டவுடனே அங்குள்ள நாய்க்கு வாயூறும். இது எப்படியெனில், உணவுப்பொருளைக் காணும்போது உணவூக்கம் முயற்சிசெய்யும், அதனால் வாயூறும்; மணிச்சத்தங் கேட்டவுடனே உணவுப்பொருளைக் காணுதல் வழக்கமாய் வந்துவிட்டபடியால், மணிச்சத்தங் கேட்க உணவூக்கம் முயற்சிசெய்யும்; அதனால் வாயூறும். ஆகவே, மணிச்சத்தத்துக்கும் உணவூக்கத்துக்கும் ஒருதொடர்பு புதிதாய் உண்டாகின்றது. மணிச்சத்தம் உணவுப்பொருளோடு தொடர்புற்றிருந்தமையினால் இத்தொடர்பு வந்ததாகையால், மணிச்சத்தங் கேட்க வாயூறுதல் தொடர்பூக்கத்தொழில் எனப்படும்.

யானை, குதிரை, மாடு, நாய் முதலியவற்றுக்குத் தொழில் பழக்குதற்குத் துணையாயிருப்பது இத்தொடர்பூக்கமாம். இவற்றைப் பழக்குகிறவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக இவை ஒன்றைச் செய்யும்போது, அவர்கள் இவைகளைத் துன்பப்படுத்தி அச்சுறுத்துவார்கள். அப்போது அச்சஊக்கத்தினாலே அப்பிழைத்தொழில் தடைபடும். இப்படியாகப் பிழைத்தொழிலுக்கும் அச்சவூக்கத்துக்கும் ஒருபுதுத்தொடர்பு உண்



டாகின்றது. இத்தொடர்பினாலே, அவர்கள் செய்யுந் துன்பம் பிழைத்தொழிலை விடுதற்கும் முறையான தொழிலைச் செய்தற்கும் காரணமாகின்றது.

## எண்ணத்தொழில்

மனிதருடைய தொழில்கள் பெரும்பாலும் காரணகாரியத்தொடர்பு பற்றிச் செய்யப்படுவன. இவை எண்ணத்தொழில்கள் எனப்படும். உழவும், பசளையும், விதைப்பும், தண்ணீரும், நெல்விளைவுக்கு வேண்டப்படுதலும், நெல் விளைந்தபின் நெல்லைக் கதிரிலிருந்து பிரிக்கும் உபாயமும், நெல்லை அரிசியாக்கிச் சமையல் செய்யும் வழியும் ஆராய்வினால் அறியப்பட்டன. இவைகள் தனியூக்கத்தொழில்கள் ஆகா. ஆயினும், இவற்றுக்கு ஊக்கங்களும் ஊக்கங்களிற்றோன்றிய பற்றுகளுமே பிரேரகங்களாம். எண்ணித் துணியும் இயல்பு சிலரிலே அதிகமாயும் வேறுசிலரிலே அற்பமாயுமுள்ளது.

## பழக்கத்தொழில்

ஒருகால் ஒருதொழில் எண்ணிச் செய்யப்பட்டதாயின், அதை மேலும்மேலும் செய்யும்போது அதற்கு வேண்டிய ஆராய்வு வரவரக் குறைந்துகொண்டு வரும். ஒரு குழந்தை ஒரு எழுத்தை எழுதப் பழகும்போது, அதுக்கு அதிக அவதானமும் முயற்சியும் வேண்டும்; பழகியபின்பு எழுதுதல் மிக இலகுவாகும். இளைஞர்கள் நீந்தப் பழகும்போது மிகச் சிரமப்படுகிறார்கள்; பழகிய பின்பு அதை விளையாட்டாகக் கருதுகிறார்கள். ஒரு தொழிலைப் பலமுறை செய்துவந்தால், அத்தொழிலுக்கு வேண்டிய கருவிகளெல்லாம் பயிற்சியினாலே

நெருக்கமான தொடர்புடையவைகளாய் விடும். அதனாலே தொழில்செய்தற்கு வேண்டிய முதற்கருவி முயற்சியைத் தொடங்க மற்றையவைகளெல்லாம் முறைப்படி தத்தந்தொழில்களைச் செய்துகொண்டு வரும். அவைகளை இடையிலே தடுத்தல் பிரயாசமாகவும் நேரும். இப்படியாக ஒருதொழில் தொடுத்தபயிற்சியினால் இலகுவாகச் செய்யத்தக்கதாக வந்தால், அது பழக்கம் எனப்படும். பழக்கச்செயல் ஊக்கச்செயல்போல மனமுயற்சி வெளிப்படையாகத் தோன்றாமல் நடைபெறும்.

ஒருபழக்கத்தைப் பழகும்போது பிழையில்லாமற் பழகவேண்டும். பிழையாகப் பழகிக்கொண்டால், பின்பு அந்தப் பிழையை நீக்குதல் பிரயாசமாயிருக்கும். சிலர் ழகரத்தை ளகரமாய் உச்சரித்துப் பழகி, அதை மாற்றிக்கொள்ள மாட்டாமல் இடர்ப் படுகிறார்கள். ஆயினும் ஒரு பழக்கத்தைத் தொடங்கும் பொழுது அதிலே குறைவுகள் நேரும். அந்தக் குறைவுகளைப் பயிற்சியினாலே படிப்படியாகத் திருத்திக் கொள்ளலாம். பழக்கம் விரைவாகக் கைவரவேண்டுமாயின், முதலாவது அந்தப் பயிற்சியிலே மிகுந்த பற்றும் அவதானமும் இருத்தல்வேண்டும்; இரண்டாவது, அதை அடிக்கடி செய்தல் வேண்டும், இதனாலே மறதிக்கு இடம்வராது; மூன்றாவது, மனமேனும் உடலேனும் இளைத்த நேரத்திலே அதைச்செய்தல் தக்கதன்று, இளைத்த நேரப் பயிற்சி போதிய பயனைத்தராது; நான்காவது, அந்தப் பயிற்சிக்குத் தடையானவைகளைக் கண்டு அவற்றை உடனே நீக்கிவிடல் வேண்டும்.

ஒரு பழக்கம் ஓரளவுக்குக் கைவந்துவிட்டால், அதை மேலும் பயிலுதலினால் வருந் திருத்தம் அற்ப



மாகும். ஆதலாற் பயிற்சியை அவ்வளவோடு விட்டு அதைத் தொழிலில் உபயோகப்படுத்தித் திருத்துதலே முறையாகும். உதாரணமாக, எழுத்துக்களை எழுதப் பழகும் மாணாக்கன் ஓரளவு திறமை வாய்ந்தபின், பாடத்தைப் பார்த்தெழுதுதல் சொல்ல எழுதுதல் ஆகிய இவற்றைச்செய்தால், எழுத்து திருந்துதலோடு இத்தொழில்களுங் கைவரும்; அன்றியும், மீட்டலாலுண்டாகும் உவர்ப்புக்கும் இடம் வராது. இவற்றிலே பயின்ற பின்பு இப்பயிற்சியை வியாசமெழுதுதலில் உபயோகித்தல் முறையாகும். வியாசப்பயிற்சியைப் பத்திரிகைகளுக்கெழுதுதலிலேனும் உபந்நியாசங்கள் எழுதுதலிலேனும் நூலெழுதுதலிலேனும் உபயோகித்தல் தக்கதாகும்.

பிரதித்தொழில் ஊக்கத்தொழில் எண்ணத்தொழில் ஆகிய மூவகைத் தொழில்களையுஞ் செய்தற்குக் கருவிகள் வேண்டும். பிரதித் தொழில்களைச் செய்யுங்கருவிகளின் விரிவை உடல்நூலிற் காண்க. ஊக்கத்தொழிலுக்கும் எண்ணத்தொழிலுக்கும் உடற்கருவிகளோடு மனமுயற்சியும் வேண்டும். உடற்கருவிகளாவன கண் காது முதலிய அறிதற்கருவிகளும், வாய் கை கால் முதலிய செயற் கருவிகளுமாம். மனம் அறிதல் முயலல் சலித்தல் என்னும் மூவகைத்தொழில்களைச் செய்யும்.

## வினாக்கள்

க. பிரதித்தொழிலாவது யாது ?
உ. ஊக்கத்தொழிலின் தன்மைகள் எவை (ச) ?
ங. ஊக்கத்தொழில் எவ்வாறு நடைபெறுகின்றது ?
ச. தொடர்பூக்கத் தொழிலாவது யாது ? விலங்குகளைப் பழக்குவதில் அது பயன் படுதல் எவ்வாறு ?
ரு. ஒருதொழிலைப்பழகும்போது விலக்கவேண்டியதுயாது? பயிற்சி பிற்பகுதியில் எவ்வழியில் நிகழவேண்டும் ?

# ஆறும் அதிகாரம்

## தொழிலின் படிமுறை

அறிதல் - விரும்பல் - தணிதல் - முயலல் - முயலலின் ஒருமை - முயலலின் அளவு—ஊக்க ஒற்றுமையால் வரும் அகமுயற்சி—ஊக்க முரணால் வரும் அசமுயற்சி—அகமுயற்சியின் ஏற்றம்.

### அறிதல்

தொழில் * செய்வதற்கு முதலில் வேண்டப்படுவது அதற்கு உபயோகப்படும் பொருள்களையும் அதைச் செய்யும் முறையையும் அறிதல்.

குயவன் குடத்தைச் செய்யுமுன் அதற்கு வேண்டிய கருவிகளையும் அவற்றைக்கொண்டு குடத்தைச் செய்யும் முறையையும் அறிந்திருத்தல் வேண்டும்.

ஆசிரியர் ஒரு பாடத்தைப் படிப்பிக்கவேண்டுமாயின் அப்பாடத்தின் பொருளையும் அதைப் படிப்பிக்கும் முறையையும் அறியவேண்டும்.

இரும்பு ஒரு தனிப்பொருளென்று அனுமானித்தற்கு, உலோகங்கள் யாவும் தனிப்பொருள்கள் என்பதையும் இரும்பு ஒரு உலோகமென்பதையும் அறிவதுமன்றி அவற்றிலிருந்து அநுமானத்தைப் பெறும் முறையையும் அறிதல்வேண்டும்.

அறிவை நேரே பெறும்வழிகள் மூன்று. அவற்றுள், பொருள்களின் தன்மையைக் காட்சியால் அறிதல் ஒன்று. ஒரு பூவைக் காணும்போது அதனுடைய நிறம் மணம் மென்மை முதலியவற்றினியல்பை யறிதல் காட்சி

* இங்கே தொழில் என்றது பிரதித்தொழில் அல்லாதவற்றை.



யறிவு. இவைகளேயன்றி மனசிலே நிகழுங் கோபம் முதலிய தாக்கங்களையும், அறிதல், விரும்பல், முதலிய செயல்களையும் அறிதலுங் காட்சியறிவாம்.

இரண்டு பொருள்களின் தொடர்பை யறிதல் அறிவை நேரே பெறும் இரண்டாவது வழி. கொப்பு பூவிற்கு ஆதாரம் என்றறிதல் இவ்வழியாம். நன்மைக்குத் தீமை எதிரானதென்றறிதலும் முப்பது பத்தின் மும்மடங்கு என்றறிதலும் இது. இவற்றிலே தொடர்பாயுள்ளவை முறையே ஆதாரம், எதிர், மும்மடங்கு என்பனவாம்.

ஒரு பொருளோடு தொடர்புடைய பொருளை அறிதல் அறிதலின் மூன்றாவது வழி. யானையை யடக்குங்கருவி தோட்டி என்றறிதல் இது. யானை என்பது ஒரு பொருள்; அதை அடக்குங் கருவி என்பது தொடர்பு; இந்தத் தொடர்பையுடைய பொருள் தோட்டியாகும். பாம்புக்குப் பகை கீரி, வெண்மைக்கு எதிர் கருமை என்றறிதலும் இது.

எவ்வகைக் காட்சியுங் கருதலும் இம்மூவகைகளுள் அடங்கும். நாம் அறிவைப் பெறுதற்கு இவைகளேயன்றி நூல்களும் கேள்வியும் வழிகளாம். இவற்றின் பொருள் இம்மூவகை வழியாற்பிறரால் அறியப்பட்டவை.

அறியும் ஆற்றல் விவேகம் எனப்படும். இது குழந்தைப் பருவத்திலிருந்து வளர்ந்து வந்து பதினாறும் வயது வரையில் முற்றும். அதன்மேல் இதற்கு வளர்ச்சியில்லை. இது முற்றியபோதுள்ள அளவே ஒவ்வொருவருடைய விவேகத்துக்கும் அளவாம். விவேகம் கல்வியினால் ஏறமாட்டாது. கல்லாதவனுடைய விவேகம் பெரிய கல்விமானுடைய விவேகத்திலுங் கூடியதாயிருக்கலாம்

## விரும்பல்

ஒரு தொழிலைச் செய்யும் முறையை யறிந்தபின், அதைச் செய்ய விரும்புதல் அடுத்தபடியாம். விருப்பத்தை ஆக்குவது ஊக்கம் அல்லது பற்று. தொழிலைச் செய்தற்கு ஓர் ஊக்கமேனும் பற்றேனும் முனைத்தெழா விட்டால் விருப்பம் நிகழாது. கள்ளுண்ணாதவன் கள்ளைக் காண்பானாயின், அவனுக்கு அதிலே பற்றில்லாமையால், அதைப் பொருட்படுத்தான்; கள்ளுண்பவன் காண்பானாயின் பொருட்படுத்துவான். ஆயினும், அவன் அதற்குச் சற்று முன்னரே வயிறாரக் குடித்தவனாயின் அதிலுள்ள பற்று முனையாதாதலால், அதை அந்நேரம் விரும்பான். வயிறாரக் குடியாதவனாயின், அதிலே கொண்டபற்றின் முனைப்பினாலே அதைக் குடிக்க விரும்புவான்.

நிராயுதன் காட்டிலே ஒரு பன்றியைக் கண்டால் அச்சவூக்கத்தினாலே மரத்திலேற விரும்புவான். ஆயுதமுடைய பலசாலி போரூக்கத்தினாலே அதைக் கொல்ல விரும்புவான். வேட்டைக்குப் போனவன் பன்றியிறைச்சிப் பற்றினாலே அதைச் சுட்டுக்கொல்ல விரும்புவான். ஆகவே, ஒரு தொழிலைச் செய்தற்கு விரும்புகில், அத்தொழில் ஓர் ஊக்கத்தோடேனும் பற்றோடேனும் தொடர்புற்றிருத்தல் வேண்டும்.

## துணிதல்

ஒரு தொழிலைச் செய்ய விரும்பிய பின்பு, அது இயலுமோ இயலாதோ என்ற ஆராய்வு பெரும்பாலுமுண்டாகும். கள்ளுண்ண விரும்பியவனுக்கு அதை விலைக்கு வாங்கப் பொருள் வேண்டும். பொருளில்லை



யாயின், அதை வாங்குதல் இயலாது. பொருளிருந்தாலும், அவனுடன் செல்லும் அரிய நண்பனுக்கு அது வெறுப்பாயின் அவன் முன்னிலையில் அதைப் பருகலாகாதென்றெண்ணி வாங்கமாட்டான்; பாரமான வழக்கொன்றை நடத்தப்போகிறவனாயின், கள்ளினால் மதி மயங்கிப் பேசத்தகாதவற்றைப் பேசித் தோல்வி யடைதற்குக் காரணமாகுமென்றஞ்சிக் கள்ளுண்ணலை விடுதல் கூடும். ஆராய்வு செய்யும்போது இப்படியான தடைகள் நேர்ந்தால், "நான் கள்ளுண்ணேன்" என்று அவன் துணிபுசெய்வான். தடைகளில்லையாயின் "நான் கள்ளுண்பேன்" என்று துணிபு செய்வான். துணிபு செய்தவுடனே தொழில் ஆரம்பமாகும். விரும்பிய தொழிலைச் செய்தற்கு ஆராய்வு வேண்டப்படாதபோது, அதை ஆரம்பித்தற்கு வேண்டிய துணிபு தடையின்றி வரும். அந்தத் துணிபு "நான் இதைச் செய்வேன்" என்று வெளிப்படையாகாமல் மறைவாய் நிகழும். தொழிலைச் செய்தற்குத் தடை ஆராய்வினால் மாத்திரம் வருவதன்று; அத்தொழிலைச் செய்யவேண்டிய நேரத்திலே வேறொரு தொழில் செய்யவேண்டி வருதலாலும் தடை நேரிடுதல் கூடும்.

ஒரு மாணாக்கன் பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டிய நேரத்தில் ஒரு விவாகக் கொண்டாட்டத்துக்குப் போகவேண்டியிருந்தால், இரண்டில் ஒன்று தடைபடும். பள்ளிக்கூடத்துக்குப் போதலே தக்கதென்றறிந்தானாயினும், கல்விப்பற்றிலும்பார்க்கக் கூட்டுக்கம் வலியதாயின், அவன் பள்ளிக்கூடத்துக்குப் போதலை விட்டுக் கலியாணவீட்டுக்குப் போகவேண்டுமென்று துணிபுசெய்வான். ஒரேநேரத்திலே பலதொழில்கள்

செய்யவேண்டி வந்தால், அத்தொழில்களை ஏவும் ஊக்கங்களுள்ளும் பற்றுக்களுள்ளும் எது அந்நேரம் வலியதாயிருக்கிறதோ அதன் தொழிலைச் செய்தற்கே துணிபுண்டாகும்.

இங்கே துணிபு* எனப்படுவது "இதுதக்கது" "இதுதகாதது" என்று ஆராய்வினாற் கண்ட முடிபன்று; "இது செய்வேன்" "இது செய்யேன்" என்னுந் தொழிற்றுணிபாம். தக்கதென்று கண்டதைச் செய்யத்துணியாமையும், தகாததென்று கண்டதைச் செய்யத்துணிதலும் யாவரிடத்தும் உண்டு.

துணிதலின் சொல்வடிவத்திலிருந்து "நான்" என்று ஒருபொருள் உண்டென்பது ஐயமின்றிப் பெறப்படும். "நான் இதைச் செய்வேன்" என்ற உடனே கருவிகள் தொழிலைத் தொடங்குகின்றன. ஆதலால் "நான்" என்ற அந்தப் பொருளே எல்லாக் கருவிகளையும் ஆளுவதென்றெண்ண இடமுண்டு. ஆயினும், நினைத்தல் முயலல் முதலிய தொழில்களைச் செய்யும்போதும், "நான் நினைக்கின்றேன்" "நான் முயலுகின்றேன்" என்று சொல்லலாமாதலால் இத்தொழில்களைச் செய்யும்போதும் "நான்" என்ற பொருள் உண்டென்று தொனிக்குமெனின், அவைகள் தொழில் நிகழ்ச்சியைக் கூறுவனவேயன்றித் தொழில் செய்தற்குக் காரணமாகாமையாலும், துணிதலிலே "நான்" என்பது தோன்றுதல் இன்றியமையாமையாலும், அத்தொழில்கள் நடைபெறும்போது உடலியக்கங் காணப்படுதலாலும், அகங்கரிக்கும்போது உடலில் ஒருவித

* துணிபு செய்யும் வன்மையை வடநூலார் அகங்காரம் என்பர். 'அகம்' என்பது 'நான்.'



மான இயக்கமும் இல்லாமைக்கு அநுபவசாட்சியுண்மையால் அது உடம்பின்வேறான ஒருபொருளின் தொழில் என்பது பெறப்படுதலாலும், துணிதலே "நான்" என்ற பொருளின் உண்மைக்குப் பூரணமான சாட்சியென்க.

அகங்காரவன்மை மனிதரிலே பலதிறப்படும். அகங்காரவன்மை யுடையோர் நிலைதளம்பார். அகங்காரவன்மை விவேகத்தோடு சேர்ந்தவிடத்து, அடக்கம் ஆழ்ந்தசிந்தனை நல்லொழுக்கம் ஈசுரபத்தி ஆகிய இவைகள் காணப்படுகின்றன.

## முயலல்

தொழிலைச் செய்யத் துணிந்த உடனே தொழிற் கருவிகள் தொழிலைத் தொடங்கும். அதன்பின்பு அத்தொழில் நிறைவேறும்வரையும் செயலை நடைபெறுவித்தற்காக மனம் முயன்றுகொண்டிருக்கும். இந்த மன முயற்சி முயலல் எனப்படும். முயலும் வன்மையும் மனிதரில் அளவினாற் பலதிறப்படும். சிலர் எடுத்த முயற்சியை எளிதிலே கைவிடார்; ஆயினுந் தேவைக்குத் தக்கதாகவும் பற்றுக்குத் தக்கதாகவும் அவர்களுடைய முயலும்வன்மை கூடியும் குறைந்தும் வரும். வேறு சிலருடைய முயலும் வன்மை இயல்பிலே அற்பமாயிருக்கும். இவர்கள் உவப்பான தொழிலைச் செய்ய நேர்ந்தாலும், அதிலே அதிகம் முயலார்கள். முயலும் வன்மை யேறியவர்களும், நோய் இளைப்பு முதலியவை உண்டாகும்போது, தொழிலைத் தளரவிடுவார்கள்.

தொழில் தடையின்றி நடைபெறும்போது, முயலல் வன்மையேறி யிருந்தாலும், அது காட்சிக்குப் புலப்

படாது. அந்தத் தொழிலுக்குத் தடைவருங் காலத்திலே மாத்திரம் அதன் வன்மை வெளியாகத் தோன்றும். ஒருவர் ஒரு அவசியமான கடிதத்தை மிக அவதானமாய் எழுதிக்கொண்டிருக்கும்போது, எழுதும் அலகு ஒடிந்துபோக வேறோரலகு கிடையாமலிருந்தால், அந்த நேரத்திலே அவருக்கு வரும் மனவருத்தம் அவருடைய மனமுயற்சி எவ்வளவாக இருந்ததென்பதைக் காட்டும்.

தொழிலைச் செய்தற்கு வேண்டிய உபகரணங்கள் கிடையாவாயின், முயலல் ஆசைவடிவமாய் நிற்கும். ஒருவர் விவாகஞ் செய்யவேண்டுமென்று துணிந்தும் விவாகஞ் செய்யத்தக்க பெண்ணில்லா விட்டால், அதைச் செய்தற்குத் தோன்றிய அகமுயற்சி ஆசையாய் நிகழும்.

## முயலலின் ஒருமை

ஒரு தொழிலைச் செய்ய எழுந்த அகமுயற்சி அந்தத் தொழிலைப்பற்றிய முடிபு வரும்வரையும் இடையறாது அகண்டமாயிருக்கும். ஒருவன் ஒரு கடிதம் எழுதத் துணிந்து அதைத் தொடங்கியபின் அது தடையின்றி முடிந்தால் அதற்கு வேண்டிய அகமுயற்சி இடையறாது நிற்றல் வெளிப்படை. ஒருவன் ஒரு நூலைச் செய்யத்தொடங்கி ஐந்து வருஷத்தில் முடித்தானாயின், அதன் தொடக்கத்துக்கும் முடிவுக்கு மிடையிலே பிறதொழில்கள் இலட்சக்கணக்கானவை செய்து நிறைவேற்றப்படுகின்றன. ஆயினும் அந்நூலை நிறைவேற்றுதற்குத்தோன்றிய அகமுயற்சி இடையிலே ஒருகாலும் அற்றுப்போகவில்லை. பிறதொழில்கள் முடிவுபெற இந்தத் தொழிலிலே மனஞ்செல்லுதலும், ஒய்ந்திருக்கும்போது இந்த நூலைப்பற்றிய எண்ணம் தானாக வருதலும்



பிறதொழில்கள் செய்யும்போது இந்த நூலைப்பற்றிய எண்ணம் சில நேரங்களிலே வந்து தாக்குதலும் நூல் செய்தற்கு வேண்டிய அகமுயற்சி இடையறாது நிற்றலை உணர்த்துகின்றன.

ஒரு தொழிலை நிறைவேற்றுதற்கு எழுந்த அகமுயற்சி பிறதொழில் நடைபெறுங் காலத்திலே ஒய்ந்திருப்பது வழக்கமாயினும், சிலகாலங்களிலே அதுவும் தொழில் செய்து கொண்டிருத்தலுண்டு. நாம் ஒருவருடைய பெயரை மறந்துபோய் நினைக்கும்போது நினைப்பில் வராமலிருந்தால், அதைக் கைவிட்டு வேறு தொழிலைச் செய்துகொண்டிருப்போம். அதைச் செய்யும்போது, அந்தப்பெயர் சடுதியாக ஞாபகத்தில் வருதலுண்டு. இது வரும் வழி அந்தப் பெயரை நினைத்தற்காக உண்டான மனமுயற்சி மறைந்துநின்று தொழில் செய்வித்து அந்தப் பெயரை ஞாபகப்படுத்தியதென்று கருதவேண்டியிருக்கிறது.

அன்றியும் சிலகாலங்களிலே நாம் ஒரு தொழிலைச் செய்யத் தொடங்கி மறதியினாலே அதைக் கைவிட்டால், அந்தத் தொழிலை நடத்தும் மனமுயற்சி மனத்தைச் சஞ்சலப்படுத்திக்கொண்டிருக்கும். நான் ஒரு புத்தகத்தை எடுத்தற்காக அறைக்குட் போனபோது, ஒரு குழந்தை நிலத்திலே விழுந்து ஊறுபட்டதைக் கண்டு அதற்குச் சிகிச்சைசெய்ததினாற் புத்தகமெடுக்கப் போனதை மறந்து திரும்பிவந்தேனாயின், அப்போது என்னுடைய மனத்திலே இன்னதென்றறியமாட்டாத ஒரு சலனம் உண்டாகும். இந்தச் சலனத்துக்குக் காரணம் புத்தகமெடுக்குந் தொழிலைச் செய்விக்க எழுந்த அகமுயற்சியாம். நான் அந்தச் சலனத்தைக் கண்டு,

"செய்யவேண்டிய ஏதோ ஒன்றைச் செய்யாதுவிட்டேன்; இதுவே எனது மனச்சலனத்துக்குக் காரணம்," என்றெண்ணி அந்தத் தொழில் யாதென்பதை ஆராய்வேன். அப்போது அந்தப் புத்தகத்தின் எண்ணம் வருமாயின், மனச் சலனம் அவ்வளவோடு தீர்ந்துபோம். இந்த மனமுயற்சி நனவிலேயன்றிக் கனவிலும் வந்து தோன்றும். ஆகாரமின்றிப் பசியோடு தனிவழி போகிறவர்கள் நித்திரை செய்யும்போது, உணவுப் பொருள்கள் கிடைப்பதாகக் கனாக்காண்பார்கள். இது உணவைப்பெறுதற்குண்டான அகமுயற்சியின் தொழில். அகமுயற்சி மிக்கவன்மையோடு இருக்கும்போது, தொழில் சற்றேனும் கைகூடாதாயின், அது மனத்தை நிறைத்துநின்று பிறதொழிலெல்லாவற்றையுங் கெடுத்துப் பைத்தியநிலையை வருவித்தலுமுண்டு.

### முயலலின் அளவு

அகமுயற்சியின் வன்மை அம்முயற்சிக்கேதுவாயிருந்த ஊக்கத்தின் வன்மைக்குத் தக்கதாய் இருக்கும். ஒவ்வோரூக்கமும் ஒவ்வொருபற்றும் வன்மையினளவில் சமயத்துக்குத் தக்கதாய் வேறுபடும். உணவூக்கம் கடும்பசி யுள்ளபோது முழுவலியோடு நிற்கும்; பசி தீர்ந்தவுடனே சோர்ந்துபோம்; அற்ப பசியுள்ளபோது அற்ப வலி யுள்ளதாயிருக்கும். விளையாடி இளைத்திருக்கும்போது, விளையாட்டுப் பற்று வலியற்றுப் போம். எதிருக்கு விளையாடுகையில் விளையாட்டைப் பார்ப்பவர்கள் பெருந்தொகையினராய் உற்சாகப்படுத்துவாராயின் விளையாட்டுப்பற்று முழுவலியோடு நிற்கும். ஆயினுஞ் சிலஊக்கங்களின் முழுவலி ஏனையவற்றின் முழுவலியி



லுங் கூடியதாய் இருக்கும். ஊக்கங்களுள் மிகப்புராதனமானவைகளும் எல்லாப்பிராணிகளிடத்தும் உள்ளவைகளுமாகிய உணவூக்கம் காதலூக்கம் போரூக்கம் முதலியவை பொதுவாக மற்றவைகளிலும் முழுவலியாற் கூடியவை.

அகமுயற்சியை இரண்டுவிதமாய் மதிப்பிடலாம். இவற்றுள் ஒருவிதம் முகக்குறிப்பாலும் உடல்நிலையாலும் செயலினாலும் மட்டிடுதல். அகமுயற்சி வலியேறி யிருக்கும்போது, உடலில் ஓர் அதிர்ச்சிதோன்றும்; தசைநார்கள் உரக்கும்; இரத்தாசயமும் சுவாசாசயமும் தொழிலில் வேற்றுமையடையும். அகமுயற்சி மெலிதாயின், உடம்பில் அமைதி தோன்றும்; தசைநார்கள் சோரும்.

பகைஊக்கத்தின் அகமுயற்சியை அதன் செயலினால் ஒருவாறு அளவிடலாம். அது வலிகுறைந்திருக்கும்போது, வெறுப்பான பார்வை மாத்திரம் தோன்றும்; வலி ஏற ஏற கோபமான பார்வையைப் பிறப்பித்து, ஏசுவித்து, வசைசொல்லுவித்து, கையை ஓங்குவித்து, அடிப்பித்து, கத்தியால்வெட்டுவித்து, கொலைசெய்வித்து அப்பாலும் போதல் கூடும்.

அகமுயற்சியின் வன்மையை யறியும் இரண்டாம் வழி பின்வருமாறு. ஒருதொழிலைச் செய்யும்போது அதிலும் பார்க்க அவசியமான ஒரு தொழிலைச் செய்ய வேண்டி வந்தால், அப்போது அகமுயற்சி நிற்கும் நிலையிலிருந்து அதன் வன்மையை அறிந்து கொள்ளலாம். புதுத்தொழில் செய்தற் கிடங்கொடுத்து அமைதியாயிருக்குமாயின், அதன் வன்மை மட்டானதென்பது பெறப்படும்; இடங்கொடுத்தபின்பு அத்தொழில்

செய்யும்போது தன்னுடைய தொழிலின் எண்ணத்தை வருவித்துக்கொண்டிருக்குமாயின் அது வன்மையால் ஏற்றமுடையதென்று கொள்ளப்படும்; புதுத்தொழிலைச் செய்ய இடங்கொடாம லிருக்குமாயின் அது மிகவலியதென்பது விளங்கும்.

ஒருவன் சூதாடிக்கொண்டிருக்கும்போது அவனுடைய தாயாருக்குச் சடுதியில் அபாயமானநோய் வந்துவிட்டதெனக் கேள்விப்பட்டும் அவன் சூதாட்டத்தை விடவில்லை. தாயினுடைய உயிர் சூதாட்டத்திலும் கோடி மடங்கு பிரதானமானது. ஆயினும் சூதாட்டத்தின் அகமுயற்சி தாயைக் காணப் போகாமல் அவனைத் தடுத்தது. ஆதலால் இந்த அகமுயற்சி மிக்கவலியுடையதென்பது வெளிப்படை. ஆக்கிமீடிஸ் என்னும் பேர்பெற்ற கணிதவித்துவான் கணக்குச்செய்துகொண்டிருந்தபோது, அவர் வசித்த நகரம் சத்துருக்களுடைய சேனையினாலே தாக்கப்பட்டது. அப்போதும் அவா தம்முடைய கணக்கைக் கைவிடவில்லை. இத்தொழிலில் அகமுயற்சி முழுவன்மையோடு நின்றது. இப்படியான சந்தர்ப்பங்களிலே முழுமனமும் உடலும் தொழிலில் ஈடுபட்டிருக்கும். அந்தத் தொழிலோடு தொடர்பில்லாத எந்தத் தொழிலுக்கும் அகமுயற்சி இடங்கொடாது. அப்போது மூளையிலுள்ள தொழிற் சத்தி யெல்லாம் அந்தத் தொழில்வழியே செல்ல, பிறதொழில்களின் வழிகளெல்லாம் அடைபட்டிருக்கும்.

இப்படியாக முழுமனமும் ஒரேதொழிலிற் செல்லும்போது அது தொழிலோடு தொடர்புள்ள பெருந்தொகையான விஷயங்களை ஒரேதரத்திலே நுட்பமாய் ஆராயவும் அவற்றின் தொடர்புகளை அறியவும் தக்க



தாயிருக்கும். ஒரு சேனாபதி போர்க்களத்தில் நிற்கும்போது, தன்னுடைய சேனையின் ஒவ்வோர் அங்கமும் என்னசெய்கிறதென்பதும் பின்பு என்ன செய்யவேண்டுமென்பதும், எதிர்ப்பக்கத்துச் சேனையின் ஒவ்வோர் அங்கமும் என்ன செய்கின்றதென்பதும், அதற்கு என்னசெய்ய வேண்டுமென்பதும், ஒய்வாயிருக்குந் தன்னுடைய சேனையின் ஒவ்வோர் அங்கத்துக்கும் என்ன கட்டளை யிடவேண்டுமென்பதும், இவைபோன்ற பிறவும் அவன் ஒரே நேரத்திற் சிந்திப்பவைகளாம். அவனுக்கு அந்த நேரத்திலே பசி களை வேதனை அபாயம் முதலியவற்றுள் ஒன்றுந்தோன்றா. தேசத்துக்குத் தலைவனாய் இருப்பவன் சேனாபதியிலும் ஆற்றலாற் பன்மடங்கு கூடியவனாய், பலவகைப்பட்ட விஷயங்களை ஒரேநேரத்தில் அவதானிக்கத் தக்கவனாய் இருத்தல் அவசியம். இதனாலே இந்திரனுக்கு* ஆயிரங்கண்ணன் என்ற பெயர் உண்டானதென்பர். இவ்வளவு விரிவான அவதானம் நன்கு பயிற்றப்பட்டதாய்ப் பல்வகைத் திறமையுடையதாய் ஒருவழிப்பட்டதாயுள்ள மனமுடையவர்க்கே வாய்க்கும்.

### ஊக்க ஒற்றுமையால் வரும் அகமுயற்சி

தாழ்ந்த பிராணிகளிலே ஒரு நேரத்திலே ஒரு ஊக்கம் மாத்திரம் தொழிற்படும். அறிவு ஏற ஏற பிராணிகளிலே அநேக ஊக்கங்கள் ஒரே நேரத்தில் முயற்சிசெய்யும். தாய்க்கோழி குப்பையைக் கிளறும்போது, அதனிடத்தே உணவூக்கமும் காப்பூக்கமும் முயற்சி செய்கின்றன. ஆதலால், அது தானுந் தின்று குஞ்சுகளுக்குங் கொடுக்கும். மனிதனுடைய வாழ்க்கை

*இந்திரன்-அரசன்

மிகவும் பின்னற்பட்டிருத்தலால், அவனுடைய மனத்திலே அனேக ஊக்கங்கள் ஒரேநேரத்தில் முயற்சி செய்தலுண்டு. இவைகளுட் சில ஒன்றுக்கொன்று துணையாகவும், வேறு சில அவற்றுக்கு மாறாகவும் முயலுதலுண்டு. பல ஊக்கங்கள் ஒரே நோக்கத்தை யுடையனவாய் முயலும்போது, அகமுயற்சி மிகவலிமை யுடையதாய்த் தளராமல் நிற்கும்.

வைத்தியன் நோயாளிக்கு வைத்தியஞ்செய்யும் போது, அநேக ஊக்கங்களும் பற்றுகளும் ஒற்றுமைப் பட்டு அத்தொழிலுக்கு வேண்டிய அகமுயற்சியைப் பலப்படுத்தி நிற்கும். அந்தத்தொழிலினால் அவனுக்குப் பொருளும் புகழும் வரும். பொருளினால் மனைவிமக்களை வாழவைக்கலாம். அந்த நோயை மாற்றுதலிலே கொண்ட சிரத்தையினாலே ஒரு புது வைத்தியமுறையைக் காண நேர்ந்தால், மருத்துநூல் வளர்ச்சியடையும். இவற்றுள், பொருள் வரவுக்காக உணவூக்கம் முதலிய பல ஊக்கங்கள் தொழிற்படும். புகழுக்காக முதன்மையூக்கமும், நோயைத் தீர்க்கும்பொருட்டும் மனைவிமக்களுடைய நல்வாழ்வின்பொருட்டும் காப்பூக்கமும், புதுவைத்தியமுறையைக் காணுதற்கு ஆராய்வூக்கமும் அவனைக்கொண்டு பெருமுயற்சி செய்விக்கும். இத்தனை ஊக்கங்கள் நோயை மாற்றுதலாகிய ஒரு நோக்கமுடையனவாயிருத்தலால், அவைகள் ஒருங்கு சேரும்போது வைத்தியன் மிகுந்த அவதானமாயும் சாதுரியமாயுந் தளர்ச்சியின்றியுந் தொழில்செய்வான். இப்படியாக ஒருவன் தன்னுடைய தொழிலைச் செய்தற்குப் பல ஊக்கங்களைத் தொழிற்படுத்துவானாயின் அவனுடைய வாழ்க்கை இனியதாயிருக்கும்.



## ஊக்க முரணால் வரும் அகமுயற்சி

சில சந்தர்ப்பங்களிலே ஒன்றுக்கொன்று மாறான இரண்டு ஊக்கங்கள் ஒரே நேரத்தில் முயலுதலுண்டு. அப்போது, இரண்டு ஊக்கங்களும் ஒத்தவலிமையுடையவைகளாயின், ஒருகால் ஓர் ஊக்கத்தின் தொழிலும் மறுகால் மற்ற ஊக்கத்தின் தொழிலும் நடைபெறும்; அல்லது அவ்வூக்கங்களின் தொழில் ஒன்றும் நடவாது. சில சந்தர்ப்பங்களிலே ஒத்தவலியுடைய ஊக்கங்கள் முரணும்போது எத்தொழில் செய்யவேண்டியதென்று துணிதற்கு மனிதர் சீட்டுப்போட்டுப் பார்த்தலுண்டு.

ஒரு ஊக்கம் மற்றதிலும் பார்க்க வலியதாயின், அதனுடைய தொழில் நடைபெற, மற்றது அடங்கியிருக்கும். சில தோணிக்காரர் தோணி ஆழ்ந்தபின் கரை சேர்ந்து, அந்த இடத்தில் உணவில்லாமையால், தங்களிலொருவனைக் கொன்று தின்றார்கள். அவர்களில் உணவூக்கம் நட்புப்பற்றிலும் வலிதாயது. சில தூர்த்தப்பெண்கள் சோரமாகப் பிள்ளைப்பெற்றவுடனே தங்களுடைய மானத்தைக் காத்தற்காக அச்சிசுவைக் கொன்றுவிடுகிறார்கள். இவர்களிலே முதன்மையூக்கம் காப்பூக்கத்திலும் வலிதாயது. சில தர்மவான்கள் தங்களுடைய உணவைத் தாங்கள் உண்ணாமல் வறியவர்களுக்குக் கொடுத்துப் பசிகிடக்கிறார்கள். இவர்களில் உணவூக்கத்திலும் காப்பூக்கம் வலிதாகிறது. ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் தேசத்தைக் காத்தற்காகப் போருக்குப் போய் உயிரை விடுகிறார்கள். இவர்களுடைய தேசப்பற்று தற்பற்றிலும் வலிகூடியதாகின்றது.

இப்படியாக ஒரு ஊக்கம் மற்றோருக்கத்திலும் வலி தாகி அதை அடக்கித் தொழில்செய்யில், அத்தொழில் நல்லதொழிலாயின் அதனாலே இன்பமும், தீயதாயின் பெருந்துக்கமும் உண்டாகும். வறியவனுக்குத் தன் னுணவைக் கொடுத்துப் பசிகிடந்தவனுக்கு மகிழ்ச்சி யுண்டாகும். துணைவனைக் கொன்ற தோணிக்காரரும் குழந்தையைக் கொன்ற தூர்த்தையும் தங்கள் பாதகச் செயலை நினைத்து நெடுநாள் வருந்துவார்கள். சில ஊக் கங்களை அடக்கிவைக்க முயலும்போது, அவைகள் உள்ளபடி அடங்காமல் முழுவலியோடும் மறைந்து நின்று மனத்தை வாட்டி நோய்களுக்கும் பைத்தியத் துக்குங் காரணமாகின்றன. ஊக்கமுரணில் அகமுயற்சி பெரும்பாலும் அற்பமாயும், மகிழ்ச்சிக்குக் காரணமான வற்றில் மட்டானதாயும் நிகழும்.

### அகமுயற்சியை ஏற்றும் வழி

ஒருவனுக்கு ஒரு நிலையானதொழில் இல்லையாயின், அவனுடைய தொழிலுக்கு அகமுயற்சி அதிகம் வராது. தொழிலில்லாத் துன்பத்தாலும், தொழில்தேடுவதிலும், தொழில் மாறுவதிலும், அகமுயற்சி குறைந்துபோம். நிலையான தொழில் இருக்குமாயின், அகமுயற்சி தளராது; தொழில் முடிந்து ஓய்வாயிருக்கும்போதும் அதன் செயலினால் அத்தொழிலைப்பற்றிய எண்ணம் வந்துகொண்டிருக்கும். அத்தொழில் பெரும் இலாபத் தைத் தருவதாயின் அதற்குத் தக்கதாக அகமுயற்சி ஏறும். பெரும் இலாபத்தைத் தருவதாயினும் அத் தொழிலை நிறைவேற்றுதல் இயலாததாகத் தோன்றும் போது, அகமுயற்சி தளர்ந்துவிடும். மாணக்கர்கள்



படிக்கக் கள்வப்படுதற்குப் பிரதானமான காரணம் அவர்கள் சுமக்கமாட்டாத சுமையை ஆசிரியர் போதிய அளவு துணைபுரியாமற் சுமத்திவிடுதலே.

தொழிலின் பயன் நெடுங்காலத்தின்பின் வருவ தாயின், அகமுயற்சி வலிகூராது. அதன் வலியை ஏற்று தற்காக அந்தத் தொழிலைப் பலகூறுகளாகப் பிரித்து ஒவ்வொன்றும் முடிதலை ஓர் இடைப்பயனாகக் கருதல் வேண்டும். அப்படியாயின், ஒவ்வொன்றும் முடிவுபெற மனசிற்கு ஆறுதலும் கிளர்ச்சியும் உண்டாகி, அடுத்த கூற்றை நிறைவேற்றுதற்கு வேண்டிய அகமுயற்சியை ஏற்றிவிடும். இவ்வுண்மையை அநுசரித்தே இக்காலக் கல்விமுறையில் ஆண்டுக்காண்டு ஒரு வகுப்பிலிருந்து அடுத்த வகுப்புக்கேறும் ஒழுங்கு செய்யப்பட்டிருக் கிறது. ஓர் ஆண்டுக்கிடையிலும் மாணக்கன் தன் னுடைய தொழில் செம்மையாக நடந்துவருகின்றதோ என்று காணுதற்காகப் பரீட்சைகள் பலமுறை நடத்தப் படுகின்றன. அந்தப் பரீட்சைகளினாலே தொழிற்குறைவு தோன்றினால் மாணக்கன் அகமுயற்சியை ஏற்ற இட முண்டு.

ஆசிரியர்கள், தொழிற்சாலை யதிபர்கள், சேனா பதிகள், உத்தியோகத்தலைவர்கள் முதலியோர் முறையே தங்களுக்குக் கீழே இருக்கும் மாணக்கர்கள், தொழிற் காரர், போர்வீரர், கீழுத்தியோகத்தர் முதலியோரைக் கொண்டு தாங்கள் வேண்டிய வேலையைச் செய்வித்தற்கு அவர்களுடைய அகமுயற்சியை ஏற்றவேண்டி வரும். மேலே கூறிய முறைகளேயன்றி, அவர்கள் தங்களைக் கீழோரென்று கருதாமல் உடன்தொழிலாளராகக் கரு தற்கு வேண்டியவற்றைச் செய்தலும் ஒருநல்ல முறையா

கும். இவ்வாறு கருதப்பண்ணுதற்கு ஓர் அளவு சுவாதீனம் அவர்களுக்குக் கொடுத்தலும், அவர்களை இதமாக நடத்துதலும், அவர்களுக்குப்போதிய நயம்காட்டுதலும் அவசியமானவைகளாம்.

### வினுக்கள்

க. அறிவை நேரேபெறும் வழிகள் எவை?

உ. "நான்" என்பதன் உண்மை மனத்தொழில்களுள் எதிலே தெளிவாகின்றது?

ந. முயலலின் ஒருமையை விளக்கற்கு ஓர் உதாரணம் சொல்லுக.

ச. மாணுக்கனின் அகமுயற்சியை ஏற்றும் வழிகள் எவை?

ரு. தொழிலின் பயன் நெடுங்காலத்தின் பின் வருவதாயின், அகமுயற்சியை ஏற்றும் வழி யாது?

# ஏழாம் அதிகாரம்

## தொழிற்றுணிபு

ஊக்கமுரண்—ஆராய்வுத்துணிபு—ஊக்கஅடக்கம்—பழக்க அடக்கம்—பொய்யடக்கம்—தூய்மைசெய்தல்—அமைதல்.

### ஊக்கமுரண்

ஒரு காகத்துக்கு அப்பத்துண்டை நீட்டினுல், அது ஒருகால் கிட்டப்போகும், மறுகால் பின்வாங்கும் உணவுவேட்கையால் முன்செல்லும்; அச்சத்தினுற் பின்னேபோகும். இறுதியில் அச்சம் குறைந்தால், அப்பத்துண்டைக் கொத்தப் போகும்; அச்சம் கூடினுற் கிட்டப் போகாது. ஒரே நேரத்தில் உணவூக்கமும் அச்சவூக்கமும் ஒன்றுக்கொன்று முரணிநிற்றலால், காகம் இருமனமாயிருக்கும். இறுதியிலே, ஒன்று வலி குறைந்தடங்க, மற்றது தொழிலாற்றும். இவ்வாறு ஊக்கங்கள் ஒன்ருேடொன்று முரணுதல் ஊக்கமுரண் எனப்படும். பறவைமுதலிய கீழ்ப்பிராணிகளிலே ஊக்கமுரண் அரிதாய் வரும்; வந்தால் எளிதிலே தீரும்.

மனிதனிடத்துண்டாகும் ஊக்கமுரண்கள் சில நேரங்களிலே மிகப்பின்னலாயிருக்கும். அவனுக்கு அறம் மறம் என்ற வேற்றுமையுண்டு; அவன் ஊர்க் கட்டுப்பாட்டுக்கும் வேந்தனுடைய ஆணைக்கும் சமய விதிவிலக்குகளுக்கும் அமையவேண்டியவனுயிருக்கிருன். தாய்தந்தையர் மனைவிமக்கள் முதலியோரைக் காப்பாற்றுங் கடனும் அவனுக்குண்டு. இவைகள் யாவற்றுக்கும் ஒப்ப நடந்துகொள்ள எப்போதும் வாய்க்காது.

மேலும், மனிதனுடைய தேவைகள் ஊக்கங்களாலேயன்றிப் பற்றுக்களாலும் வருதலால், ஒரே நேரத்திலே பலதேவைகளைத் தீர்க்கவேண்டியும் வரும். ஆதலால், அவனுக்குத் தொழில்முரண்கள் அடிக்கடி வந்துகொண்டிருக்கும். ஒரு தொழிலைச் செய்தற்குச் சார்பாகவும் மாறாகவும் ஊக்கங்கள் நின்று முரணும்; அல்லது ஒரே நேரத்திற் பல தொழிலைச் செய்வித்தற்கேவும் பல ஊக்கங்கள் ஒன்றோடொன்று முரணும்.

கைக்கூலிப்பயிற்சியில்லாத ஒரு கிராமத்தலைவனுக்கு ஒருவன் கைக்கூலியைக் கொடுக்க முயன்றால், அப்பத்துண்டை நீட்டியபோது காகம் எப்படி நடந்து கொண்டதோ அப்படியே அவன் நடந்து கொள்ளுவான். பொருட்பற்று கைக்கூலியை வாங்கும்படி யேவும்; அறப்பற்று அதைத் தடுக்கும். ஒருகால் அதை வாங்குவதால் வரும் நயம் துலக்கமாகும்; அப்போது அதை வாங்குதற்கு விருப்பம் வரும். பின்னொருகால் அதை வாங்குதலால்வருந் தீமைகள் அவனுடைய மனத்துக்குத் தோன்றி வாங்குதலில் உவர்ப்பை யுண்டாக்கும். இப்படியாக எண்ணம் மாறிக்கொண்டிருத்தலால், அவன் ஒரு முடிபுஞ் செய்யமாட்டாதவனைக் கைக்கூலி நீட்டினவனை அடுத்தநாள் வருமாறு கட்டளை செய்வான். அவன் வருகிறதற்கிடையிலே பொருட்பற்று வலியேறி அறப்பற்றை அடக்கி முரணைத் தீர்க்கும். அதன் பின்பு கைக்கூலிகள் வந்தால், கிராமத்தலைவன் அவற்றைத் தடையின்றி ஏற்பான். அவன் நெடுங்காலமாகக் கைக்கூலி வாங்கி வருதலினாலே, கைக்கூலிப்பற்று என்று ஒரு புதுப்பற்று அவனிலுண்டாகிக் கைக்கூலியில் விடாயையும் உண்டாக்கும்.



ஒரே நேரத்தில் இரண்டு தொழில்கள் செய்ய வேண்டி நேரும்போது, ஒவ்வோரூக்கம் ஒவ்வொரு தொழிலைச் செய்வித்தற்கு ஏவும். இந்தத் தொழில்கள் இரண்டும் நல்லவையாயேனும், இரண்டும் தீயவையாயேனும், அல்லது ஒன்று நல்லதாய் மற்றது தீயதாயேனும் இருக்கும். தனித்தொழிலிற்போல இவற்றினும் எந்த ஊக்கம் இறுதியிலே வலியேறி நிற்கிறதோ அந்த ஊக்கத்தின் தொழிலே செய்யப்படும்.

இப்படியாக முரணும் ஊக்கங்களுட் சில மற்றவைகளிலும் பார்க்க அதிகமாய் முரணுகின்றன. அச்சவூக்கம் பெரும்பாலும் தீயதொழில்களைத் தடுத்தற்கெழுகின்றது. பிறர் காணத்தக்கதாகத் திருடுதற்கு அஞ்சுதலும், அதிகாரியுடைய முன்னிலையிலே பிறருக்குத் துன்பஞ்செய்ய அஞ்சுதலும், பிறர் காணத்தக்கதாகக் கள்ளுண்ணச் சிலர் அஞ்சுதலும் வழக்கமாயிருக்கின்றன. ஒரு வீடு நெருப்புக்கிரையாகும்போது, வீட்டுக்காரனிலே திருத்தியீனமுள்ள அயலவனொருவன் அவனுக்குத் துணை செய்ய விரும்பாவிட்டாலும், மற்றவர்களுக்கு அஞ்சி ஏதாயினுந் துணை செய்வான். இப்படியாக, ஊருக்கும் அரசுக்கும் அயலுக்கும் அஞ்சி அநேகர் நல்லதொழிலைச் செய்கிறார்கள். ஊர் தராசுபோலக் கோடாமல் நின்று ஒவ்வொருவருடைய செயலையும் நிறுத்து வெளியாகச் சொல்லுமாயின், அறத்தொழில்கள் ஊரிலே அதிகமாக நிலவும். ஊர் முதலியவற்றுக்கஞ்சுதல் குறையக் குறைய, தீவினையினின்று விலகுதலும் குறையும். சில ஊக்கங்கள் அச்சத்தினாலே தடைபட்டு மறைந்திருந்து சிலசமயங்களிலே பெருந்தீமைகளைச் செய்கின்றன.

அச்சவூக்கம் தீய தொழில்களையே யன்றி நல்ல தொழில்களையுந் தடுக்கும். சிறுவர்கள் பொய் பேசுதற்கும் வளர்ந்தவர்கள் கைக்கூலி கொடுத்தற்கும் ஒரு காரணம் அச்சமாகும்.

மிக அதிகமாக முரணும் வேறோரூக்கம் முதன்மையூக்கம். ஒருவன் ஓரரசியல் விஷயத்திலே ஈடுபட்ட பின்பு, அதனாலே பிறருக்குத் தீமைவிளையுமென்று கண்டானாயின், அதைக் கைவிடுதலே முறைமையாகும். ஆயினும், அதைக் கைவிடுதலினாலே தான் பிழை செய்ததை மற்றவர்களுக்குக் காட்டுவதாக முடியுமென்றெண்ணி, அதைக் கைவிட விரும்பாமையும் உண்டு. இதிலே கூட்டுக்கத்திலிருந்து வந்த தேசப்பற்றோடு முதன்மையூக்கம் முரணுகின்றது. பிறருடைய பொருளை அபகரித்தல் முதன்மையூக்கத்தின் சயத்தினாலும், பிறரை இகழ்தலும் பிறரிலே பொறாமைகொள்ளுதலும் அவ்வூக்கத்தின் அபசயத்தினாலும் நேர்வன.

## ஆராய்வுத் துணிபு

சில முரண்பாடுகள் ஆராய்வினாலே தீரும். ஒரு தொழிலுக்குச் சார்பாகவும் மாறாகவும் ஊக்கங்கள் முரணும்போது, அந்தத் தொழில் தக்கதோ தகாததோ என்று ஆராய்தலுண்டு. இரண்டு பக்கத்து நியாயங்களையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது, ஒருகால் அது தக்கதாகத்தோன்றும்; பின்பு புது நியாயங்கள் வெளிவர அந்தத் தொழில் தகாததாகத்தோன்றும். இப்படியாக ஆராய்வு நீடிக்கும்.

ஆயினும், வலிய ஊக்கங்கள் எதிர்ப்பக்கத்து நியாயங்களை மறைத்து நடுவு நிலைமையைக் கெடுத்துநிற்கும்.



"காமத்துக்குக்* கண்ணில்லை" என்பது பழமொழி. சில சந்தர்ப்பங்களிலே தொழிலை விரைவாக நிச்சயிக்க வேண்டிவரும். அந்த நேரத்திலே எந்தப் பக்கத்து நியாயங்கள் வலியுடையனவாகத் தோன்றுகின்றனவோ அந்தப் பக்கத்துத் தொழில் நடைபெறும். ஒருநாள் நல்லதென்று ஆராய்வினாற் கண்டு செய்யப்பட்ட தொழில், அடுத்த நாள் பிழையாகவுந் தோன்றும். பின்னொருமுறை அந்தத் தொழிலைச் செய்ய நேரும்போது, பிந்திய கருத்தின்படி அதை விலக்குதலுமுண்டு. பின்பு அவனுடைய சுற்றமித்திரர் அதற்குச் சார்பாய் இருத்தலைக்காணும்போது, மனம் மாறி அந்தத் தொழிலிலே ஈடுபடுதலுமுண்டு. பொய்ச்சாட்சி சொன்னவன் அது பிழையென்று கண்டு பொய்ச்சாட்சி சொல்லுவதில்லையென்று துணிந்தானாயினும், அவனுடைய நண்பன் வந்து கேட்கும்போது மறுக்க இயலாமையாற் பின்னரும் பொய்ச்சாட்சி சொல்லுதலுண்டு. கைக்கூலி வாங்கியபின் அதைப் பிழையென்று நினைத்தவன், ஒருவன் பணத்தை நீட்டும்போது, அந்தப் பணத்தினால் மருண்டு அதை ஏற்கவுங்கூடும். இக்கருத்துப் பற்றியே "புன்றொழிற் காவ பொறியுறிற் செய்பமன் புன்றொழிலே" † என்று ஒரு புலவர் பாடினார்.

ஆயினும், அகங்கார வன்மையுடையவர்கள் ஒரு தொழிலைக் கைவிடத் தீர்மானித்தார்களாயின், அத்

* காமம் என்பது ஆசை. ஆசையுடையோர்க்கு நீதி தோன்றாதென்பது கருத்து.

† இதன்பொருள்:-ஒரு தீய தொழிலைச் செய்தற்குத் துணையானவைகளைக் காணுதல் அத்தீயதொழிலைச் செய்தற்குப் பெரும்பாலும் காரணமாகும். கள்வனல்லாதவனும் ஒரு பொருளைத் திருடுதற்கு நல்ல சந்தர்ப்பம் வாய்க்கும்போது அதைத் திருடுதலுண்டு.

தொழிலைச் செய்தற்கு எவ்வளவு வாய்ப்பான சந்தர்ப்பங்கள் நேர்ந்தாலும், அதைச் செய்வதினால் அப்போதைக்கு எவ்வளவு பலன் வரத்தக்கதாயிருந்தாலும், அவர்கள் அதைச் செய்யார்கள். இதுவே தக்கது.

ஆராய்வினால் ஒரு தொழிலின் நன்மையை முற்றாக அறிதல் எப்போதுஞ் சாலாது. நன்மையென்றெண்ணிச் செய்யப்படுவது தீமையாகவும் முடிகின்றது. ஒருவன் தன்னுடைய மகன் நல்லவனாயிருக்கவேண்டுமென்று விரும்பி அவனுக்குக் கடினமான கட்டுப்பாடுகளை விதித்துவந்தால், பையனுக்கு அக்கட்டுப்பாடுகள் உவர்ப்பாக, அந்த உவர்ப்பினாலே தந்தையினுள்ள பற்றுக்கெட, அவனுடைய சொல்லைக் கடந்து, இறுதியில் விடுகாலியாதலுமுண்டு.

## ஊக்க அடக்கம்

சிலர் ஆராய்வினாற் பிழையென்று கண்டவற்றையும் அவற்றுக்குக் காரணமான ஊக்கவன்மை மிகுதியாற் கைவிடமாட்டாமல் இருக்கிறார்கள். இவர்களுக்கு மீட்சியென்ன? மீட்சிக்கு வழிகள் பலவுள. ஆயினும் அவ்வழிகளை அநுசரித்தல் பிரயாசம். ஒருவன் பொல்லாங்கு செய்தால், அதற்குப் பதிலாக அவனுக்குப் பொல்லாங்கு செய்யுமாறு பகைஊக்கமும் முதன்மை ஊக்கமுஞ் சேர்ந்து ஏவிக்கொண்டு நிற்கும். இவைகள் வலியேற முன்னமே இவைகளை யடக்குதல் எளிது. அவனுக்குத் தீமைசெய்தாற் பின்னும் அவன் தனக்குப் பொல்லாங்கு செய்வானென்ற எண்ணமும், பழிவாங்குதல் அறமன்றென்ற எண்ணமும், அவன் அறியாமையாலும் கொடுஞ்சினத்தினாலும் செய்ததைப் பொருட்படுத்த



லாகாதென்ற எண்ணமும் "கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம் வாயாற் பேர்த்துநாய் கௌவினாரீங்கில்லை" என்னும் ஆன்றோர்வாக்கின் துணையும் பழிவாங்கும் ஆசையை அடக்கத்தக்கவை. பழிவாங்காமையை, அஃதாவது பொறுமையை, ஒரு விரதமாக அநுட்டிக்க வேண்டுமென்ற தீர்மானமுமுண்டாகுமாயின், இத்தீயசெயலை விட்டு விலகுதல் இலகுவாகும். பொறுமையை விரதமாக்குதற்கு அதிலே பற்றுவைத்து அப்பற்றை வளர்த்தல் வேண்டும்.

பயிரைவளர்ப்பவன் உழுதல், பசளையிடுதல், விதைத்தல், வேலியிடுதல், நீர்ப்பாய்ச்சுதல், களைகட்டுதல், முதலிய அநேக முயற்சிகளைச்செய்து அதனை வளர்ப்பது போல, பொறுமையை வளர்ப்பவன் அதற்காகப் பல வகைப்பட்ட முயற்சிகளைச் செய்யவேண்டும். பொறுமை ஒரு நல்லகுணமென்பதை ஐயந்திரிபற உணர்தலும், பொறுமையுடையராய் வாழ்ந்த தருமராசன் முதலியோரது சரித்திரங்களை வாசித்தலும் கேட்டலும், அவர்களைப் பலமுறை நினைத்தலும், அவர்களுடைய படங்களைக் கண்முன்னே வைத்துக்கொள்ளுதலும், அவர்களுடைய புகழைப் பேசுதலும், கூடுமானால் அப்படியானவர்களோடு சகவாசஞ்செய்தலும், பொறுமையைக் கெடுக்கத்தக்க இடங்களுக்குப் போகாமையும், அதை மனத்திலே அழுத்தி அதிலே எப்போதும் விழிப்பாயிருக்கப் பயிலுதலும், பொறுமையென்ற எண்ணம் வந்தவுடனே அகங்காரம் வலிகொள்ளுமியல்பும் இதற்கு முக்கிய சாதனங்களாம்.

தீயதொழிற்கேவும் ஓர் ஊக்கம் முனைக்கும்போது அது ஒரு தகாதசெயல் என்ற எண்ணமிருக்குமாயின்,

அதை வெல்லத்தக்க வேறோர் ஊக்கத்தை யெழுப்பி அதற்குரிய தொழிலைச் செய்தல் தக்க உபாயமாகும். ஒருவன் ஒரு தீயதொழிலைச் செய்ய ஏவப்படும்போது, அவன் பந்துவிளையாட்டில் அல்லது நண்பரோடு குளத்திலே நீந்திவிளையாடுதலில் மிக்க ஆர்வமுடையவனாயின், அந்த விளையாட்டுக்குப் போகத் துணிதல் ஒரு பரிகாரம். அதனால் வரும் இன்பம் அந்தத் தீத்தொழிலால் வருமின்பத்துக்கு இணை; அவ்விளையாட்டினால் வரும் இளைப்பு அந்தத் தொழிலைச் செய்யப்போதற்குத் தடை; நண்பரோடு கலத்தலால் வரும் சாந்தம் தீத்தொழிலூக்கத்துக்கு மருந்து.

தீயதொழிலைத் தடுத்தற்கு வேறொருவழி "நாம் இதைப் பின்பு செய்வோம்" என்று காலதாமதஞ் செய்தல். வலிய ஊக்கங்களும் காலதாமதத்திற்கு இடங்கொடுக்கும். காலதாமதத்தினாலே மனவமைதி யுண்டாகும். அப்போது அத்தொழில் தகாததென்பது நன்குபுலப்பட, அதனை அருவருத்துக் கைவிடுதல் கூடும்.

### பழக்க அடக்கம்

ஒருவர் ஒரு தீயதொழிலைச் செய்யப் பழகிவிட்டால், அந்தப் பழக்கத்தை மாற்றுதல் தனித்தொழில்களைக் கைவிடுதலினும் பிரயாசமானது. ஓர் உத்தியோகத்தன் கைக்கூலிவாங்கப் பழகிவிட்டானாயின், அவனுடைய கையிலே கைக்கூலி வாங்குதற்கு ஒரு தினவுண்டாகும். அந்தத் தினவை நீக்குதற்கு முதற்பரிகாரம் கைக்கூலிக்கிடமில்லாத ஓர் உத்தியோகத்தைத் தேடுதல். அந்த உத்தியோகத்தில் அவன் இருந்துகொண்டு முட்டுப்பட்டவர்களுக்குத் தன்னுடைய பொருளை அன்போடு கொடுத்



துப் பொருட்பற்றைக் கெடுத்துக்கொடைப்பற்றை ஏற்ற வேண்டும். அவன் பிறருக்கு நன்மைசெய்ய, நன்மைபெற்றவர்கள் காட்டும் நன்றியறிவினால் உண்டாகும் மகிழ்ச்சி பரோபகாரத்திலே பற்றை வளர்க்கும். அதனாலே பர அபகாரம் கெடும். பொறுமையை வளர்த்தற்காக மேலே காட்டிய வழிகளைப் பரோபகாரப்பற்றை வளர்த்தற்குத் தக்கவாறு பொருத்தி அவைகளை அநுசரித்தல் வேண்டும். பின்பு கைக்கூலியாக வாங்கிய பொருளை அவரவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கும் விருப்பமும் வரும்.

ஒருவர் ஒரு பழக்கத்தைத் தீயதென்று கைவிட்ட பின்பு, அது இரண்டு வழியாய் நுழையப்பார்க்கும். அது ஒரு நற்செயலைத் துணையாகக் கொள்ளும்; அல்லது ஒரு நல்ல வேடத்தைப் பூண்டுகொள்ளும். அது ஒரு நற்செயலோடு சேருமாயின், அதன் நன்மையினாலே இதிலே கவர்ச்சியுண்டாகும். கைக்கூலி வாங்கலாகாதென்று கண்டு அந்தப் பழக்கத்தைக் கைவிட்டவரொருவர், ஒரு கோயிலிலே திருப்பணி நடந்துகொண்டிருக்கும்போது, கைக்கூலியை வாங்கி அந்தத் திருப்பணிக்காகச் செலவிடலாமென்று எண்ணிப் பழையபடி கைக்கூலி வாங்க விரும்பலாம். இது பிழையான விருப்பம். நன்மையோடு சேருதலினாலே தீமை நன்மையாகாது. நன்மைக்காகத் தீமை செய்யலாமென்ற கொள்கை அறநெறிக்கு மாறானது. அன்றியும் நன்னோக்கத்திற்காகக் கைக்கூலி வாங்கத் தொடங்கியவன், அதிலே கொண்ட உவர்ப்பு காலகதியில் நீங்க, தன்னுடைய சம்பாத்தியத்துக்காகவும் வாங்கத் தொடங்கிவிடுவான்.

எலுமிச்சம்பழம் பெரியோருக்குக் கொடுக்கும் பொருள் என்று சொல்லி ஒருவன் ஓர் உத்தியோகத் தருக்கு நாலைந்து எலுமிச்சம்பழத்தைக் கொடுக்க, அவர் அவைகளை வாங்குவாரானால், எலுமிச்சம்பழம் வாழைக்குலையாகி, அது பசுமாடாகி, அது பொற் கடிகாரமாகி, அது இரத்தினாபரணமாகி முழுக் கைக் கூலியாய் விடும். எலுமிச்சம்பழம், பெரியோர் ஏற்க வேண்டிய பொருள் என்னும் வேடத்தோடு வந்து, கைக் கூலியாய் நுழைகின்றது. ஒரு தீய பழக்கத்தைக் கைவிட்டால் அதன் எல்லையில் மிதித்தலும் ஆகாது.

மனத்திண்மை குறைந்தவர்கள் வலிய ஆசைகளை அடக்கத்தொடங்கினால், அதனால் வரும் மனச்சலனத் தைத் தாங்கமாட்டாமல், உள்ள வலியுங்கெட்டுத் தீய ஆசைகளுக்கு அடிமையாகி, சற்றேனும் யோசனையின்றி அவற்றின் வழிப்பட்டொழுகுவார்கள். பழிவாங்கு கிறவன் தனக்கு வருவதாகிய பொல்லாங்கைச் சிறிதும் நினையாமற் பழிவாங்குவான். காதலுக்கிடங்கொடுத்த வன் அதே சிந்தனையாகத் திரிவான்.

சரீராரோக்கியமும் சரீராப்பியாசமும் தீயவூக்கங் களை யடக்குதற்குத் துணையானவை. மனத்திண்மை குறைந்தவர்களுக்கு இவை அத்தியாவசியம்.

## போய்யடக்கம்

சிலர் ஊக்கத்தினால் வரும் ஆசையை அடக்காமல் அதனால் வரத்தக்க தொழிலைச் செய்யாதொழிகின்றனர். செய்யாமைக்குக் காரணம் மானம், அச்சம், ஆற்ற லின்மை, முதலியவற்றுள் ஒன்றேனும் பலவேனுமாம். இவற்றுள் எக்காரணத்தால் அத்தொழில் விடப்பட்ட



தாயினும், அதை ஏவும் ஊக்கம் தன்னுடைய குணத்தை எப்போதும் காட்டிக்கொண்டே யிருக்கும்.

அது ஒன்றில் வெளிப்படையாக நின்று ஆசையை யெழுப்பிக்கொண்டிருக்கும்; அல்லது மறைந்து நின்று தன் தொழிலைச் செய்யும்.

அது வெளிப்படுவதாயின், அது தலையெடுக்கும் போதெல்லாம் அதை வேறோரூக்கத்தின் துணையினால் அடக்கிக்கொண்டிருக்கவேண்டிவரும். இதனாலே ஆற்றல் சேதமாகும். மனத்திலே ஓர் ஆற்றல் நிதியுண்டு. அந்த நிதியிலிருந்தே எந்த ஊக்கமும் தொழில் செய்தற்கு வேண்டிய ஆற்றலைப் பெறவேண்டும். இரண்டு ஊக்கங்கள் ஒன்றுக்கொன்று மாறாகத் தொழில் செய்யும்போது, அவைகள் இரண்டும் இப்பொது நிதியிலிருந்தே ஆற்றலைப் பெறுகின்றன. இதனாலே மனிதனுடைய ஆற்றல்சிதைந்து பாழாகின்றது.

இனி, அந்த ஊக்கம் மறைந்திருந்து தன் தொழிலைச் செய்யுமாயின் அதனால் வருந் தீமை நேரே முரணும் ஊக்கத்தின் கொடுமையினுங் கூடியது. அது மறைந் திருந்துகொண்டு அவனுடைய ஆற்றலில் வேண்டிய அளவை யெடுத்து அவனுக்குத் தெரியாமல் அவனைக் கொண்டு தன்னுடைய காரியங்களைப் பார்ப்பித்து அவனைப் பேயனாக்குகின்றது. ஊக்கங்கள் மறைந்து நின்று தொழிற்படல் பின்னல் எனப்படும்.

ஓர் இளைஞனுக்கு வியாபாரத் தொழிலிலே மிகுந்த ஆசையிருந்தது. ஆயினும், அவன் அது தன்னுடைய நிலைக்குப் போதாததென்று நினைத்து அந்த ஆசைக்கு இடங்கொடாமல் உயர்தரக் கல்வி கற்கப்போனான். இந்த ஆசை உள்ளபடி அடங்காமல் மறைந்திருந்து

கொண்டு கல்வியைக்கெடுத்து, அவன் கற்கும்போது இளைப்பையுந் தலையிடியையும் வருவித்து, கற்றலில் அலுப்பை யுண்டாக்கியது.

கலவி ஆசையை ஒருவன் அடக்கும்போது அது அடங்காமல் மறைந்து நிற்குமாயின், அது அவனுக்குப் பெண்களுடைய கூட்டத்திலே நாட்டத்தையுண்டாக்கும். அவன் பெண்களுக்குச் சேவை செய்ய விரும்புவான்; அல்லது அவர்கள் சேர்ந்திருக்கும் கூட்டங்களில் ஊடாட விரும்புவான். இந்த விருப்பங்கள் கலவி யாசையா லுண்டாதலை அவன் சற்றேனும் உணரான்.

ஆசைகள் புறத்தடைகளால் அடக்கப்பட்டிருந்தால், அவைகள் மாறுபாடாய்த் தொழிற்படும். விவாகஞ் செய்ய விரும்பியவனுக்குப் பெண் வாய்க்காவிட்டால், இல்லற வாழ்க்கை கொடியதென்றும் பெண்கள் பிசாசுகள் என்றும் சொல்லித்திரிவான். அரசியற்சபையின் அங்கத்தவனாதலே தன் இறுதிப்பேறாக நெடுங்காலம் எண்ணிக்கொண்டு அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்துகொண்டு வந்தவன் அதற்குச் சமயம் வந்தபோது அதிலே கடுந்தோல்வியடைந்தானாயின், அரசியற்சபை கள்வருடைய சபையென்றும் அதனாலே ஊர் கெடுகின்றதென்றும் பிதற்றுவான். அதனாலே எப்படிக் கெடுகின்றதென்று அவனைக்கேட்டால், அதை நியாயவாயிலாக ஒருவாறு விளக்குவான். அந்த நியாயம் அவன் பின்பு தேடிக்கண்ட நியாயமேயன்றி உண்மையான நியாயமன்று. உண்மையான நியாயம் மறைந்திருக்க, பிறநியாயத்தைத் தேடிக்கூறுதல் சரிப்படுத்தல்* எனப்படும்.

*சரி என்பது வழி. சரிப்படுத்தலாவது நியாயவழிப்படுத்தல். அஃதாவது உள்ள நியாயம் தோன்றாதபோது ஒரு நியாயத்தைத் தேடிக்கூறுதல்.



பழிவாங்குதல் தகாததென்றறிந்தவன் பழிவாங்கும்போது அதன்நோக்கம் எதிரியைத் திருத்துதலென்பதும், படிக்கக் கள்வப்படும் இளைஞர் அரசியற் சங்கங்களிலே சேர்ந்துகொண்டு தேசசேவை கல்வியிலும் மேலானதென்பதும், சுருட்டுப் புகைத்தலை விடமாட்டாதவன் அது மலவிசர்ச்சனத்துக்குத் துணையானதென்பதும் சரிப்படுத்தல்களாம்.

ஒரு ஊக்கம் தேவைப்பொருளைப் பெறமாட்டாமல்* தடுக்கப்படும்போது, அப்பொருளோடு தொடர்புடைய வேறொரு பொருளில் † அது செல்லுதலுண்டு. ஒரு மகா வைத்தியர் எழுதுகிறார், "ஒய்வுநாட் பள்ளிக்கூட ஆசிரியராயிருந்த ஒருவர் என்னிடத்திலே வைத்தியத்துக்கு வந்தார். அவர் கிறிஸ்து சமயத்தை விட்டு நீங்கிக் கடும் நிரீச்சுரவாதியாய்விட்டார். நீடித்த கல்வியினாலும் ஆராய்வினாலுமே கடவுளில்லையென்ற எண்ணம் தமக்கு வந்ததென்று அவர் எனக்கு உறுதியாய்ச் சொன்னார். உள்ளபடி சமய நூல்களிலே அதிகமாகப் போயிருக்கிறார்தான்; பைபிளின் முதற் சருக்கத்தின் சாட்சிகளைப் பற்றி விரிவாகப்பேசி, தர்க்கமுறையாகப் பல ஆதாரங் காட்டி, தம்முடைய கொள்கையை நிலைநிறுத்தினார். பின்பு நான் அவருடைய மனநிலையை ஆராய்ந்து பார்த்தபோது, அவருடைய நிரீச்சுரவாதத்துக்குக் காரணமாயிருந்தது வேறொன்றென்பதைக் கண்டேன். அவருக்குப் பேசியிருந்த பெண் அவரோடு கூடப் படிப்பித்த ஓர் உபாத்தியாயரோடு சேர்ந்து விட்

* இதற்கு ஔவைப்பிராட்டியாருடைய பரிகாரம் "கிட்டாதாயின் வெட்டெனமற" என்பதாம்.

† இது "அவலை நினைத்து உரலை இடித்தல்" எனப்படும்.

டாள். அதனல் அவருக்கு அந்த உபாத்தியாயரிலே பெரும்பகை யுண்டானது. அந்தப் பகையை அவரிலே சாதிக்கும் வல்லமையில்லாமையால், அவர் அதை யடக்கி விட, அது அவர்களிருவரையும் முன் ஒற்றுமைப்படுத்தி நின்ற சமயத்திலே சென்றது. நிரீச்சுரவாதத்துக்குச் சார்பான அவருடைய படிப்பும், பிரமாணங்களும், நியாயங்களும் அவருக்குச் சமயத்திலே கொண்ட உவர்ப்பின் காரியங்களன்றி அதன் காரணங்களல்ல.''

சில ஆசைகள் தடைபட்டு நோய்க்குக் காரணமாகின்றன. ஒரு பெண்ணை அவளுடைய கணவனும் அவனுடைய இனத்தவர்களும் பராமுகமாக நடத்தி வந்தால், அதனலே அவளுடைய முதன்மை யூக்கம் அடக்கப்பட்டு அவள் அறியாதபடி அவளைப் பீடிக்கும். அது அவளுடைய மனத்திலே மறைந்து நின்றுகொண்டு பின்வரும் எண்ணத்தை யுண்டாக்கும்:—''எனக்கு ஏதாயினும் நோய்வந்தால், என்னுடைய கணவன் முதலியோர் என் பக்கத்திலே நின்று எனக்கு வேண்டியவற்றைச் செய்வார்கள்; என்னை அன்பாகவும், ஆதரவாகவும் பார்ப்பார்கள்; இப்படிப் பராமுகமாய் இருக்க மாட்டார்கள். எனக்கேதாயினும் ஒரு நோய் வந்தால் என்னை இவர்கள் பொருட்படுத்தாமையாலுண்டாகுந் துன்பந் தீரும்''. இந்த எண்ணம் அவளுடைய மனதிலிருத்தல் அவளுக்குத் தெரியாது. ஆயினும் இது மனத்திலே குடிகொள்ள அவளுக்கு ஒருவகையான நோய் உண்டாகும். அந்த நோய் மருந்தினல் இலகுவிலே தீரமாட்டாது. அவளில் அடக்கப்பட்டிருக்கும் அந்த ஊக்கம் திருப்தியடைந்தால் மாத்திரம் அந்த



நோய் ஒருவாறு தீரும். அறியாதார் இதைப் பேயினுடைய சேட்டையென்பர்.

காதல், அச்சம், பழிவாங்கல் முதலியவைகள் முனைத்து நிற்கும்போதெல்லாம் அடக்கப்பட்டு வந்தால், அவைகள் மனத்தைப் பீடித்து அதை அவற்றின் வழியிலே செலுத்தி அமிழ்த்திப் பிறபொருள்களின் தொடர்பை யறுத்துப் பைத்தியத்தை யுண்டாக்கும்.

அடக்கப்பட்ட ஊக்கங்கள் வலி குறைந்தவைகளாயின் கனவாகத் தோன்றித் தந்தொழிலைச் செய்யும். பசித்தவன் உண்பதுபோற் கனக்காண்பான். பழி வாங்கமாட்டாதவன் கனவிலே தன்னுடைய பகைவனேடு போர் செய்வான்;* அல்லது விழிப்பான நேரத்திலே பகற்கனக்காண்பான். அரசியற் சபைத்தெரிவிலே தோல்வியடைந்தவன், ''நான் அரசியற் சபைக்குப் போனல் அங்கே யிருக்கிறவர்களை யெல்லாங் கிறுகிறுக்க வைப்பேன். தலைவர் இன்னது சொன்னல் நான் இன்னது சொல்லி அவருடைய வாயை அடக்குவேன்'' என்று பகற்கனக் காண்பான்.

## தூய்மைசெய்தல்

பின்னல்கள் வராமற் காத்தற்கு ஊக்கங்களை நல்வழிப்படுத்தல் வேண்டும். தீய வழியிற் செல்லும் ஊக்கங்களை நல்வழிப்படுத்தினல், அவைகள் உபயோகிக்கும் ஆற்றலெல்லாம் நற்செயல்களிலே செல்லும். மரங்களை முறித்து வீடுகளைவிழுத்தி ஆட்களை அடித்துக் கொல்லும் யானையைப் பழக்கிவிட்டால், அது பெரும்பயனுள்ள அரிய வேலைகளைச்செய்யும்; இயற்கையாக நற்குணமுள்ள

* கனக்கள் சற்றே மாறியும் வரும்.

ஒரு நாட்டுமாட்டிலும்பார்க்க அந்த யானை பன்மடங்கு நயமானதாயிருக்கும். அதுபோல, பெரும் வலியுடையன வாகிய காதலூக்கம், முதன்மையூக்கம், அச்சவூக்கம், போரூக்கம்ஆகிய இவைகள் நல்வழிப்படுத்தப்பட்டால் எல்லையில்லாத நன்மையைச் செய்யும். ஊக்கங்களை நல்வழிப்படுத்தல் சீத்தல் அல்லது தூய்மைசெய்தல்* எனப்படும். தீயவழியிலே செல்லும் ஒரூக்கத்தைத் தூய்மைப் படுத்துகில் அது மட்டுப்பட்டதாயிருத்தல் வேண்டும். அது மட்டுப்பட்டபின்பு அதனோடு நற்றொழில்செய்யும் ஊக்கங்களைத் தொடர்புறுத்தல் வேண்டும். அவற்றின் தொடர்பினால் அதன் ஆற்றல் நற்றொழிலிற் செல்லும்.

கலவியூக்கத்தை விவாகம் மட்டுப்படுத்தும். ஒரு காதலனும் காதலியும் விவாகத்தினாலே கணவனும் மனைவியுமாய்விட்டால், அவர்களுடைய மனம் அதிகமாய்ப் பொருளீட்டுதலிலும் வீட்டுத் தொழிலிலும் செல்ல வேண்டிவரும். இவைகளுக்கு வேண்டிய ஆற்றல் கலவியூக்கத்தின் பாற்பட்டேவரும், அவர்களுடைய ஆற்றலிற் பெரும்பகுதியை ஆட்சிப்பண்ணிக்கொண்டிருப்பது அதுவாதலால். அன்றியும் அவர்கள் ஒருவரிலொருவர் காணும் நற்குணங்களாலும் மதிநுட்பத்தாலும் செயல் வன்மையாலும் மதிப்பும் அன்பும் ஒருவரையொருவர் பேணுந்தன்மையும் உண்டாகும். இவைகளுண்டாதற்குக் காரணமாயிருப்பது கலவியூக்கமே. ஆகவே கலவியூக்கத்தின் ஆற்றலே மதிப்புக்கும் அன்புக்கும் நயப்புக்கும் உபகாரஞ்செய்தற்கும் செல்கின்றது. கலவியூக்கம் எவ்வளவு வலியோடிருந்ததோ அவ்வளவு அதிகமாக அவர்கள் ஒருவருக்கொருவர் இதமாய் நடப்பார்கள்.

* "துவந்துவங்கள் தூய்மைசெய்து" என்பது திருவாசகம்.



தன்னுடைய மனைவி இன்பமாய் வாழவேண்டுமென்று கணவன்பாடுபட்டுப் பொருள் சம்பாதிப்பான். இவனுக்குச் சுவையான உணவையும் இவனுக்காகவேண்டிய மற்றைய வசதிகளையும் அவள் ஆவலோடு செய்துவருவாள். இப்படியாகக் கலவியூக்கம் விவாகவழிப்பட்டுக் கணவனை மனைவியின் தந்தையாக்கியும், மனைவியைக் கணவனின் தாயாக்கியும் * விடும். பிள்ளைகள் பிறந்தால் இருவரும் பிள்ளைகளிலே அன்புபாராட்டி வளர்த்துவருவார்கள். காதலூக்கம் இவ்வாறு சீர்ப்பட்டு ஒரு பெரிய குடும்பத்தைச் செம்மையாய் நடத்துதற்குக் கருவியாகிப் பெரும் பயனைத்தருகின்றது.

இவ்வாறின்றி முதலிலே பொதுப்பெண்களோடு சகவாசஞ் செய்து வந்தவன் இல்லறத்தைச் சிறப்பாக நடத்தமாட்டான். ஏனெனில், பொதுப்பெண்களோடு கூடுவோனுடைய கலவியூக்கம் சற்றேனும் தூய்மையடைதற்கு வழியின்றித் தன்வழியிலேமாத்திரஞ் சென்று பழகினமையால், அவன் விவாகஞ்செய்தபின்பும் அது தூய்மையடையமாட்டாமல் நின்று இல்லறத்துக்குவேண்டிய நல்லூக்கங்களைத் தடைசெய்து இல்வாழ்க்கையைக் கெடுக்கும்.

இப்படியாக அநேக ஊக்கங்கள் தூய்மையடைகின்றன. தற்பெருமை தூய்மையடைந்து தன்மதிப்பாகும். "நான் ஒரு பிரபு; இவன் ஓர் அற்பன்; இவன் என்னை நிந்திக்கலாமா? நான் இவனைத் தண்டிக்கவேண்டும்" என்று எண்ணுதற்குப் பதிலாக, "நான் பெரியவன்; இவன் சிறியவன்;"சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம்

* "தாய்க்குப்பின் தாரம்" என்பது பழமொழி.

பெரியோராயிற் பொறுப்பது கடனே" என ஒருவன் எண்ணுவானுயின், அவனுடைய தற்பெருமை தன்மதிப் பாய்விடும். ஒருவன் தன்னுடைய அதிகாரங்களைச் சிந்தி யாது தன்னுடைய கடமைகளைச் சிந்திப்பானுயின், தற் பெருமை தூய்மையடையும். அல்லது, அவன் தன்னு டைய பெருமையை நாட்டுதற்காகச் செல்வத்தை யேனும், கல்வியையேனும், உயர்ந்த பதவியையேனும், பெரும்புகழையேனும் பெறுதற்கு முயலுவானுயின் அம் முயற்சிக்காக அவன் தன்னையடக்கி நல்வழிப்படுத்தித் தூய்மைசெய்தல் இன்றியமையாததாய்விடும். அதனுலே தற்பெருமைக்குச் செல்லும் அவனுடைய ஆற்றலெல்லாம் இவற்றுக்குரிய ஊக்கங்களுக்குப் போய்த் தற்பெருமை யைத் தூய்மைப்படுத்தும்.

அச்ச ஊக்கத்தின் ஆற்றல் ஆராய்விற் செல்லுமா யின் அது அவ்வச்சத்திற்குக் காரணமாயிருந்த அபா யத்தை நீக்குதற்கு வழியாகும். ஒருவன தோணியிலே போகும் போது பெரும்புயல் வந்து தோணிக்கபாயஞ் செய்யில், அந்தநேரத்தில் அச்சம் மிகுந்து "நான் சாகப்போகிறேன்" என்று சொல்லித் தலையிலே அடித்தற்குப்பதிலாக, தப்புதற்கு வேண்டிய வழியை ஆராய்ந்தறிந்தாற் பயம் குறையும்; சிவமோசமும்வராது. அபாயமான சமயத்திலே தற்காப்புக்கு வேண்டிய வழி களை விரைவாய்க் கண்டுகொள்ளும் ஆற்றல் அவசிய மானது. அது பயிற்சியால் முற்றவேண்டியது. அபாய மான விளையாட்டுக்களிலே சேர்ந்து விளையாடும் போது இந்தப் பயிற்சி யுண்டாகும். சிங்கம் முதலிய கொடிய மிருகங்களை வேட்டையாடப் போகிறவர்கள் இந்தப் பயிற்சியையும் கருதுகின்றுர்கள் போலும்.



போரூக்கம் பலவாறு தூய்மையடையும். ஒருவன் தன்னிலேயுள்ள குற்றங் குறைகளைப் பகையாகக் கருதி அவைகளோடு போர்செய்து போரூக்கத்தைத் தொழிற் படுத்தலாம். உதாரணமாக, மதுபானத்தைப் பழகிக் கொண்டவன் அப்பழக்கத்தை விடுவது பிரயாசமாகத் தோன்றினல், அதைத் தன் பகையாகக் கருதி "நானே இதற்கிடங்கொடுக்க மாட்டேன்," என்று துணிபுசெய்து அப்பழக்கத்தோடு போர்செய்யலாம் தொழில்செய் யும்போது வருந் தடைகளைப் பகையாகக் கருதல் சிறுவர் களிலுமுண்டு. காற்ருடியை ஏற்றுகிறபொழுது அது ஏரு மல் விழுந்துகொண்டிருந்தால், "நான் இந்தக் காற் ருடியை ஏற்ருமற் போவதில்லை" என்று சிறுவர்கள் சொல்லுதல் இத்தன்மையதாம்.

ஆராய்வூக்கம் கல்விவிருத்தியிலும், அருவருப்பூக்கம் தீயவற்றை வெறுத்தலிலும், உணவூக்கம் கொண்டாட் டங்களிலே பிறருக்கன்னங்கொடுப்பதிலுஞ் சென்று தூய்மை யடைகின்றன.

### அமைதல்

தீய தொழில்களினின்றும் விலகுதற்கு வேறொரு வழி தாய்தந்தை முதலியோருடைய கட்டுப்பாட்டுக்கு மகிழ்ச்சியோ டமைதல் ஒருவன் தானே தன்னைத்தடுத் தலிலும் பார்க்கப் பிறராலே தடுக்கப்படுதல் இலகு. பயிரிலே விழப்போகிற ஒரு குழு மாட்டை இழுத்துப் பிடித்துக் கொண்டு நிற்றலிலும்பார்க்க,முனைத்துநிற்கும் ஓர் ஊக்கத்தை ஒருவன் தானே அடக்குதல் அதிகம் பிர யாசமானது. ஆதலால் அவனுக்குத் துணை வேண்டும். இந்தத் துணையைச் செய்பவர்கள் தாய், தந்தை, உபாத்தி

யாயர், அரசன் முதலிய பெரியோர்கள். இவர்கள் இவனைக் கட்டுப்படுத்த முயலுகிறார்கள். இவர்கள் அறிவினால் கூடியிருத்தலினாலும், இவனுடைய நன்மையையே விரும்புதலாலும், இவர்களுக்கமைதல் நல்ல தொழிலைத் தெரிவு செய்தற்கு முக்கிய சாதனமாகும். கட்டுப்பாடு செய்கிறவர்களும் அன்பினாலே வசப்படுத்த முயலுதல் உத்தமம்; ஆற்றாப்பட்சத்தில் மாத்திரம் அதிகாரத்தாற் கட்டுப்பாடுசெய்தல் தகும். கட்டுப்படவேண்டியவர்களும் கட்டுப்பாட்டின் நயத்தை அந்நேரம் அறிய மாட்டாமலிருந்தாலும் அதற்கிணங்கிச் சந்தோஷமாக அமைதல் தக்கது. சிறியோரைக்கொண்டு ஒருதொழில் செய்வித்தற்கு மிகவும் ஓர் இலகுவானவழி அந்தத் தொழிலிலே அவர்களுக்குக் கவர்ச்சியை யுண்டாக்குதல். இப்படியின்றி வலாற்காரம் அதிகமாக உபயோகிக்கப் பட்டு வந்தால் உள்ளதுங் கெட்டுப்போம்; ஆட்சியழிந்து போம்; மருந்து நோயிலுங் கொடியதாய்விடும். ஆதலால் தாய் தந்தை முதலியோர் மிக ஆழ்ந்த யோசனையோடும் அவதானத்தோடும் அன்பினோடும் கட்டுப்பாடு செய்தல் முறைமையாம்.

## வினாக்கள்

க. ஊக்க முரணுவது யாது?
உ. அதிகமாய் முரணும் ஊக்கங்களெவை (உ)?
ங. ஆராய்வுத் தெரிவிலுள்ள குறைவென்ன?
ச. தீய தொழிலுக்கேவும் ஊக்கத்தை அடக்குதற்குச் சுலபமான வழி யாது?
ரு. விடப்பட்ட பழக்கங்கள் எவ்வாறு வந்து நுழையும் (உ)?



சு. பொய்யடக்கத்தின் இருவகைகளெவை? இவற்றுட் கொடியதெது?
எ. பொய்யடக்கத்தினாலே எவ்வகையான நோய்கள் உண்டாகும்?
அ. தூய்மை செய்தற்குச் சகாயமான ஊக்கமெது யாது?
கூ. அச்சம் எவ்வாறு தூய்மையடையும்?
க0. பழக்கங்களைக் கைவிடுதற்கு உபாயங்களெவை?

# எட்டாம் அதிகாரம்

## மறைதொழில்

மறைதொழிலின் இலக்கணம்—கனவு—பகற்கனவு—எண்ணுதெழுதுதல்—அஞ்சனம் பார்த்தல்—வசியம்—முழுவசியம்.

### மறைதொழிலின் இலக்கணம்

நாங்கள் செய்யுந் தொழில்களுட் பெரும்பாலானவற்றை நாங்கள் அறிந்தே செய்கின்றோம். ஒரு விஷயத்தை எண்ணும்போதும், ஒரு தொழிலைச் செய்யும்போதும், அந்த எண்ணமுஞ் செயலும் பொதுவாக எங்களறிவுக் கெட்டாமற்போவதில்லை. சிறுபான்மையாக, எங்கள் எண்ணங்களும் தொழில்களும் புத்திக்கு அதீதமாகின்றன. இப்படி அதீதமாகுந் தொழில்கள் மறைதொழில்கள் எனப்படும். தொழின்மறைவுக்குக் காரணம் அகமுயற்சி மறைந்து நின்று தொழிற்படுதலாம்.*

நாங்கள் ஒரு விஷயத்தைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கும்போது, வேறொன்றைப்பற்றிய எண்ணம் எங்களுக்குத் தெரியாமல் வந்து புகுதலுண்டு. படிப்பிலே விருப்பமில்லாத மாணாக்கன் படித்துக்கொண்டிருக்கும்போது அன்றிரவு கூத்துக்குப் போதலைப்பற்றிய எண்ணம் தானாகவே புகுந்து அதற்காக வேண்டிய ஏற்பாடுகளை யோசிக்கப்பண்ணும்.

கள்ளுண்டவனொருவன் கள்ளுண்ணல் தீயதென்று கண்டு, அதிலே வெறுப்புக்கொண்டு கள்ளுண்ணாவிரதம்

* அகமுயற்சி மறைந்து தொழிற்படுதல் ஆறாம் அதிகாரத்தில் விளக்கப்பட்டது.



பூண்டானாயினும், அவன் அதிலே முன் வைத்தபற்று அழியாமல் மறைந்திருந்தது. இதனாலே, ஒரு நாள் உச்சிப்போதிலே, புகையிலைச்சுருட்டு விலைப்படுங் கடைகள் கிட்ட இருக்கவும், கள்ளுக்கடைக் கப்பாலிருக்குங் கடை ஒன்றுக்குச் சுருட்டு வாங்கப்போனான். கள்ளுக்கடைக்கெதிரே போனபோது, அவன் கள்ளை அருவருத்தானாயினும், அங்கு நின்ற தனது நண்பனைச் சந்திக்கும்பொருட்டு அங்கு சென்றான். அங்கே அவனுடைய நண்பன் கள்ளுண்ணுமாறு வேண்டுதல் செய்தபோது, கள்வேட்கை வெளிப்பட்டு அவனைக் குடிக்கப் பண்ணியது. சமீபத்திலிருக்கும் சுருட்டுக்கடைக்குப் போகாமல் கள்ளுக்கடைக்கப்பாலிருக்கும் கடைக்குப் போனதின் உண்மையான நோக்கம் கள்ளுண்ணலேயாம். ஆயினும் அவன் அதை அறியான்.

சிலர் பழிவாங்குதல் தீய செயலென்றுணர்ந்து அதை வெறுத்தாராயினும், பழிவாங்கும் ஆசை அவர்களை விட்டு நீங்காமல் மறைந்து நின்று தொழிற்படும். அப்போது அவர்கள் தங்கள் பகைவர்களில் இரங்குகிறவர்கள்போல எண்ணி அவர்களைத் திருத்துவதே நோக்கமாகக்கொண்டு தண்டிக்கிறவர்கள்போல, பழிவாங்குகிறார்கள்.* இப்படியாக, அநேக செயல்களின் உண்மையான நோக்கம் எங்கள் அறிவுக்கெட்டுவதில்லை.

எங்கள் எண்ணங்களும் விருப்பங்களுமே யன்றிச் செயல்களுஞ் சில நேரங்களிலே நாங்கள் அறியாமல் நடைபெறுகின்றன. இவைகள் பெரும்பாலும் பழக்கச் செயல்கள். எண்ணங்கள் பிறவழியாற் செல்லும்போது

* அப்பகைவர்கள் பிறருக்குத் தீங்குசெய்தபோது அவர்களைத் திருத்தாமை இவர்களுடைய நோக்கம் திருத்துதலன்றென்பதைக்காட்டும்.

எங்களுடைய வழக்கமான செயல்களை நாங்கள் ஒழுங்காகச் செய்து விடுகிறோம். பிறவழிப்பட்ட எண்ணம் திரும்பிவந்த பின்னரே அச்செயல்கள் எங்களாற் செய்யப்பட்டதை அறிகிறோம்.

இவைகளே யன்றிச் சிலவகைத் தொழில்கள் இயல்பாகவே நனவறிவுக் கெட்டாமல் நிகழ்கின்றன. இவற்றுள் முக்கியமானவை கனவு வகைகள்.

## கனவு

தூங்கும்போது எண்ணம் வரையறைப்படாமையால், மனிதர் நீரில் நடப்பதும் காற்றிற் பறப்பதும், விலங்குகள் பேசுதலும் இயல்பானவைகளாகத் தோன்றும். சில கனுக்கள் விழித்தபின்பு நினைப்பிலே தெளிவாயிருக்கும்; வேறு சிலவற்றிற் பெரும்பாகமேனுஞ் சிறுபாகமேனும் நினைப்பில்லாமற் போய்விடும். ஒவ்வொரு காரியத்துக்குங் காரணமுண்மையால், கனுக்களுண்டாதற்குத் தக்க காரணங்களிருத்தல் வேண்டும். சிலவகையான கனுக்களின் காரணங்களை யறிதல் அவசியம். நனவிலே யுண்டான ஆசை, பகை, அச்சம் முதலியவை கனவிலே தீருகின்றன. இவற்றுட் சில அறிவுக்கெட்டாமல் நின்றுகொண்டு பலவிதமான வேதனைகளையும் பீடைசெய்யுஞ் சிந்தனைகளையும் ஓயாத் தலையிடியையும் போலிக்காட்சிகளையும் உண்டாக்கி மனிதனை இடர்ப்படுத்துகின்றன. கனுக்களின் பொருளை அறியத்தக்கவர்கள் கனுக்காண்போரைத் துன்பப்படுத்தும் மனச்சலனங்களை யறிந்து அவற்றுக்குப் பரிகாரஞ் செய்கிறார்கள்.

நெடுங்காலம் பரீட்சையிலே தவறிய மாணுக்கர்



சித்தியடைந்ததாகக் கனுக்காண்பர். தன்பகைவனுக் கஞ்சியிருப்பவன் பகைவனாலே அல்லது பிறராலே அல்லது ஒரு மிருகத்தினாலே ஊறுபடுத்தப் பட்டதாகக் கனுக்காண்பான். கனுக்கள் ஆசைகளையும் மனவருத்தங்களையும் விகற்பமாகக்காட்டுதலுண்டு. அரசியற்சபைத் தெரிவிலே தோல்வி வருமென்றஞ்சுபவர் ஒருயானையினாலே துரத்தப்பட்டுப் பிடிபட்டு மிதிக்கப்படுவதாகக் கனுக்காணுதல் கூடும். கனவிலே அவ்வவ்வாசைகளுஞ் சுவைகளுந் தோன்றுதல் நியமமேயன்றி அவற்றின் சந்தர்ப்பங்கள் தோன்றுதல் நியமமன்று.

கனுக்களிலே அரிய அகத்தொழில்கள் நிகழ்தலுமுண்டு. ஒரு நுட்பமான கணக்கைச் செய்தற்கு நெடுநாளாக முயன்ற ஒருவர் அதைக் கனவிலே செய்து முடித்தல் கூடும். இது எப்படியெனில், அந்தக் கணக்கை ஆராய்ந்துகொண்டு போக, அதிலுள்ள சிக்குகள் படிப்படியாகத் தீரும்; அதை நிறைவேற்றுதற்கெழுந்த அகமுயற்சி மறைந்துநின்று உறக்கத்திலும் தொழில் செய்யும்; அக் கணக்கு முற்றாகத் தெளிவாகும் சமயம் உறக்கநேரமாயின், அது கனுவிலே முடிவாகும். இப்படியே மிகவும் அகன்ற ஆழமான சாத்திரக் கற்பனைகள் மறைதொழிலின் பயனாக வடிவெடுத்துத் தோன்றும் என்பது பேரறிஞர்களது கொள்கை. ஒரு புலவர் ஒருசெய்யுட்பிரபந்தம் முழுவதையும் கனுவிலே செய்து முடித்தாரென்று சொல்லப்படுகிறது.

## பகற்கனவு

தூக்கத்திலேயன்றி நனவிலுங் கனவு வருதலுண்டு. இதுவும் தீராத ஆசைகள் கவலைகள் முதலியவற்றாலுண்

டாவது. இது நனவிலே வருதலால், கனாவிலுண்டாகும் போலித்தோற்றங்கள் இதிலே உண்டாகமாட்டா. பகற்கனாவை மனப்பால் குடித்தலென்றும், ஆகாயக்கோட்டை கட்டுதலென்றும் சொல்வர். பார்ப்பான் ஆகாயக்கோட்டைகட்டி அரிசிப்பானையைப் புடைத்ததும், மோர்க்காரி மோர்ப்பானையை யுடைத்ததும், கண்ணாடிவியாபாரி கண்ணாடிப்பாத்திரங்களை யுடைத்ததும் பகற்கனாவினால் நேர்ந்தவைகளாம்.

பகற்கனா சிறுவர்களுக்கு அதிகமாய் வரும். அவர்களுடைய மனம் கல்வியாலேனும் உலக அநுபவத்தாலேனுங் கட்டுப்படாமையால், அது வேண்டியவாறு தடையின்றி எல்லாவழிக்கும் செல்லும். தங்களை மற்றவர்கள் மெச்சவேண்டுமென்றும், தங்களைச் சமர்த்தர்களாகக் காட்டவேண்டுமென்றும் அவர்கள் ஆசைப்படுவார்கள். இந்த ஆசைகள் தடைபட்டால் இவைகள் அவர்களுடைய பகற்கனாவிலே நிறைவேறும்.

முதியோர்களுக்குள், சோம்பருக்கு எந்நேரமும் பகற்கனா வரும்; மற்றவர்களுக்கு ஓய்வானநேரத்திலும் இரவிலே நித்திரை வராத நேரத்திலும் வரும். ஒருவன் விருப்பமில்லாத வேலையைச் செய்ய நேர்ந்தால், அவனுக்கு எந்தத் தொழிலிலே அதிகம் பற்றுண்டோ அந்தத்தொழிலிலே மனம்சென்று பகற்கனாவை ஆக்கும்.

முதியோருக்கு வருஞ் சிலவகையான பகற்கனாக்கள் மிகப்பொல்லாதவை. வலிகூர்ந்த ஆசைகளை அவர்கள் அடக்கிவரும்போது அவைகள் அடிக்கடி பகற்கனாவில் வரும். இந்தப் பகற்கனாக்கள் படிப்படியாக நீடித்து இறுதியிலே இடையறாமல் நின்று கொள்ளும். அப்போது, வெளிப்பொருள்களிலே புலன் செல்லாது. இத



னாலே, அவர்கள் உலகத்தைமறந்து, கனவைமெய்யென்று நம்பிப் பைத்தியகாரராகின்றனர்.

## எண்ணாதெழுதுதல்

சிலர் பிற விஷயத்திலே மனத்தைச் செலுத்திக்கொண்டிருக்கும்போது, எழுத்தாணியினால் ஏதாயினும் எழுதிக்கொண்டிருப்பார்கள். மனம் பிறவழிப்பட்டபடியால், அவர்கள் எழுதுவது அவர்களுடைய அறிவுக்கெட்டாது. அவர்கள் எழுதியதை வாசித்துப் பார்த்தால் அது அவர்களிலே யடங்கியிருக்கும் ஆசைகளின் பிரேரகத்தால் எழுதப்பட்டதென்பது புலப்படும். எழுத்தாணிகொண்டு எழுதமாட்டாதவர்கள் இலகுவாயெழுதுதற்காக இயற்றப்பட்ட கருவி * கிடைத்தால் அதைக்கொண்டு எழுதுவார்கள். தரகு தொழில் செய்யும் ஒருவர் செய்யுளியற்றல் பெண்டுகளுடைய தொழிலன்றி ஆடவர்க்குரிய தொழில் அன்று என்று சொல்லி அதிலே உவர்ப்புள்ளவர்போலத் தம்மைக் காட்டிவந்தார். சிலகாலத்தின்பின் அவர் படுக்கையிலிருந்தெழுதற்குமுன் நித்திரைச் சோப்பத்தோடு கிடக்கும்போது செய்யுள்கள் தாமாகவே அவருடைய மனதுக்குவந்தன. அவைகளை அவர் ஒவ்வொருநாளும் எழுதிக்கொண்டு வந்தார். எழுதியபின்பு அவைகளை அவர் சீராக்கி வாசித்தபோது அவைகள் வடிவான பாடல்களாயிருந்தமையால் அவைகளைப் பத்திரிகைகளுக்கனுப்பி அவைகளுக்காகப் பணமும் பெற்றார். இந்தப்பாடல்களை அவர் பாடியதும் மறைதொழிலேயாம்.

* இது ஆங்கிலத்தில் "ப்ளாஞ்செற்" எனப்படும்.

## அஞ்சனம்பார்த்தல்

சிலர் * அஞ்சனத்தை மிக அவதானமாய்ப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, முதலிலே முகில்மறைப்புப் போன்ற ஒன்று தோன்றும். அந்த முகில்மறைப்பு நீங்க அதிலே தெளிவான காட்சிகள்தோன்றும். சில மனிதர் அல்லது பிறபிராணிகள் வருதலும், போதலும், சிலதொழில்களைச் செய்தலுங் காணப்படும். இந்தக் காட்சிகள். அஞ்சனகாரனுடைய வசீகரிப்பினாலே உண்டாவன. மனம் அவனுக்கு வசப்பட்டமையால், அது அவன் விரும்பியவற்றைக் காணும்.

## வசியம்

ஒருவர் சொல்லுவதை நாம் நம்புகில், அவருடைய சொல் எம்மறிவுக்குப் பொருந்துவதாயிருத்தல் வேண்டும். ஒருவர் சொல்லுவதை நாம் செய்யில், அந்தச் செய்கை நீதியானதாயேனும் எமக்கு நன்மைபயப்பதாயேனும் இருத்தல்வேண்டும். இப்படியின்றி, ஒருவர் சொல்லுவதை ஒரு நியாயமுமின்றி நாம் நம்புவோமாயினும், அவர் செய்யச்சொல்லுவதை ஒருவித ஆராய்வுமின்றிச் செய்வோமாயினும் நாம் அவருக்கு வசியப்பட்டவர்களாதல் வேண்டும். அஃதாவது, எங்களறிவுக் கெட்டாமல் எங்கள் மனம் அவருக்குக் கட்டுப்பட்டிருத்தல் வேண்டும். ஆதலால் வசியப்படுதலும் மறைதொழிலாம்.

வசியத்துக்குக் காரணம் மதிப்பு. ஒருவன் மதிக்கும் ஆற்றல்கள் வேறொருவனிற் சிறந்துவிளங்கு

* முழுவசியநிலைக்கு இலகுவில் வரத்தக்கவர்களுக்கு இது சித்திக்கும்.



மாயின், இவன் அவனுக்கு வசியப்படுவான். பிற ஆற்றல்கள் எவ்வளவு மேலானவைகளாயினும் இவன் மதியாதவைகளாயின், அவற்றினாலே இவன் வசியப்படான். மதுபானத்திலே விருப்பமுள்ளவனை வசியப்படுத்துகில், எவ்வளவு பருகினாலும் வெறிகொள்ளாத ஆற்றலும் பிறர் குடித்தற்குவரையாது கொடுக்கும்வள்ளன்மையும் இன்றியமையாதவைகளாம். ஈசுரபத்தி, நல்லொழுக்கம், கல்வியறிவு ஆகிய இவற்றால் எவ்வளவு சிறந்தவனாயினும், அவ்விருதன்மையும் பொருந்தாதவன் மதுபானியை வசீகரிக்கமாட்டான். உற்சாகமான தோற்றமும், கூரிய பார்வையும், அழகானவுடையும், உயர்ந்தபதவியும், நல்லபேரும் வசீகரத்துக்கு எப்போதும் துணையானவை. விஷயம் விளங்காமையும, இளமைப்பருவமும், அநுபவக்குறையும், உடற்குறைமனக்குறைகளும் வசியப்படுதற்குச் சாதகமானவை.

அறிவிற் குறைந்தவர்கள் பெருந்தொகையினராயின் அவர்கள் தம்மை வசீகரிக்க வந்தவர்களையும் வசீகரிப்பார்கள். கேட்போரை வசீகரித்தற்காக ஒருவர் பிரசங்கஞ் செய்யும்போது, கேட்போர் அவர் சொல்லுவதை அவமதிப்பதாகக் குறிப்பிட்டால், அவருடைய மனம் தளர்ந்துபோம். இப்படியே, அறிவிற்குறைந்தவர்கள் பெருந்தொகையினராயின், அவர்கள் ஒருகோயில் புதுமையுள்ளதென்றுசொன்னால், அது எவ்வளவு தவறாயிருந்தாலும், அது நம்பப்படுகிறது. சிலவகையான சவர்க்காரங்களும் தேயிலைகளும் மிக நயமானவைகள் என்பது பத்திரிகைகளிலும் தெருக்களிலும் காணப்படும் விளம்பரங்களின் தொகை மிகுதியால் நம்பப்படுகின்றது.

முழுவசியம்

ஒருவரிலுள்ள மதிப்பேற, அவருககு வசப்படுதலும் ஏறும். வசப்பட்டவனுக்குத் தெரியாததெதையும் வசியகாரன் சொன்னால், அவன் தடையின்றி நம்புதல் வழக்கம். பூரணமதிப்புண்டாகி வசியம் முற்றிவிட்டால், இயற்கைக்கு மாறானவைகளையும் அவன் நம்புவான். வேப்பங்காய் இனிக்குமென்று வசியகாரன் சொன்னால், அதை நம்புவான். அவனுக்கு வேப்பங்காயைத் தின்னும்படி கொடுத்தால், அதைத் தின்றுவிட்டு "இது இனிப்பாயிருக்கிறது" என்று சொல்லுவான். இந்த வசியம் முழுவசியமெனப்படும்.

மதிப்பு எவ்வளவிருந்தாலும் முழுவசியம் தானாக உண்டாக மாட்டாது. வசீகரிப்பவனுடைய சாமர்த்தியமும் அதற்கு இன்றியமையாதது. முருகர் என்பவர் வசீகரப் பயிற்சியிற் கைவந்தவராயின், அவர் இராமர் என்பவரைப் பார்த்து, "இமைக்காமல் என்னையே பார்த்துக்கொண்டு நில்; கைகட்டு", என்று சொல்லி அப்படியே செய்விப்பர். பின்பு "உன்னுடைய கைகள் ஒன்றையொன்று இறுகப்பிடித்துக்கொண்டன; நீ கைகளை நீட்டமாட்டாய்" என்று தைரியமாயுந் துணிவாயுஞ் சொல்லுவார். இராமர் கையை நீட்டிப் பார்க்கும்போது நீட்டமுடியாவிட்டால் அவர் முழுவசியத்தில் அகப்படுகிறவராய் விட்டார் என்பது நிச்சயமாகும். முருகருடைய பார்வையும் பேசுந்தொனியும் சகாயமாயிருந்தமையால் வசீகரம் விரைவில் அநுகூலமாயது.

இராமர் தம்முடைய கைகளை நீட்டமாட்டாமலிருத்தலைக்கண்டு முருகருடைய ஆற்றலை வியந்து



அவருக்கு இன்னும் அதிகம் பணிவுள்ளவராகிறார். முருகர் அவருக்கு வேறு சில கட்டளைகள் செய்து முற்றுகப் பணியச்செய்த பின்பு, "கண்ணை மூடிக்கொண்டு நாற்காலியிலே சாய்ந்து கிடவும்" என்பார். இராமர் அப்படியே கிடக்கும்போது "உமக்குச் சோர்வுண்டாகிறது; நீர் உம்முடைய அவயவங்களை அசைக்கமாட்டீர்; நீர் உறங்குகிறீர்" என்பார். அப்போது முருகரல்லாமல் வேறு யார் கூப்பிட்டாலும் இராமர் பேசமாட்டார்; உறங்குகிறவர் போலவே யிருப்பார். ஆயினும், அது உறக்கமன்று. முருகர் சொல்லுவதெல்லாம் இவருக்குக் கேட்கும். அவர் சொன்னதெல்லாம் இவர் செய்வார். இராமருடைய மனம் முழுவதும் முருகரிலேயே படிந்திருத்தலால், மற்றவர்கள் சொல்லுவதொன்றும் இவருக்குக் கேளாது. இது எதுபோலுமெனில், குழந்தை நோய்வாய்ப்பட்டிருக்கும்போது நித்திரைசெய்கின்ற தாய்க்கு வேறொன்றுங் கேளாமற்குழந்தையின் அழுகுரல்மாத்திரம் கேட்பதைப் போலும். இராமருடைய இந்த நிலை முழுவசியநிலையாம்.

தொடக்கத்திலே இராமரிடத்தே அற்பமாயிருந்த பணிவு, முருகருடைய சாமர்த்தியத்தினாலே, முழுவசிய நிலையை அடைந்தது. இராமர் முருகருக்கேயன்றி அவர் விரும்பும் எவருக்கும் அமைவார். இராமர் கண்மூடாமலிருப்பாராயின், ஒருவேற்றுமையுமின்றி மற்றவர்களோடு பேசிக்கொண்டேனும் உலாவிக்கொண்டேனும் பிறதொழில் செய்துகொண்டேனும் இருப்பார். ஆயினும் முருகர் இட்டகட்டளைக்கு உடனே அமைவார்.

வசியம் சற்றேகுறைந்த நேரத்திலே இராமர் முருகருடைய கட்டளையை மீறுதற்கும் விரும்புவார். ஆயி

னும் அவர் மீறிக்கொள்ளமாட்டார். "நீர் அந்த ஆசனத்தை விட்டெழக்கூடாது" என்று முருகர் கட்டளையிட்டால், இராமர் எழுந்துநிற்க முயன்றாலும் உடம்பிலுள்ள தசைநார்கள் எழுதற்கு இடங்கொடா.

வசியநேரத்திலே பணிவூக்கத்தினும் வலிய ஊக்கமொன்று முனைத்தெழவேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தால், பணிவூக்கம் அடங்கிவிடும்; வசியம் அழிந்துபோம். "அந்த ஆசனத்தை விட்டெழக்கூடாது" என்று முருகர் கட்டளையிட்டபின்பு, இராமர் இருக்கிற வீட்டுக்கு நெருப்புவைத்தால், உயிரைக் காப்பாற்றுதற்காக அச்சவூக்கமெழுந்து, பணிவூக்கத்தை நசித்து, வசியத்தைக் கெடுத்து, இராமரை ஓடப்பண்ணும். அல்லது, இராமருடைய அறப்பற்றுக்கு மாறான தொழில் செய்யுமாறு முருகர் ஏவினாலும் அறப்பற்றின் வன்மையால் வசியம் கெடும்.

முருகர் வசியநேரத்திலே இட்ட கட்டளைகளை, வசியம் நீங்கியபின்பும், இராமர் தவறாமற் செய்வார். வசியநேரத்திலே சொல்லப்பட்டவைகள் வசியம் நீங்கியபின்பு பெரும்பாலும் நினைப்பிலிரா. நினைப்பில் இல்லையாயின் அவர் அதைச்செய்வதெவ்வாறெனில், ஒருதொழில் செய்தற்காக எழும் அகமுயற்சி அத்தொழில் நிறைவேறும் வரையும் நிலைத்துநிற்கும் என்பது முன்னே கூறப்பட்டது.* அப்படியே வசியநேரத்திலே கிடைத்த கட்டளையை நிறைவேற்றுதற்கெழுந்த அகமுயற்சி வசியம் நீங்கியபின்புந் தொழிற்பட்டுக் காரியத்தை நிறைவேற்றும்.

* ஆறாம் அதிகாரத்திற் காண்க.



ஒருநாள் ஒருவர் முழுவசியநிலையில் இருந்தபோது, வசியகாரர் "நான் என்னுடைய மூக்கை ஐந்துமுறை தொட்டபின்புதான் நீ உன்னுடைய கையை நீட்டுவாய். அதன்பின் நீ எழுந்து பூதருடைய மேலாடையிலே ஒரு முடிச்சு முடிவாய்" என்று சொல்லிவிட்டு வசியத்தை நீக்கினார். வசியகாரர் சொன்னதொன்றும் அவருக்குத் தெரியாது. ஆயினும், அவர் கையை நீட்டமாட்டாமலே யிருந்தார். வசியகாரர் இடைக்கிடை தம்முடைய மூக்கைத்தொட்டார். ஐந்தாம்முறை தொட்டதும், அவர்எழுந்து கையைநீட்டிப் பூதரிடம்போய் அவரைக்கெஞ்சி அவருடைய உத்தரவுபெற்று, மேலாடையிலே ஒருமுடிச்சு முடிந்தார். "ஏன் முடிச்சுமுடிகிறாய்" என்று கேட்டபோது, "இவர் ஒருகாரியம் செய்யவேண்டியிருக்கிறது; அதை மறந்து போகாமைக்காக முடிச்சுப்போட்டேன்" என்றார். அவர் பொய்சொல்லவேண்டுமென்று விரும்பி இதைச் சொல்லவில்லை. அந்நேரம் அவருக்கு இதுதான் காரணம்போலத் தோன்றியது. உண்மையான காரணம் தெரியாதபோது மனத்திலே தோன்றுங் காரணத்தைச் சொல்லும் இம்முறை சரிப்படுத்தல்* எனப்படும்.

வசியநேரத்திலே செய்த கட்டளையை வசியம் நீங்கியபின்பு மறவாதவர்கள் அக்கட்டளையை மீறவிரும்பினால், அதை நிறைவேற்ற எழுந்த அகமுயற்சியினாலே அவர்களுடைய மனஞ் சலனப்படும். † அந்தக்கட்டளைக்கமைந்தபின்பே அந்தச் சலனந்தீரும்.

* இதன்விரிவு ஏழாம் அதிகாரத்தில் உள்ளது.

† ஒரு பொருளை எடுக்கப்போனவர் வேறொரு தொழிலிற் புலன் சென்றமையால் அதை யெடுக்க மறந்தாராயின் உண்டாகும் மனச்சலனத்தைப் போல்வது.

### வினக்கள்

க. மறை தொழிலின் காரணம் யாது?

உ. எண்ணுதெழுதுதல் நிகழுதல் எவ்வாறு?

ந. அஞ்சனம் பார்த்தற்கு துணையாய் நிற்பதெது?

ச. வசியத்துக்கும் முழுவசியத்துக்கும் உள்ள வேற்றுமை யாது?

ரு. முழுவசியத்தைக் கெடுக்கத்தக்கது எது?

சு. முழுவசிய நிலையிலே செய்யப்பட்ட கட்டளைகளுக்கு வசியம் நீங்கியபின் அமைதல் எவ்வாறு?

# ஒன்பதாம் அதிகாரம்

## தாக்கம்

வேதனை—வேதனை விதிகள்—இன்பவாதம்—மிச்சிர வேதனை—சுவையின் நோக்கம்—சுவையின் இலக்கணம்—சுவையின் வகை—கோபமும் அச்சமும்—அன்பு—கலப்புச் சுவை—சுவையின் பயன்.

### வேதனை

தொழில் ஆரம்பமாகி நடைபெறும்போதும் அது நிறைவேறும்போதும் இன்பமுண்டாதலும், அதற்குத் தடைவந்தாலும் கைவிடவேண்டி வந்தாலும் துன்பமுண்டாதலும் இயல்பு. இவ்வின்பதுன்பங்கள் வேதனைகள் எனப்படும்.

மனிதன் விழிப்பாயிருக்கும்போது பலவகையான தொழில்களைச் செய்கிறான். கனக்காணும்போதும் மனம் தொழில் செய்கின்றது. ஆகவே முழு உறக்க நிலை ஒழிந்த மற்றைய நிலைகளிலே மனிதன் தொழில் செய்யாத நேரமில்லை. தொழில் செய்யும் போதெல்லாம் இன்பம் அல்லது துன்பம் தோன்றுமாதலால், நித்திரை நேரம் தவிர்ந்த நேரமெல்லாம் மனிதனை ஏதாயினும் ஒரு வேதனை தாக்கிக்கொண்டிருக்கும்.*

கண் காது முதலிய பொறிக்கருவிகள் தொழில் செய்யும்போது உண்டாகும் இன்பதுன்பங்கள் ஒருவகையானவை. அவற்றின் தொழிலுக்குப் பொருத்தமான ஒளி ஒலி முதலியவற்றால் இன்பமும், பொருந்தாதவற்றால் துன்பமும் உண்டாகும். இவ்வின்பதுன்பங்கள் விடய வேதனைகள் எனப்படும்.

* சில சமயங்களிலே வேதனை மிக அற்பமாய் அநுபவத்துக் கெட்டாததாய் இருக்கும். இதனை ஆன்றோர் பொதுநிலை என்பர்.

விளக்கொளி நிலவொளி முதலிய மட்டான ஒளிகளும் அழகான காட்சிகளும், மணியோசை குழலோசை முதலிய ஒலிகளும், முல்லை மல்லிகை சந்தனம் பனிநீர் முதலியவற்றிலிருந்து வரும் நாற்றமும், நல்லுணவுப் பொருள்களின் சுவையும், குளிர்மையான காற்று பசுமையான மெத்தை முதலியவற்றின் பரிசமும் இன்பத்துக்குக் காரணமானவை.

மின்னலொளி இருட்டொளி முதலிய ஒளிகளும், இரைச்சல் முழக்கம் மட்டிடமாட்டாத மெல்லிய பேச்சு முதலிய ஒலிகளும், அழுகின பொருள் முதலியவற்றிலிருந்து வரும் நாற்றமும், காஞ்சிரை வேப்பங்காய் முதலியவற்றின்சுவையும், முள் கல் பனிக்கட்டி முதலியவற்றின் பரிசமும் துன்பத்தைத் தருவன.

இவற்றுள் இனிய இசையைக் கேட்கும்போதும் அழகான பொருள்களையும் சித்திரம் முதலியவற்றையும் காணும்போதும் விடய இன்பத்தோடு வேறொரு வகையான இன்பமும் உண்டாகின்றது. இசையானது கேட்பவனுடைய கருத்துக்குப் பொருந்தி வருதலால் திருப்தியை யுண்டாக்கி இன்பத்துக்கு காரணமாகின்றது. இசையைக் கேட்பவன் இசையில் வல்லவனாயின், இசை சற்றே பிழைபட்டாற் பெருந்துன்பத்தையும் மிகநுண்ணியதாயின் மிக்க இன்பத்தையும் பெறுவான். கேட்போன் இசையை உணரும் ஆற்றலில்லாதவனாயின், அற்ப பிழையுள்ள இசையையும் மிகநுண்ணிய இசையையும் ஒரேயளவாக மதித்து ஒரேயளவான இன்பத்தைப் பெறுவான். அவனுக்குக் கழுதையினுடைய குரலும் மிகப் பிழைபடும் இசையும் திருத்தியீனத்தை உண்டாக்கித் துன்பத்தை விளைவிக்கும்.



இப்படியே சித்திரத்தின் உறுப்புக்களின் அளவமைதி முதலியவைகள் ஒருவனுடைய கருத்துக்குப் பொருத்தமாயிருந்தால், அதனால் அவனுக்கு இன்பமுண்டாகும்; பொருத்த மில்லையாயின், துன்பமுண்டாகும். இவ்வின்பதுன்பங்களும் காண்போரது அறிவுக்குத் தக்கனவாய் வேறுபடும். அறிவில்லாதவனுக்கு மிக அழகானதுபோலத் தோன்றும் வடிவம் சித்திர அறிவுடையோனுக்கு அவலட்சணமாய்த் தோன்றுதல் கூடும். அவனுக்குச் சற்றேனும் கவர்ச்சி யில்லாத ஒன்று அறிவுடையோனுக்குப் பெருந் திருத்தியை உண்டாக்கத் தக்கதாயுமிருக்கும்.

## வேதனை விதிகள்

ஒரு தொழில் நடைபெறும்போது தோன்றும் இன்பம் அத்தொழிலுக்கு வேண்டிய முயற்சியை ஏற்றி அதை ஆர்வத்தோடு செய்தற்குக் காரணமாகும். அது நிறைவேறுதலால் வருமின்பம் அப்படிப்பட்ட தொழிலைப் பின்னுஞ் செய்தற்குண்டாகும் விருப்பத்தை யேற்றும். அத்தொழிலை நிறைவேற்றுதற்குப் பேரிடர்கள் நேரும்போது தோன்றுந் துன்பம் மனத்தைத் தளரப்பண்ணும். அதைச் செய்ய இயலாமற் கைவிடவேண்டி வந்தால், அதனால் உண்டாகுந் துன்பம் அத்தொழிலிலே உவர்ப்பை யுண்டாக்கும்.

ஒருவன் கணக்குச் செய்துகொண்டு போகும்போது அத்தொழில் தடையின்றி இலகுவாக நடைபெறும் வரையும் இன்பம் உண்டாகும். அதைச் செய்யும் வழியை அறியாமல் அவன் அதைக் கைவிடுவானாயின், துன்பம் உண்டாகும். அதைக் கைவிடாமல், அவதா

னத்தை ஏற்றி, ஆழமாகச் சிந்தித்து, அதிற் பிரயோகிக்கத்தக்க விதிகளை ஆராய்ந்து, நிறைவேற்றத்தக்க ஓர் உபாயத்தைக் காண்பானாயின், அவனுடைய இன்பம் முன்னரிலும் அதிகப்படும். முடிபுக்குக் கிட்ட வரவர இன்பம் ஏறியேறி வரும்; முடிந்தவுடனே அதிகமாய் வரும். அதன் பின்பு அப்படியான கணக்குச் செய்வதில் விருப்பம் கூடும்; அதைக் கைவிடவேண்டி வந்தால், அதனால் வருந் துன்பம் அவ்வகையான கணக்குகளிலே உவர்ப்பை யுண்டாக்கும்.*

இப்படியாக ஒரு தொழில் நடைபெறும்போது தோன்றும் இன்பதுன்பங்கள் அத்தொழிலைச் செய்விக்கும் ஊக்கத்தைப் பாதிக்குந் தன்மை பின்வரும் விதிகளிற் கூறப்படுகின்றது.

க. "ஒரு தொழிலைச் செய்யும்போது உண்டாகும் இன்பமானது அத்தொழில் செய்தற்கு வேண்டிய முயற்சியை நிலைப்படுத்தி, தொடுத்து நிகழ்வித்து, ஆற்றலையேற்றும்; பின்பு அத்தொழில் செய்தற்குச் சந்தர்ப்பம் நேர்ந்தால், அதைச் செய்தற்குச் சகாயமாய் நிற்கும்."

உ. "ஒரு தொழிலைச் செய்யும்போது உண்டாகும் துன்பமானது முயற்சியைக் குறைத்துப் பிறவழியிற் செலுத்தும்; அல்லது தொழிலை நிறைவேற்றுதற்கேற்றபிற வழிவகைகளைத் தேடுவிக்கும். அது நிறைவேறாதாயின், அதன்பின் அத்தொழில் செய்தற்குச் சந்தர்ப்பம் நேருங்கால், அதைச் செய்தற்குத் தடையாய்நிற்கும்."

இன்பமுண்டாகும்போது மனசிலும் உடலிலும்

* நல்லாசிரியர்கையில் அகப்படாத சில விவேகமுள்ள மாணாக்கர்கள் கணக்குப் பாடத்தை உவர்த்தற்குக் காரணம் அவர்கள் தொடக்கத்திலே கணக்குச் செய்யும்போது பலமுறையுந் தவறியதால் உண்டான துன்பமேயாம்.



உள்ள ஆற்றல் அதிகமாய் வெளிப்படும். அதனாலே, தொழில் விரைவாய் நடைபெறும். இந்த ஏற்றமான ஆற்றலாற் கண் ஒளிரும், முகம் மலரும், நெஞ்சு அகலும், தோள்கள் பூரிக்கும், முதுகு நிமிரும், ஒலி உரக்கும், சிரிப்புண்டாகும். துன்பமுண்டாகும்போது, முகம் வாடும், தலை குனியும், பேச்சு மெதுப்படும், நடை குன்றும், செயல் அறும்.

துன்பமானது பிழையான வழியினின்றும் விலகி நல்வழியைத் தேடுதற்கு துணைசெய்யுமென்று பெற்றோரும் ஆசிரியரும் அரசினரும் நினைத்து, பிழைவழியிலே நடப்பவர்களை அதினின்றும் நீக்கி நல்வழிப்படுத்தும் நோக்கத்தோடு தண்டனையைச் செய்கின்றனர். தண்டனையால் வருந் துன்பத்திற்கும் தொழிற்பிழையால் வருந் துன்பத்திற்கும் வேறுபாடுகள் பலவுள. ஒருவன் தொழில் செய்யும்போது வருந் துன்பம் அத்தொழில் நிறைவேறாமையைக் காணுதலால் வருவது. ஆசிரியர் தண்டித்தற்குக் காரணம் மாணாக்கன் வீட்டிலே பாடங்களைப் படியாமை. அவன் வீட்டிலே படியாமற் பிறதொழிலைச் செய்தபோது அவனுக்கு இன்பமுண்டாயது. அந்த இன்பம் அத்தொழிலைச் செய்தற்குச் சகாயமாயிருக்கும். ஆசிரியர் செய்யுந் தண்டனையாகிய துன்பம் அத்தொழிலைச் செய்யும்போது வராமையால், அதைச் செய்யாதொழிதற்குப் பெருந் துணையாகாது. அத் துன்பத்தினின்றும் நீங்குதற்கு மாணாக்கர் படிப்பதற்குப் பதிலாகப் பிறவழிகளை ஆராய்ந்தறிந்து கடைப்பிடித்தலும் உண்டு.

பெற்றோர் அரசினர் ஆகிய இவர்களுடைய தண்டனையும் இப்படியானவையாம். இம்மூவகையாரும் தங்க

ளுக்குக் கீழ்ப்பட்டவர்களைத் திருத்தவேண்டுமாயின் அவர்களுடைய பிழைகளின் காரணங்களை அறிந்து அவற்றை நீக்குதலே முறைமை. அவற்றை நீக்கும் வழியிலே சில சந்தர்ப்பங்களிலே தண்டனை ஓர் அற்பமான கூறாகலாம். பிழைக்கு முக்கிய காரணம் பெற்றோர்கள் முறைகேடாக வளர்த்தலும், ஆசிரியர்கள் முறைகேடாகப் படிப்பித்தலும், அரசினர் முறைகேடாக ஆளுதலுமாம். இம் மூவகையாரும் தங்கள் கடன்களை முறைப்படி செய்யும் ஆற்றலில்லாதவர்களாய்த் * தண்டனையாகிய சுருக்கவழியை நாடுகின்றனர்.

## இன்பவாதம்

தொழில் நிறைவேறுதலால் வரும் இன்பம் அத்தொழிலைச் செய்யும் விருப்பத்தை யேற்றுமேயன்றி அத்தொழிலைச் செய்தற்கு மூலகாரணமாகாது. ஆயினும், இன்பமே தொழில் செய்தற்கு மூலகாரணமென்று இன்பவாதிகள் கூறுவர். பசித்தவன் உண்பது பசியைத் தீர்த்தலின்பொருட்டேயாம்; பசி தீருதலால் வரும் இன்பத்தை நோக்கியன்று. தொழிலில்லாதவன் தொழிலைத் தேடுதல் சீவனத்தை நடத்துதற்கன்றி அதைப் பெறுதலால் வரும் இன்பத்தை நுகர்தற்பொருட்டன்று. நூல்களைக் கற்றலின் நோக்கம் அவற்றிலுள்ள அறிவைப் பெறுதல்; அறிதலால் வரும் இன்பத்தைப் பெறுதலன்று. திருவிழாவுக்குப் போகிறவன் அதிலுள்ள அலங்-

* பெற்றோருட் பெரும்பாலார் பிள்ளைகளை வளர்க்கும் முறையை அறியார். சில ஆசிரியர்கள் கல்விபயிற்றும் முறையை அறிவராயினும் பாடசாலையிலே வாசம்பண்ணாத மாணாக்கர்களைக் கட்டுப்பாடு பண்ண மாட்டாமலிருக்கிறார்கள். ஊர் முழுவதையுங் கட்டுப்படுத்தும் ஆற்றல் அரசாட்சியாருக்கு வருதலரிது.



காரத்தைப் பார்ப்பதே நோக்கமாக வுடையவன்; அலங்காரத்தைப் பார்க்கும்போதுண்டாகும் இன்பத்தை நோக்கி அவன் போகவில்லை. இன்பம் தொழிலைச் செய்விக்கும் ஊக்கத்தைக் கூர்விப்பதன்றித் தொழிலுக்கு மூலகாரணமாகாது. ஊக்கம் தொழிற்படாவிடில் முன் அநுபவித்த இன்பம் செயலற்றுப்போம். மூக்குமுட்ட உண்ட ஒருவன் எவ்வளவு இனிய உணவைக் கண்டாலும் அதை உண்ணான்; ஏனெனில், அவனுடைய உணவூக்கம் அப்போது தொழிற்படாது. ஆதலால், தொழில்செய்தற்கு மூலகாரணம் இன்பம் என்னும் கொள்கை தவறானதென்க.

## மிச்சிரவேதனை

தொழில் நிறைவேறலால் உண்டாகும் இன்பமும் நிறைவேறாமையால் வருந் துன்பமும் ஒருவிதமான கலப்பு மில்லாத் தனிவேதனைகள். இவைகளேயன்றி, தொழிலை நிறைவேற்றுதற்கெழுந்த விருப்பத்தோடு கலந்த இன்பதுன்பங்களுமுண்டு. இவ்வின்பதுன்பங்கள் மிச்சிரவேதனைகள் எனப்படும். ஒருவர் சுரநோயாற் பீடிக்கப்பட்டிருக்கும்போது, அந் நோய் தீர்ந்துபோக வேண்டுமென்ற விருப்பம் அவருடைய இனத்தவர்களுக்கு உண்டு. தொடக்கத்திலே சுரம் விரைவாகத் தணிந்துவந்தால், அது தீர்ந்துபோமென்ற திடம் அவருடைய சுற்றத்தவர்களிடத்து உண்டாகும்; பின்பு சில நாட்களாகச் சுரம் சற்றேனும் குறையாமலிருந்தால், அது தீருமென்ற திடம் நீங்கிவிட, அது தீர்ந்துபோம் என்ற நம்பிக்கை உண்டாகும். அதன் பின்னர் அந் நோய் சற்றே ஏறினாற் கவலை யுண்டாகும்.

ஒருவர் பரீட்சிக்கப்படும்போது, பரீட்சையின் முற்பகுதி நயப்பட்டாற் சித்தியெய்துந் திடமும், பின்பு சற்றே குறைவடைந்தாற் சித்தியடையும் நம்பிக்கையும், பின்னும் குறைவடைந்தாற் கவலையும் உண்டாகும்.

திடமென்பது விருப்பத்தோடு சேர்ந்த இன்பம். நம்பிக்கையாவது விருப்பத்தோடு இன்பம் கூடியும் துன்பம் குறைந்தும்சேர்ந்த கலப்பு. கவலையாவது விருப்பத்தோடு கலந்த துன்பம். இம் மூன்றும் முடிபு தெரியுமுன் உண்டாகும் வேதனைகளாதலால் முன்வேதனைகள் எனப்படும்.

நோயினாற் பீடிக்கப்பட்டவர் தப்பினாற் சுற்றத்தவருக்கு மகிழ்ச்சியும் இறந்துபோனால் துக்கமும் உண்டாகும். பரீட்சிக்கப்பட்டவர் பரீட்சையிற் சித்தியடைந்தால் மகிழ்ச்சியையும், சித்தியடையாவிட்டால் துக்கத்தையும் பெறுவர். மகிழ்ச்சியும் துக்கமும் விருப்பத்தோடு கலந்து முடிபறிந்தபின் தோன்றுதலாற் பின்வேதனைகள் எனப்படும்.

இன்பதுன்பங்களுக்கும் மகிழ்ச்சிகவலைகளுக்கும்வேறுபாடென்னவெனில், இன்பதுன்பங்கள் தனித்தவைகளாதலால் அவ்வப்போதே அற்றுப்போம். மகிழ்ச்சி கவலைகள் விருப்பத்தோடு கலந்தவையாதலால் நெடுநேரம் நிற்கும்.

இவற்றுள், கவலையிலும் துக்கத்திலும் கலந்திருக்குந் துன்பம் பேதைமையால்உண்டாவது. ஒரு பொல்லாங்கு நேருதற்கு இடமுண்டாயின், அதைத் தடுத்தற்கு வேண்டிய வழியை ஆராய்ந்து அதை அநுசரித்தலே தக்கது. அதைத் தடுத்தல் இயலாதாயின், அதற்காகக் கலங்குவது வீண். குற்றஞ்செய்தவன் மறியல் வரு



மென்று வருந்துவதும் பரீட்சிக்கப்பட்ட மாணாக்கன் சித்திவராதென்று வருந்துவதும் வீண் வருத்தங்கள். குற்றஞ்செய்தவன் சிறைச்சாலைக்குப் போகாமல் தப்புதற்கு வேண்டிய முறைமையான வழிகளை ஆராய்ந்து அவற்றைக் கடைப்பிடித்தலும், சிறைக்குப் போக நேர்ந்தால் துக்கப்படாமையும், பின் சிறைவாசம் வாராமைக்காகத் தன்னைத் திருத்திக் கொள்ளுதலும் முறையாகும். மனைவி நோயினாற் பீடிக்கப்பட்டிருந்தால் நாயகன் அவளுக்குத் தக்க பரிகாரஞ் செய்வித்தலும், அவள் இறந்தால் அதற்காகத் துக்கப்படாமல், வேண்டுமாயின், பிள்ளை இல்லாக்கால் வேறொருமனைவியைத் தேடுதலும் கடனாம். பரீட்சிக்கப்பட்ட மாணாக்கன் பரீட்சை முடியும் வரையும் அதைப்பற்றிச் சிந்தித்தல் அவசியமற்றது.

சில சந்தர்ப்பங்களிலே அற்ப துக்கத்தால் நன்மை உண்டாகும். ஒருவன் பிழை செய்தானாயின், அவன் அதைக் குறித்து ஆழமாகச் சிந்தித்து மட்டாகத் துக்கப்பட்டால், அது தகாததென்பதும் அதனால் வருந் தீமைகள் இவையென்பதும் அவனுடைய மனசிலே படிதலினால், பின்னொரு முறை அப்பிழை செய்தற்குச் சந்தர்ப்பம் வரும்போது, அதினின்றும் விலகிக்கொள்ளுதல் கூடும். பெருந்துக்கத்தினால் ஒரு நயமும் வராது; கேடே விளையும். அது சரீரபலத்தையும் மனத்திண்மையையுங் கெடுக்கும். அவை கெடுதலினாலே தீவினை செய்தற்குச் சமயம் வரும்போது ஒருவன் தன்னைக் கட்டுப்பாடு பண்ணமாட்டாமல் இலகுவாய் அதிலே அகப்பட்டுப் பின்னுங் கலங்க நேரும். ஒருவன் ஒரு பொருளை இழந்துவிட்டால் அதற்காக அற்பமாகத் துக்கப்படுவானாயின், அந்தத் துக்கம் அப்படியான ஒரு பொருளைச்

சம்பாதித்தற்கு வேண்டிய முயற்சியைச் செய்ய ஏவும். கிடைக்கமாட்டாத பொருளுக்காகத் துக்கப்படுதல் பெரும் பேதைமை. சுற்றமித்திரருடைய மரணத்திற் காகத் துக்கப்படுவோர் மிகப் பலர். துக்கம் உடற் கருவிகளின் தொழிலைக் குறைத்து நோய்க்கிடமாக்கும். அது சலரோகத்திற்கு ஒரு முக்கிய காரணமென்பர். "மனக்கவலை பலக்குறைவு" என்பது ஒரு முதுமொழி. துக்கம் உடலையேயன்றி மனத்தையுந் தாக்கிப் பைத்தியத்துக்குங் காரணமாகின்றது.

## சுவையின் நோக்கம்

தொழிலின் பயனாய் இன்பதுன்பம் தோன்றுதல் போல, தொழிலின் துணையாய்ச் சுவைகள் தோன்றும். அவை கோபம், அச்சம், உவர்ப்பு, செருக்கு, அன்பு, காதல், முதலியவைகள்.

ஒரு தொழில் இடையூறின்றி நடைபெறுமாயின், அது நிறைவேறுவதற்குப் புதுத்துணை வேண்டியதில்லை. ஆதலால் அத்தொழில் நடக்கும்போது சுவை தோன்றாது. *அது இடர்ப்படுமாயின் அதற்குத் துணையாகச் சுவைதோன்றும்.

ஆடு வேலித் தளிரைக் கடிக்கும்போது, அதைக் கண்ட வீட்டுக்காரன், "சூ, சூ" என்று துரத்துவான். அது போகாவிட்டால், அதை வெருட்டுதற்காக வேலிக்குக் கல்லால் எறிவான். பின்னும் அது போகாவிட்டால், அவன் சினங்கொண்டு கல்லெடுத்து ஆட்டுக்கே

* தொழிலுக்கிடரில்லாத போதும் சுவைகள் துணைசெய்யுமென்றும் அப்போது அவைகள் அநுபவத்துக்கெட்டமாட்டாதனவாய் அற்ப வலியோடு நிற்குமென்றும் சிலர் கூறுவர்.



எறிவான். முதலிரண்டு முறைகளிலும் கோபம் வராமைக்கும் மூன்றாம்முறை கோபம் வந்தமைக்கும் காரணம் என்னவெனில், முதல் முறைகளில் அது ஓடிவிடும் என்ற எண்ணம் அவனிடத்திலிருந்தது. அஃதாவது, அதை அகற்றுந் தொழில் நிறைவேறியதாக அவனுக்குத் தோன்றியது. பின்னும் அது கடித்துக்கொண்டு நின்றமையால் தன்னெண்ணம் நிறைவேறவில்லையே என்ற கருத்தினாலே அவனுக்குக் கோபம் உண்டாயது. ஆகவே, தொழில் நிறைவேறாமையாற் கோபமுண்டாகுமென்பதும், கோபம் வந்தபின்பு தொழிலை நிறைவேற்றுதற்கு வேண்டிய முயற்சி பலமாகச் செய்யப்படும் என்பதும் இதனாலே தெளிவாகும்.

## சுவையின் இலக்கணம்

சுவை மனத்திலும் உடலிலும் உள்ள ஒரு நிகழ்ச்சி. அது நிகழும்போது (௧) ஊக்கம் வலியேறும், (௨) இதனாலே அகமுயற்சி கூடும்; (௩) இரத்தாசயம் சுவாசாசயம் முதலிய சில கருவிகள் பலமாக இயங்கும், இரைப்பை முதலிய வேறுசில தொழிலைக் குறைக்கும்; (௪) உடலின் சில பாகங்களிலுள்ள இரத்தக்குழல்களில் இரத்தம் வேகமாய் ஓடும், வேறு சிலவற்றில் மெல்ல ஓடும்; (௫) இவ்வேற்றுமைகளால் உண்டாகும் அதிர்ச்சி மனத்திலே புலப்படும். இவற்றின் தொகுதி சுவையெனப்படும். ஆயினும், ஊக்கத்தின் வலியேற்றமே மற்றவைகளுக்குக் காரணமாதலால், அவ்வேற்றமே சுவையின் மூலமாம். இதுவேயன்றி, உடலிலுண்டாகும் விகாரங்களின் புலப்பாடும் மனசில் நிகழ்தலால், இவ்விரண்டன் கூட்டமே சுவைமூலமெனக் கொள்ளினும்

அமையும். சில அறிஞர்கள் ஊக்கவலியேற்றத்துக்குக் காரணமாய் மனத்தில் ஒரு நிகழ்ச்சியுண்டென்றும், அதுவே சுவையின் மூலமென்றுங் கூறுவர். அப்படிப் பிரத்தியேகமான நிகழ்ச்சிக்கு அநுபவசாட்சி யில்லாமை யால், அது அங்கீகரிக்கத்தக்கதன்றென வேறு சிலர் கூறுவர்.

சுவையின் அங்கங்களுள் அகமுயற்சியின் ஏற்றம் தொழிலில் உள்ள தடைகளை நீக்கி அதை நிறைவேற்றுத லில் உறைப்பாய் நிற்கும். மனதுக்கும் மூளைக்குந் தொடர்புண்மையால் அகமுயற்சியேற மூளையின் முயற்சி யும் ஏறும். அதனாலே மூளையிலுள்ள நாடிகள் நேராக வேனும் பிறவழியாகவேனும் (க) இரத்தாசயம் முதலிய கருவிகளையும் (உ) தசைநார்களையும் (ங) உடம்பின் சிற்சில இடங்களுக்குப் போகும் இரத்தக் குழல்களையும் (ச) சரீரபலத்தையும் தாக்குகின்றன.

## சுவையின்வகை

சுவைக்கு மூலமாயுள்ளது ஊக்கவலியேற்றமாயின், அதை ஊக்கத்தின் வேருக எண்ணுதல் அவசியமன் றெனில், அதனோடு நிகழும் உடல்வேற்றுமைகளும் அவற்றின் புலப்பாடும் ஊக்கத்துக்கில்லாமையால், அது வேருக எண்ணப்படவேண்டியதேயாம். ஊக்கங்கள் தன்மையால் வேறுபடுதல்போல, சுவைகளும் தன்மை யால் வேறுபடும். போர்த்தொழிலுக்குத் துணையாகுஞ் சுவை ஓடித் தப்புதற்கேனும் இடர்ப்படுவோரைக் காத்தற்கேனுந் துணையாகாது. ஏனெனில், அவற்றுக்கு வேண்டிய உடல்முயற்சியும் நிலையும் வெவ்வேருனவை. போர்த்தொழிலுக்குச் சினந்த முகமும் கொடிய



பார்வையும் தீங்குவிளைக்குஞ் செயலும் வேண்டும். இடர்ப்படுவோரைக் காத்தற்கு முகமலர்ச்சியும் கண்ணுருக்கமும் ஆதரவான செயல்களும் வேண்டும். ஓடித் தப்புதற்கு அச்செயலில் ஈடுபடுங் கருவிகள் மாத்திரம் பலமேறவேண்டும்.

சுவைகளுள் முக்கியமானவையும் அவைகள் சார்ந்து வரும் ஊக்கங்களும் பின்வருமாறு:—

| சுவை | ஊக்கம் |
|---|---|
| கோபம் | போரூக்கம் |
| அச்சம் | ஒதுங்கூக்கம் |
| அன்பு | காப்பூக்கம் |
| காமம் | காதலூக்கம் |
| செருக்கு | முதன்மையூக்கம் |
| உவர்ப்பு | அருவருப்பூக்கம் |
| அடக்கம் | பணிவூக்கம் |
| ஆச்சரியம் | ஆராய்வூக்கம் |
| தனிமை | கூட்டூக்கம் |

இச்சுவைகளுள் முதலில் நிற்பவை பின்வருவனவற்றிலும் பொதுப்பட வன்மையாற் கூடியவை. உதாரணமாக, அச்சம் அருவருப்பிலும் வலியது; அன்பு செருக்கிலும் வலியது; காமம் தனிமையிலும் வலியது.

அருவருத்தல், பணிதல், ஆராய்தல் முதலிய தொழில்களைச் செய்தற்குப் பெருந்துணை வேண்டியதில்லை. இவை காலதாமதப்பட்டுஞ் செய்யத் தக்கவை. ஆதலால் இவற்றுக்குத் துணையாகுஞ் சுவைகள் மென்மையானவை. முதலிற்கூறப்பட்ட நான்கு சுவைகளும் வன்மையாற் கூடியவை. இவற்றுள் கோபமும் அச்சமும் பகைவனால் வரும் இடரினின்றும் நீங்கத் துணைசெய்வன. பகைவனி

லிருந்து தப்புதற்கு மேலதிகமான பலமுஞ் சுறுசுறுப்பும் தளராமையும் வேண்டும். இம்மூன்றையும் மூளையிலுள்ள நாடிகள் * நேரேயும் சலாசயத்துக்கு மேலேயிருக்கும் ஊற்றுப்பையின் துணையைக் கொண்டும் வருவிக்கின்றன. நாடிகள் ஊற்றுப்பையை அருட்ட, அதன் ஊற்றுப்பெருகி இரத்தத்தோடு சேரும். இது இரத்தத்தோடு பித்தாசயத்துக்குப் போய், அங்கு சேமித்திருக்கும் சர்க்கரையைக் கவர்ந்து தசைநார்களுக்குக் கொடுத்து, இரத்தாசயத்தையும் சுவாசாசயத்தையும் தாக்கி அவற்றின் தொழிலை அதிகரிப்பித்துச் சீவவாயுவை உடற்கூறுகளுக்கு மேலதிகமாய் ஊட்டுகின்றது.

இதனால் அந்த நேரத்திலே தொழில்செய்தற்கு உதவத்தக்க சரீரபலம் ஏறும்; இளைப்பு குறையும். உடம்பின் எந்தப்பாகத்துக் கருவிகள் அதிகம் முயற்சி செய்ய வேண்டியனவோ அந்தப் பாகத்துக்கு இரத்தம் அதிகமாகச் செல்லும். அந்த நேரத்திலே தொழில் செய்ய வேண்டாதவைகளாகிய இரைப்பை முதலியவற்றுக்குச் செல்லும் இரத்தம் அளவாற் குறையும். அச்சம் நிகழும் போது, ஓடுதற்குத் துணையாகச் சரீரத்தை இலகுப்படுத்தற்காக மலசல நீக்கமும் உண்டாகும். †

* இவை அநுரசநாடிகள் எனப்படும்.

† இச்சுவைகளின் நிகழ்ச்சியைப்பற்றி அபிப்பிராய பேதமுண்டு. தொழில் தடைபடும்போது, தொழில்செய்யநின்ற ஆற்றல் மூளையைத்தாக்க, அத்தாக்கத்தினாலே சலாசயத்தின் மேலுள்ள ஊற்றுப்பையிலிருந்து அங்குள்ள ஊற்று இரத்தத்தோடு கலத்தலினாலுண்டாகும் உடல்வேற்றுமையும் அதனாலுண்டாகும் மனச்சலனமுமே கோபம் அல்லது அச்சம் என்று சிலர் கூறுவர். ஆயினும், அவ்வூற்றுச்சத்தைக் கோபமில்லாதவர்களுடைய இரத்தத்திலே செலுத்திப்பரீட்சித்தபோது அவர்களுக்குக் கோபமுண்டாகாமை காணப்பட்டது. ஒரு நாயிலே அந்த ஊற்றை இரத்தத்திற் சேரா



ஆதலால், கோபமேனும் அச்சமேனும் தோன்றும் போது சரீரத்தில் உண்டாகும் வேறுபாடுகளுட் பெரும்பாலானவை இவ்வூற்றினாலும் இதை அருட்டும் அநுரச நாடிகளாலும் ஆக்கப்படுகின்றன என்பதை அறிக. இவற்றிலேயன்றி வேறெவ்வகைச் சந்தர்ப்பத்திலும் வேதனையைத் தாங்குதற்கும் ஆற்றலை ஏற்றுதற்கும் இவ்வூற்றே துணையாகின்றது.

## அன்பு

அன்பு கோபத்தையும் அச்சத்தையும் போன்ற ஒரு வலிய சுவை. குழந்தைக்கு ஏதாயினும் இடர்நேர்ந்தால், அதன் தாய்தந்தையரிடத்தே இச்சுவை உண்டாகும். இதை வடநூலார் வாத்சல்யம் என்பர். வத்சம் என்பது பசுக்கன்று. * வாத்சல்யமாவது பசு தன் கன்றிலே கொள்ளும் அன்பு. † இதுசுவைகளுள் ஒப்புயர்வில்லாதது. இது விரிந்து ஏனைய சுற்றத்தவரிலும் நண்பரிலும் பிறரிலும் பிறபிராணிகளிலும் செல்கின்றது. எவ்வகைப் பிராணி இடர்ப்படும்போதும் உண்டாகுஞ் சுவை இதுவே. இந்தச் சுவை தோன்றும்போது, தொழில் செய்யுமாற்றலும் வேதனையைத் தாங்கும் வன்மையும் ஏறுகின்றன.

வண்ணம் தடைசெய்தபின்பு, அதற்குக் கோபம் மூட்டிப் பரீட்சித்த போது அது கோபக்குறிகளைக்காட்டியது. ஆதலால் இவ்வூற்று இரத்தத்திற் சேருதல் கோபத்திற்குக் காரணமன்றென்பதும், அது இரத்தத்தோடு சேருதற்குக் காரணம் கோபம் என்பதும் பொருத்தமாம்.

* வத்சமென்பது குழந்தைகளுக்குப் பொதுப்பெயர்; பசுக்கன்றுக்குச் சிறப்புப்பெயர்.

† "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்னுந் திருவாக்கு உற்றுநோக்கத்தக்கது.

ஒரு குழந்தையை ஒரு கொடியநோய் பீடித்துவிட்டால், தாய்தந்தையர்கள் ஊணின்றி உறக்கமின்றி ஓய்வின்றி அதற்குவேண்டியவற்றைச் செய்கிறார்கள். வேறு நேரங்களிலும் குழந்தைகள் அவர்களை எவ்வளவாகக் கஷ்டப்படுத்தினாலும், அவற்றையெல்லாந் தாங்குதற்குத் துணையாயிருப்பதும் இச்சுவையே. பசுமுதலிய பிராணிகள் தமது கன்றைக் காத்தற்காக உயிரையுந் துறக்கும். நண்பர்களுள்ளும் பரோபகாரிகளுள்ளும் சிலர் மற்றவர்களுக்காக உயிரை விடத்தக்கபெரும் முயற்சிகளைச் செய்தற்குத் துணையாயிருப்பது அன்புச்சுவையேயாம்.

கலப்புச்சுவை

ஒரே நேரத்திலே இரண்டு மூன்று ஊக்கங்கள் தொழிற்பட்டால் அவற்றோடு தொடர்புடைய சுவைகளுந்தோன்றிக் கலக்கும். சிறந்த சுவைகளுள் ஒன்றாகிய இரக்கம் ஒரு கலப்புச்சுவை. என் அன்பன் வருந்துவதைக் காணும்போது துன்பமும் அன்புந் தோன்றுகின்றன. இவற்றின் சேர்க்கையே இரக்கமாம். அவன் வருந்தாவிட்டால் அவனைக்காணும்போது அன்பு வருமன்றி இரக்கம்வராது. உபகாரஞ் செய்தவர்களைக் காணும்போது நன்றியென்னுஞ் சுவை உண்டாகின்றது. இது பணிவும் அன்பும் கலத்தலால் வருவது. பணிவும் மதிப்பும் சேர்ந்து வியப்பாகின்றன. வியப்பும் அச்சமும் சேர்ந்து பயபத்தியாகின்றன. நாணம் இகழ்ச்சி பொறாமை முதலியவைகளும் கலப்புச்சுவைகளாம்.

சுவைகளின் பயன்

மனிதனுக்குக் கீழ்ப்பட்ட பிராணிகளுக்குச் சுவைகளால் எக்காலமும் நன்மையேவரும். இரண்டு மிருகங்கள்



போர்செய்யும்போது தோற்கும் மிருகத்துக்குப் போரினாலே தீமை விளையுமாயினும்,கோபச்சுவையினால் அதன் பலம் ஏறுதலும், வேதனையைத்தாங்கத்தக்கதாய் இருத்தலும் அதுக்கு நன்மையானவைகளே. குட்டிகளைக் காத்தற்குத் தோன்றும் அன்புச்சுவையினாலே தாய் மிருகம் தனக்குவரும் வேதனையை இலகுவாகத் தாங்கிக் கொள்ளுகின்றது.

மனிதனுக்கோவெனில், கோபம் அச்சம் முதலிய சுவைகள் மட்டுக்கு மிஞ்சி வருதலுண்டு. கோபம் சற்றே அளவுகடந்தால், மனம்பதறும்; கை கால் தடுமாறும்; செய்வதெது செய்யத் தகாததெது என்பது தெரியாமற் போம்; போர் குருட்டுப் போராய்விடும்; வெல்லுதல் அரிதாகும். அச்சமும் அளவுக்குமிஞ்சினால், மனமும் உடற் கருவிகளும் பதறும்; சிலர் அவதானமின்றி ஓடித் தடக்கி விழுந்து அகப்படுவார்கள்; சிலர் நின்ற நிலையில் நிற்பார்கள்.

அன்றியும், மனிதன் கோபிக்கத் தகாத சந்தர்ப்பங்களிற் கோபித்தலும் அஞ்ச வேண்டாதவற்றுக் கஞ்சுதலும் உண்டு. தாய் தந்தையரும் ஆசிரியர்களும் சிறுவர்களிலே கோபித்தல் தகாது. இவர்களைத் திருத்துதலே அவர்களுடைய கடன். இதற்கு அவர்களுடைய இயல்பான சரீரபலம் போதியது. ஆதலாற் கோபம் அவசியமன்று. கோபத்தினாலே நீதியீனமான தண்டனை செய்ய நேரும். "எதிரி எளியவனானாற் கோபம் சண்டாளன்" என்பது ஓர் அரிய முதுமொழி. அவசியமில்லாத அச்சம் அறியாமையினால் வரும். சுடலை முதலிய இடங்களிலே பேய் உண்டென்றஞ்சுதலும்,சிலர் சாரைப் பாம்புக்கஞ்சுதலும், சிலர் நோய்கள் வந்தால் அவற்றுக்

கஞ்சி அவற்றைப் பெருப்பித்தலும் அறியாமையினலா வன. அச்சத்தினலுண்டாகும் திடுக்காட்டம் இரத்தா சயத்தைத்தாக்கும்; அதனலுண்டாகும் ஏக்கம் சில காலங்களிலே மூளையைத் தாக்கிவிடுகின்றது.

### வினக்கள்

க. வேதனைகளுக்குக் காரணம் யாது?
உ. மணியோசையால் வருமின்பத்துக்கும் யாழோசை யால் வருமின்பத்துக்குமுள்ள வேற்றுமையாது?
ங. ஒரு தொழில் செய்தலால் வரும் இன்பம் அவ்வகைத் தொழிலைப் பின்னும் செய்தற்குக் காரணமாகுமா?
ச. மந்தமாணுக்கர்களுக்கு முதலில் இலகுவான வேலை கொடுத்தலால் வரும் நன்மையாது?
ரு. தண்டனையின் வரம்புகள் யாவை?
சு. முன்வேதனைகள் எவை (ங)?
எ. துக்கத்தின் நய நட்டங்களெவை?
அ. சுவைமூலத்தின் கூறுகள் எவை (உ)?
கூ. ஆசிரியர் படிப்பிக்கும்போது கோபங்கொள்ளுதலால் வருந் தீமைகள் எவை?
க௦. சலாசயத்துக்கு மேலுள்ள ஊற்றின் தொழில்கள் எவை?
கக. சுவைகளின் பயன்யாவை?

# பத்தாம் அதிகாரம்

## காண்டல்

அறிதலின்வகை—அகக்காட்சி—பொறிக்காட்சி—பண்புக்காட்சி—தற்காட்சி—மானதக்காட்சி—மனக்கோள்—காட்சிப் போலி.

### அறிதலின்வகை

அறிவைப்பெறும் வழிகள் மூன்று. அவை காண்டல், கருதல், கேள்வி என்பன. "அதிலே நிற்பது ஒரு பசு" என்றறிதல் காண்டலறிவு. அடுக்களை யிலிருந்து புகைவருதலைக் கண்டு, அங்கே நெருப்பு உண்டு என்றறிதல் கருதலறிவு. "மலைகளுள் உயரமானது இமயம்" என்றறிதல் கேள்வியறிவு. கேள்வியறிவாவது காண்டலாலேனும், கருதலாலேனும், இரண்டினலு மேனும் பிறர் அறிந்ததை அறிதல். ஆதலால், அறிவை நேரேபெறும் வழிகள் காண்டலும் கருதலுமாம். இவற் றுள், கருதல் தொடர்பறிதல் தொடர்புப்பொருளறிதல் என இருதிறப்படலால், அறிவை நேரே பெறும் வழிகள் காண்டல், தொடர்பறிதல், தொடர்புப்பொருளறிதல் என மூன்றெனல் சிறப்புடைத்தாம்.

காண்டலுக்கும்கருதலுக்கும்மனவாற்றல்வேண்டப் படும். ஒருவர் பாடும்போது, அப்பாட்டின் ஒலியைக் கேட்டற்கும் இராகத்தையேனும் பொருளையேனும் அறிதற்கும் மனவாற்றல் இன்றியமையாதது; ஆயினும் அது போதியதன்று. நீராவியானது யந்திரமின்றித் தொழில்செய்யமாட்டாததுபோல, மனவாற்றல் மூளையி லுள்ள கருவிகளின்றித் தொழிற்படாது. ஒவ்வொரு

வகையான தொழிலைச்செய்தற்கும் ஒவ்வொருவகையான நாடிமூலங்களாகிய யந்திரங்கள் மூளையில் இருக்கின்றன. உதாரணமாக, ஐம்புலன்களையும் பெறுதற்குத் துணையான நாடிமூலங்கள் மூளையின் வெவ்வேறு பாகங்களிலிருக்கின்றன. இந்த நாடிமூலங்களிலே நாடிப்பதார்த்தமேயன்றித் தூயஇரத்தமும் கேடயச்சத்தும் உண்டு. இவைகள் நாடிமூலங்களிலே குறைவடைந்தால் அவைகள் தொழில் செய்யமாட்டா.

காண்டல் அகக்காட்சி, பொறிக்காட்சி, மானதக்காட்சி எனமூவகைப்படும். அகக்காட்சியாவது வேதனை சுவையாகிய தாக்கங்களையும் அறிதல் விரும்பல் துணிதல் முயலல் ஆகிய மனத்தொழில்களையும் காணுதல். பொறிக்காட்சியாவது கண், காது முதலிய பொறிகளாற் புலப்படுவனவற்றைக் காணுதல். மானதக்காட்சியாவது பொறிக்காட்சியைக்கொண்டு பொருளை அறிதல்.

## அகக்காட்சி

அகக்காட்சியாவது மனத்தில் நிகழ்வனவற்றை யறிதல். நான் ஒரு பரீட்சையிற் சித்தியடைந்தால், அதனால் வரும் இன்பத்தை யநுபவிக்கும்போது, அது இன்பமாயிருத்தலை அறிகிறேன்; நான் ஒரு விஷப்பாம்பைக் கண்டு அஞ்சினால், நான் அஞ்சியதை அறிகிறேன். இப்படியே ஒவ்வொரு தாக்கமும் நிகழும்போது அந்தத் தாக்கத்தை அறிகின்றேன். நான் ஒரு பொருளை ஆராயும்போது அவ்வாராய்தலையும், ஒரு தொழிலைச் செய்ய விரும்பும்போது அவ்விருப்பத்தையும், ஒரு தொழிலைச் செய்யத் துணியும்போது அத்துணிதலையும், தொழில் செய்யும்போது அதிலே மனம் முயலுதலையும்



அறிகின்றேன். இப்படியாக மனநிகழ்ச்சிகள் அறியப்படுகின்றன.

## பொறிக்காட்சி

பொறிக்காட்சி ஒரு நெடுந்தொழிலாயினும் எளிதானதுபோலத் தோன்றும். எனக்குமுன்னே ஒரு மாம்பழம் இருந்தால், நான் அதைக் காண்பதில் எவ்வகைப் பிரயாசமும் தோன்றவில்லை. கண்ணுக்கு எதிர்ப்பட்ட உடனே அதை அறிகிறேன். அறிதற்கு மனம் தொழிற்படவேண்டும். மனத்துக்கும் மாம்பழத்துக்கும் இடையிலே அநேக பொருள்கள் உண்டு. அத்தனை பொருள்கள் இடையிலிருக்கவும் மாம்பழம் மனசுக்குப் புலப்படுதல் எவ்வாறு? கண் காண்பதன்று. அது கண்ணாடியைப் போன்ற ஒரு கருவி. மாம்பழத்திலே விழுகிற ஒளி கண்ணுக்கூடாகப் போய் அதுக்குப் பின்னே யிருக்கிற படலத்தில் விழும். புலனாடிகள் அந்தப் படலத்திலிருந்து மூளையின் பார்வைப்பாகத்துக்குச் செல்கின்றன. கட்படலத்திலே விழும் ஒளி ஏதோ மாறுதலடைந்து, இந்த நாடிகளைத் தாக்குகின்றது. அந்தத் தாக்கம் நாடிகளின்வழியாக மூளையின் பார்வைப் பாகத்தை யடைகின்றது. மூளைக்கும் மனசுக்கும் தொடர்புண்டென்பது அகநூலின் ஆதாரவிதியாற் பெறப்படும். * மூளையை அடைந்த தாக்கம் ஏதோ ஒரு விதமாக மனசை யடைந்து ஒரு தாக்கமாகி மாம்பழத்தின் தோற்றம் உண்டாதற்குக் காரணமாகின்றது. ஆகவே மாம்பழத்துக்கும் மனசுக்குமிடையே வெளி, கண், கட்படலம், நாடிகள், மூளை, மூளைக்கும் மனசுக்குமுள்ளதொடை யாகிய ஆறு பொருள்கள் இருக்கின்றன.

* முதலதிகாரத்திற் காண்க.

ஒளி கண்ணிலே எப்படி விகாரப்படுகிறதென்பதும், மூளையில் நடக்குந் தொழில் எப்படிப்பட்டதென்பதும், அத்தொழிலின் பயன் மனசை எப்படித் தாக்குகிறதென்பதும், மனசிலே தோற்றம் எப்படி உண்டாகிறதென்பதும் யாம் அறியேம். அந்தத் தோற்றம் எதைப்போலுமெனில்; "எனக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது" என்பதைக் கொழும்பிலிருக்கும் எனது நண்பருக்குத் தெரிவிக்கில், நான் சீட்டுக்களத்திலிருக்கும் * வினையாளருக்கு அதைச்சொல்ல, அவர் தந்திமூலமாகக் கொழும்பிலுள்ள வினையாளருக்குத் தெரிவிக்க, அவர் அதைப் பேச்சுத்தந்தியால் எனது நண்பருக்குத் தெரிவிக்க அவர் அதைக் கேட்டறிவதுபோலாம். நண்பர் விஷயந்தெரியாதவரானால் நானே தம்மோடு பேசுகிறேன் என்று நினைப்பார்.

கண்ணிலே பழுது நேர்ந்தால், பொருளின் நிறம் தெரியாமலிருக்கும்; அல்லது பொருள் சிறிதாயேனும், பெரிதாயேனும் தோன்றும்; அல்லது பொருள் தெளிவாகத் தோன்றாது. ஒளி கண்வழியாகச் சென்று மனசுக்குப் புலப்படுவதுபோல, ஒலியும் நாற்றமும் இரசமும் ஊறும் முறையே காது நாசி நா தோல் ஆகிய இவற்றின்மூலமாக நாடிகளை யடைந்து அங்கே ஒவ்வொன்றும் ஏதோ மாறுதலடைந்து அவற்றின் வழியாக மூளையைச் சேர்ந்து அதிலிருந்து மனசுக்குப் புலப்படுகின்றன. பார்த்தலால் வரும் அறிவின் நிகழ்ச்சி எப்படிப்பட்டதென்பதை நாம் அறியாமலிருப்பதுபோலவே கேட்டல் மணத்தல் முதலியவற்றால் வரும் அறிவின் நிகழ்ச்சியும் எவ்வாறாவதென்பதை நாம் அறியோம்.

* தபாலாபீஸ் எனவழங்கப்படுவது



ஒளியானது கண்ணின் பிற்படலத்தில் ஒரு தாக்கத்தை ஆக்குகின்றதென்று எண்ண இடமுண்டு. இரு கண்களையும் மூடிக்கொண்டு ஒரு கண்ணின் ஒருபக்கத்திலே நகத்தால் அமர்த்த, ஒரு வடிவந் தோன்றும். இதிலிருந்து ஒளியின்தொழில் ஒரு தாக்கமென்பது பெறப்படுகின்றது. ஆகவே, ஒளியினது தாக்கம் கண்ணிலிருந்து மூளைக்குச் செல்லும் நாடிகளைத் தாக்குவதுபோல, ஒலியினது தாக்கம் காதிலிருந்து செல்லும் நாடிகளையும், நாற்றப்பொருளின் தாக்கம் நாசியிலிருந்து செல்லும் நாடிகளையும் தாக்குகின்றன என்று கொள்ளலாம். மற்றவைகளும் இவ்வாறே. தாக்கங்கள் ஒரே தன்மையினவாயின், ஒரே தாக்கத்தினால் ஒளியும் ஒலியும் இரசமும் உண்டாதற்குக் காரணம் அவைகள் தாக்கும் நாடிகளின் தன்மையிலேனும், அவைகள் அடையும் மூளைப்பகுதிகளின் தன்மையிலேனும், இரண்டிலுமேனும் உள்ள வேற்றுமையாதல் வேண்டும். அப்படியாயின், காட்சிநாடிகளைக் காதிலே வைத்தல் கூடுமாயின், ஒலி அந்த நாடிகளைத் தாக்க, அந்தத் தாக்கம் அவற்றின் வழியாக மூளையின் பார்வைப்பாகத்திலே தாக்க, அந்தத் தாக்கத்தால் மனசுக்கு ஒரு வடிவம் தோன்றுமென்றும், இரசநாடிகளைக் கண்ணிலேவைத்தல் கூடுமாயின், ஒரு பொருள் இரசமாகப் புலப்படுமென்றும் ஓர் அறிவாளி கூறுகின்றார். *

பொறிகளா லறியப்படும் அறிவு புலன் எனப்படும். ஒவ்வொரு புலனும் பலதிறப்படும். ஒளியின் மூலபேதங்கள் சிவப்பு பச்சை நீலம் என மூன்றாம். இவைகள் பல

* இப்படியாயின், மணிச்சத்தம் பூனைக்குட்டியாகவும், ஒரு பசு இனிப்புச்சுவையாகவும் தோன்றினுந் தோன்றும்.

வாறாகக் கலத்தலால் இருநூற்றுக்கு மேற்பட்ட நிறங்கள் உண்டாகின்றன. ஒலியானது இசை இரைச்சல் என இருவகைப்படும். இசையாவது காதுக்கினிய ஒலி; இரைச்சல் இனிமையற்ற ஒலி. இவைகள் ஒவ்வொன்றும் பலவேறுவகைப்படும். இரசம் கசப்பு இனிப்பு புளிப்பு உவர்ப்பு என நான்குவகைப்படும். இவைகள் கலந்து பலவேறுவகைப்பட்ட இரசங்களை ஆக்கும். இவைகளுள், கசப்பு நாவின் அடியிலும், இனிப்பு நாநுனியிலும், புளிப்பு நாவின் பக்கங்களிலும், உவர்ப்பு நாநுனியிலும் பக்கங்களிலும் இரசிக்கப்படும். கசப்பான பொருளையும் இனிப்பான பொருளையுங் கலந்து நாநுனியில் வைத்தால் இனிப்புமாத்திரம் புலப்படும். ஒத்த இரசங்கள் நாற்ற வேற்றுமையால் வேறுபோலத் தோன்றும். வெங்காயமும் அப்பிள்பழமும் ஒரே இரசமுடையன. குவினாவும் காப்பியும் ஒரே இரசமுடையன. மூக்கைப் பொத்திக்கொண்டு அருந்தினால் இவைகள் ஒரே விதமாகவே இரசிக்கும். * நாற்றமேயன்றி ஊறுகளும் கலந்து இரசத்தை வேற்றுமைப்படுத்துகின்றன. நாற்றம் பலவகைப்படும். அதன் வகைகள் வரையறுக்கப்படவில்லை.

தோலில் அறியப்படும் ஊறானது பரிசம் குளிர் அனல் நோ என நான்குவகைப்படும். அதன் ஒவ்வோரணுப்பாகமும் இவற்றுள் ஒவ்வொன்றைக் காட்டும். ஒன்றைக் காட்டும் பகுதி மற்றொன்றைக் காட்டமாட்டாது.

இப்புலன்களின் ஒவ்வொரு வகையும் உறைப்பு வகையாற் பின்னும் பலதிறப்படும். உதாரணமாக,

* இதனாலே கசப்பான மருந்துகளைப் பருகும்போது மூக்கைப் பொத்துதல் பொருத்தமாகின்றது.



சிவப்புநிறத்திலே கடுஞ்சிவப்பு மென்சிவப்பு எனப் பலவகையுண்டு. ஒலி உரத்தஒலி மெல்லியஒலி எனப் பலவகைப்படும். பிறவும் இவ்வாறே.

ஒரு பொறியின்வழியாகப் பொருள் அறியப்படும்போது, முதலில் அது ஒரு தாக்கமாகவே தோன்றும். அப்போது "ஏதோஒன்றுதோன்றுகின்றது" என்றஅறிவு மாத்திரம் உண்டாகும். ஒலியாயினும் ஒளியாயினும் மற்றெவ்வகைப் புலனாயினும் முதலில் ஒரே விதமாகவே தோன்றும். இத்தோற்றம், வேற்றுமை தோன்றாத தோற்றமாதலால், நிர்விகற்பக்காட்சி எனப்படும். பின்பு இவைகள் தெளிவாகி ஒளியாயேனும், ஒலியாயேனும், பிறிதொன்றாயேனும் தெளிவாகத் தோன்றும். இங்ஙனம் ஒளி, ஒலி, சுவை, ஊறு, நாற்றம் ஆகிய இவற்றை அறிதல் பொறிக்காட்சியாம்.

## மானதக்காட்சி

பொறிக்காட்சியாகிய ஒளி, ஒலி முதலியவற்றைக் கொண்டு பொருளை அறிதல் மானதக்காட்சியாம். மாம்பழத்திலிருந்து வரும் ஒளியை அறிதல் பொறிக்காட்சி. அவ்வொளியைக்கொண்டு மாம்பழத்தின் வடிவத்தை அறிதல் மானதக்காட்சி. இது கருதலினால் வருவது.

பொருளிலிருந்து வரும் ஒளியைக்கொண்டு அதன் வடிவத்தை அறிதற்கு அதன் கூறுகளின் இடத்தொடர்பை அறிதல் வேண்டும். உதாரணமாக, சப்தரிஷி என்னும் நட்சத்திரக்கூட்டத்தை நாம் அறியில், அந்த ஏழுநட்சத்திரங்களையும் காணுதலோடு அவற்றின் இடத்தொடர்பையும் அறிதல் வேண்டும். அப்படியான இடத்தொடர்பில்லாத ஏழு நட்சத்திரங்கள் சப்த

ரிஷி ஆகா. இதுபோல, மாம்பழத்தின் தோற்றத்தி லுள்ள கூறுகளின் இடத்தொடர்பை அறிந்தே அதன் வடிவத்தை அறிதல் கூடும்.

அந்தத் தோற்றத்தின் வடிவத்தை அறிய, அதைப் போல முன்கண்ட வடிவங்களின் நினைப்பு* வரும். அந்நினைப்பினாலே அது ஒரு மாம்பழம் என்ற அறிவு உண்டாகின்றது. மாம்பழத்தை முன் காணாதவன் அதை ஒரு பழமென்றுவது எண்ணுவான்.

அம் மாம்பழத்திலே கண்ணுக்குப் புலப்படாத தாகிய அதன் பிற்பக்கம் எப்படியிருக்குமென்பது முன் கண்ட மாம்பழங்களின் வடிவத்தைக்கொண்டு அறியப் படும். பலமுறை கண்ட பொருள்களின் சில பகுதிகளை மாத்திரம் நாம் கண்டு அவற்றிலிருந்து அப்பொருள் களின் முழுவடிவத்தையும் நாம் மட்டிடுதல் வழக்கம். சிலர் எழுதும்போது எழுத்துக்களின் முழுவடிவத்தை யும் எழுதாமற் சில பகுதிகளை மாத்திரம் எழுதுகிறார் கள். எழுத்திலே பயிற்சியுள்ளவர்கள் அவைகளை வாசிப்பார்கள். பயிற்சியில்லாத சிறுவர்கள் வாசிக்க மாட்டார்கள். மிகத்தெளிவான எழுத்துக்களை வாசிக் கும்போதும் ஒவ்வோரெழுத்தையும் நாம் பார்ப்பதில்லை; ஒரு சொல்லின் சில எழுத்துக்களை மாத்திரம் பார்த்து, அவற்றிலிருந்து முன்னநுபவத்தால், அச்சொல்லை மட் டிடுகின்றோம். இதனாலே அச்சுப்பிழை பார்க்கிறவர்கள் அநேக பிழைகளை நழுவ விடுகிறார்கள்.

இனி, அந்த மாம்பழம் காகிதத்தினாற் செய்யப் பட்டதோ, மண்ணினாற் செய்யப்பட்டதோ, மரத்தி

* ஒப்புமைச்சார்பினால் வரும். இதை கசு-ஆம் அதிகாரத்திற் காண்க.



லுண்டானதோ என்பதைப் பரிசம் மணம் சுவை முதலிய பிறபொறிகளின் துணைகொண்டு அறிதல் வேண்டும். பொறிக்காட்சியின் வடிவத்தை இடத்தொடர்பால் மட் டிட்டு, பழைய அறிவின் துணைகொண்டு இன்ன பொரு ளென்றறிதல் மானதக்காட்சியாம்.

## மனக்கோள்

மாம்பழத்தின் ஒளிவடிவத்தை யறிந்தபின்பு, அது இன்னதென்று அறிதற்கு, முன் கண்ட மாம்பழங்களின் ஞாபகம் வரும் என்றோம். முன் கண்ட மாம்பழங்கள் நிறத்தாலும் அளவாலும் பலவேறு வகைப்பட்டிருக்கும். அவைகளொவ்வொன்றின் ஞாபகமும் வருதல் சாலாது. ஆதலால், ஞாபகத்துக்குத் துலக்கமாய் வருவது அவற் றின் பொதுத்தன்மையாம்.

பொருள்களின் பொதுத்தன்மையை அறிதல் எவ் வாறு என்பதை ஆராய்வாம். இதற்கு அநேக அவய வங்களையுடையதாகிய பசுவை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

பசுக்கள் பல நிறமான மயிருடையனவாயினும், யாவும் மயிருடையன. மயிருடைமை பசுக்களின் ஒரு பொதுத்தன்மை. அவைகள் பலவகையான கொம்புக ளுடையனவாயினும், யாவுங் கொம்புடையன. கொம் புடைமை அவற்றின் ஒரு பொதுத்தன்மை. அவற்றுட் சில சிறுத்தும் சில பருத்தும், சில கொழுத்தும் சில மெலிந்தும் இருப்பினும் அவற்றின் வடிவம் ஒரே தன்மை யானது. அவற்றின் வடிவம் ஒரு பொதுத்தன்மை. இப்படியாக அநேக பொதுத்தன்மைகள் அவற்றிலே காணப்படுகின்றன. இவற்றின் தொகுதியே பசுக்களின்

பொதுத்தன்மையாம். இப்பொதுத்தன்மை ஓரினப் பல் பொருள்களிலிருந்து மனத்தினாலே கவர்ந்துகொள்ளப்படுதலினாலே மனக்கோள் எனப்படும்.

காட்சிப் பொருள்களைப் பற்றிய மனக்கோள் சிறப்புத்தன்மைகள் நழுவுதலால் வருவது. ஒருவன் அநேக பசுக்களைக் கண்டானாயின், எல்லாப் பசுக்களிலுங் காணப்பட்ட தன்மைகள் அவனுடைய மனத்திலே அதிகமாய்ப் பதியும். சிலவற்றில் மாத்திரங் காணப்பட்டவைகள் மனத்திலே பதியாமல் நழுவிப்போம். பத்துப் பசுக்களிலே இரண்டு மாத்திரம் வெண்ணிறமானவையாயின், வெண்ணிறம் பசுவென்ற கருத்தோடு சேராமல் நழுவிவிடும். இரண்டு மாத்திரம் கரியவையாயின், கார்நிறமும் நழுவிவிடும். இப்படியாகச் சிறப்புத்தன்மைகள் நழுவும்; அவை நழுவ, பொதுத்தன்மைகள் நிலைக்கும்.

காட்சிக்கெட்டாத பொருள்களின் மனக்கோள் கருதலாற் பெறப்படும். இரண்டு பொருள்களின் தொடர்பு வடிவமற்றது. தொடர்புகொண்டு பெறப்படும் அநேக தொடர்புப்பொருள்களும் வடிவமற்றவைகள். ஆதலால் இவற்றின் மனக்கோள்கள் கருதலாற் பெறப்படுவன. இவ்வகையான மனக்கோள்கள் நூல்களிற் பெரும்பாலும் வரும். எண் அநந்தம் தொடர் முதலிய கணிதநூல் மனக்கோள்களும், அணு மின்முதலிய பௌதிகநூல் மனக்கோள்களும், கடவுள் ஆன்மா முதலிய சமயநூல் மனக்கோள்களும் கருதல்வழியாக வந்தவைகளாம்.

### காட்சிப்போலிகள்

காட்சியிலே தவறுகள் பலவாறாக வரும். ஆயினும், அவைகள் திரிபுக்காட்சி இல்பொருட்காட்சி யென்னும்



இருவகைகளுள் அடங்கும். குற்றியைக் கள்வனாகக் காணுதல் திரிபுக்காட்சி. ஒன்று மில்லாத விடத்திலே பேயைக் காணுதல் இல்பொருட்காட்சி.

இவற்றுள், திரிபுக்காட்சி பொறித்திரிபினாலேனும் மனத்திரிபினாலேனும் உண்டாகும். ஒரு நிமிர்வரையும் மட்டவரையும் ஒரேயளவினவாயிருப்பினும், நிமிர்வரை மட்டவரையிலும் நீளமாகத் தோன்றும். ஆதலால், ஒரு சதுரம் சதுரம்போலத் தோன்றாது. சில சந்தர்ப்பங்களிலே நேர்வரை வளைவாகவும், சமாந்தரவரைகள் சமாந்தரமற்றவைகள் போலவுந் தோன்றும். ஒரு சிறிய பொருளும் ஒரு பெரிய பொருளும் ஒரே நிறை யுள்ளனவாயின், சிறியபொருள் மற்றதிலும் நிறைகூடியதுபோலத் தோன்றும். இவைகள் பொறித்திரிபினால் யாவர்க்கும் என்றும் இயல்பா யுண்டாகுந் திரிபுக்காட்சிகள்.

மனத்தைச் சுவைகளும் ஆசைகளுந் தாக்கும்போது, ஒன்று வேறொன்றாகத் தோன்றும். அச்சத்தினாலே குற்றி கள்வனாக அல்லது பேயாகத்தோன்றும்.

ஒருமுறை ஒரு கடற்சேனாபதி மீன்பிடிகாரரின் கப்பல்களைப் பகைவரின் போர்க்கப்பலாகக் கண்டு அவைகளைக் கடலில் ஆழ்த்தினான். பிறவூரில் நெடுங்காலம் வசித்த ஒருவன் தன்னூருக்குத் திரும்பிவருந் தினத்திலே, அவன் வரவை எதிர்பார்க்கும் அவனுடைய தாயாருக்குக் காற்றின் இரைச்சல் அவன் வரும் பண்டியின் இரைச்சலாகவும், அவனைப்போன்றவர்கள் அவனாகவும் தோன்றுதற்கு மூலகாரணம் மகனைக் காணும் ஆசையாம்.

இல்பொருட் காட்சியாவது இல்லாத பொருளைக் காணுதல். ஒருவர் ஒரு பொருளை நெடுநேரம் உற்றுப்

பார்த்துக்கொண்டு இருந்தாராயின், அப்பொருள் அவர் போகும் இடமெங்கும் தோன்றுதலுண்டு. கூத்துப் பார்த்துக்கொண்டு போனவர் படுத்திருக்கும் போது, அந்தக் கூத்துப் பாட்டுகள் அவருக்குக் கேட்பதுண்டு. கடற்பிரயாணஞ் செய்தவர்கள் கரைக்கு வந்தவுடனே நிலம் அசைவதுபோல அவர்களுக்குத் தோன்றும். * இளைப்பினுலும் மது முதலிய வெறிப்பொருள்களின் தாக்கத்தினுலும் இல்பொருள் தோன்றுதலுமுண்டு. இத்தாக்கங்கள், கண் காது முதலிய கருவிகளிலிருந்து மூளைக்குச் செல்லும் நாடிகளில் உண்டாகுந் தாக்கங்களை ஒக்குமென்றும், நாடிகளின் தாக்கத்தினுலே காட்சி யுண்டாவதுபோல இத்தாக்கங்களினுலும் காட்சி யுண்டாகும் என்றுஞ் சிலர் கூறுவர்.

ஒருவர் ஒரு பொருளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்போது, அப்பொருள் அவ்விடத்திலில்லாதிருக்க அது தோன்றுதலுமுண்டு. ஒரு சூத்திரரதத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்போது, அது வராதிருக்கவும் அதன் ஒலி கேட்பதும், சுடலையிலே பேயிருக்குமென்று அஞ்சிக்கொண்டு போகிறவனுக்குப் பேய்தோன்றுவதும் இவ்வகையானவைகளாம். இப்படியாக ஆசையினுலும் அச்சம் முதலிய சுவைகளினுலும் இல்பொருள் தோன்றுவதெவ்வாறெனின், அவ்வவற்றிற்குரிய பொருள்களின் வடிவம் மனதிலுண்டாகி மூளையில் அதிர்ச்சியை யுண்டாக்குமென்றும், அப்போது அவ்வப்பொருள்வெளியே யிருப்பதாகத் தோன்றுமென்றுஞ் சிலர் கூறுவர். இது உருவெளித்தோற்றம் எனப்படும். "அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாயமெல்லாம் பேய்" ஆவது இதனுலென்க.

* இவைகள் நினைத்தலால் வருவன. நினைத்தலின் தன்மையை கசு-ம் அதிகாரத்திற் காண்க.



## வினுக்கள்

க. ஒரு பொருளைக் காணும்போது பொருளுக்கும் மனத்துக்குமிடையே உள்ளவைகள் எவை (கூ)?

உ. ஒளியும் ஒலியும் தாக்கங்களையே ஆக்குவனவாயின், அவை புலப்படும்போது வேறுபடுதல் எவ்வாறு?

ங. பொறிக்காட்சி மானதக்காட்சியாதல் எவ்வாறு?

ச. காட்சிக் கெட்டாதவற்றின் மனக்கோள்கள் ஆக்கப்படுதல் எவ்வாறு?

ரு. காட்சிப்போலிகள் எவை ?

# பதினோராம் அதிகாரம்

## தொடர்பறிதல்

தொடர்பு—தொடர்புவகை—தொடர்புப் பன்மை.

### தொடர்பு

ஒருபொருளைக் காணும்போது அதன் தன்மைகளை அறிதல்போலப் பலபொருள்களைக் காணும்போது அவற்றின் தொடர்புகளை அறியலாம்.

ஒரு மைக் கூட்டைக் காணும்போது கூடானது மை இருக்கிறதற்கு இடமாதலையும் அது மையோடு இடத் தொடர்புடைமையையும் நாம் அறிகிறோம். அக்கூடு கரியதாயின், கருமைக்கும் அக்கூட்டுக்குமுள்ள தொடர்பு குணத்தொடர்பு என்பதை அறிகிறோம். அதிலுள்ள மையுங் கரியதாயின் கூட்டின் நிறத்துக்கும் மையின் நிறத்துக்கும் ஒப்புமைத் தொடர்புண்டென் பதை அறிகிறோம். அந்த மைக்கூட்டைக் கவிழ்க்கும் போது மை சிந்தாமலிருந்தால், மைக்கூட்டிலுள்ள அடைப்புக்கும் சிந்தாமைக்குமுள்ள தொடர்பு காரணத் தொடர்பென்பதை அறிகிறோம். மையும் கூடும் அடைப் பும் தனித்தனியே மைக் கூட்டின் சினையென்பதை யறிகிறோம். அந்த மையை ஒரு கிண்ணத்திலூற்றினால், கிண்ணத்திலிருக்கும் மைக்கும் மைக்கூட்டிலிருந்த மைக் கும் உள்ள தொடர்பு ஒற்றுமைத் தொடர்பென்பதை யறிகிறோம். இங்ஙனம் பொருள்களின் தொடர்பையறி தல் அறிவை நேரே பெறும் வழிகளுள் ஒன்றாகின்றது.



### தொடர்புவகை

பொருள்களுக் கிடையேயுள்ள தொடர்புகள் பத்து வகைப்படும். அவை பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய ஆறினுமிருந்து தோன்றும். பொருளிலிருந்து தோன்றுவன ஒரேபொருளாகும் ஒற்றுமைத்தொடர்பும், ஒரேவகைப்பொருளாகும் ஒப்பு மைத் தொடர்பும், ஓரினத்துப் பொருள்களின் கூட்ட மாகும் கூட்டத்தொடர்புமாம். இடம், காலம், சினை, குணம் ஆகிய இவற்றினின்று இடத்தொடர்பும், காலத் தொடர்பும், சினைத்தொடர்பும், குணத்தொடர்பும் முறையே தோன்றும். தொழிலிலிருந்து காரணத் தொடர்பும் குறித் தொடர்பும் அகத்தொடர்பும் தோன் றும். உண்ணுதல் பசிதீர்தற்கும் கற்றல் அறிவேறற்கும் விழுதல் நோவிற்கும் முறையே காரணங்களாதலால், தொழிலிலிருந்து காரணத்தொடர்பு தோன்றுதல்பெறப் படும். இருபொருள்களுக்கிடையே காரண காரியத் தொடர்பிருப்பினும் அத்தொடர்பு தோன்றாவிடத்து, ஒன்று மற்றதோடு குறித்தொடர்புடையதெனக் கொள்ளப்படும். அகத்தொழிலிலிருந்து அகத்தொடர்பு தோன்றும்.

இவற்றுள், ஒற்றுமைத்தொடர்பாவது ஒருபொருள் பலவாறாகத் தோன்றும்போதும் அது அப்பொருளே யாய் இருத்தல். நிலத்திலே நின்ற பூனை சுவரிலே ஏறி நின்றால், அது நின்ற இடம் வேறுபட்டாலும், அது ஒன்றேயாம். ஆதலால், நிலத்தில் நின்ற பூனைக்கும் சுவரில் நின்ற பூனைக்கும் உள்ள தொடர்பு ஒற்றுமைத் தொடர்பாகும். ஐந்து வயதுப் பையன் ஐம்பது வயது மனிதனாகும்போது, உயரம் பருப்பம் முதலிய பல

வாற்றல் வேறுபடினும், அவன் ஒருவனே யாவன். சகாதேவன் என்பதும் நகுலனுடைய தம்பி என்பதும் கருத்தினுல் வேறான பெயர்களாயினும் ஒருவனையே குறித்தலால், நகுலனுடைய தம்பிக்கும் சகாதேவனுக்கும் உள்ள தொடர்பு ஒற்றுமைத் தொடர்பாம்.

இருபொருள்கள் சில தன்மைகளில் மாத்திரம் ஒத்திருந்தால் அவற்றுக்குள்ள தொடர்பு ஒப்புமைத் தொடர்பு எனப்படும். மோரும் கள்ளும் நிறத்தினுலும், புலியும் பூனையும் வடிவத்தினுலும், முதலையும் மூர்க்கரும் கொண்டது விடாமையாலும் ஒப்புமைத் தொடர்புடையன. ஓரினத்துப்பொருள்கள் பலதன்மைகளில் ஒத்திருத்தலால் ஒப்புமைத் தொடர்புடையன. நிலத்தில் நிற்கும் பூனைக்கும் சுவரில் நிற்கும் வேறொரு பூனைக்குமுள்ளதொடர்பு ஒப்புமைத் தொடர்பு. வெண்மையும் கருமையும் நிறமென்னும் இனத்தைச் சேர்ந்தமையாலும் நல்வினையும் தீவினையும் வினையென்னும் இனத்தைச் சேர்ந்தமையாலும் ஒப்புமைத் தொடர்புடையன. ஆயினும் இவைகள் ஒன்றுக்கொன்று மாறானவைகளுமாம். கருமையும் நீலமும் அண்மையானவைகள். ஆகவே ஒப்புமைத் தொடர்பிலே மாறானவை அண்மையானவையெனப் பலதொடர்புகள் வருதல் காண்க.

ஓரினத்துப் பொருள்கள் சேர்ந்திருக்கும்போது அவற்றின் தொடர்பு கூட்டத் தொடர்பாம். அரசனும் மந்திரியும் வந்தனர் என்னுமிடத்து அரசனுக்கும் மந்திரிக்கும் உள்ள தொடர்பு கூட்டத்தொடர்பு. ஐந்து மாம்பழத்துக்கும் எட்டுவாழைப் பழத்துக்கும் விலை முப்பத்தாறு சதம் என்னுமிடத்து மாம்பழத்துக்கும் வாழைப் பழத்துக்கும் உள்ள தொடர்பும் இது. க+ச+ட—த என்பதிலே க, ச, ட, த ஆகிய இவற்றுக்குள்ள தொடர்பும் இது. இத்தொடர்பு கணித சாத்திரத்தில் அதிகமாய் வரும்.



இரண்டு பொருள்கள் இடத்தினுலே தொடர்புறுதல் இடத்தொடர்பாம். இது பலவாறாய் வரும். இலங்கையில் உள்ளது யாழ்ப்பாணம், இலங்கையைச் சுற்றியிருப்பது கடல், இலங்கைக்கு வடக்கே யுள்ளது இந்தியா என்னுமிடத்து, இலங்கைக்கும் யாழ்ப்பாணத்துக்குமுள்ள தொடர்பும் இலங்கைக்கும் கடலுக்குமுள்ள தொடர்பும் இலங்கைக்கும் இந்தியாவுக்குமுள்ள தொடர்பும் இடத்தொடர்புகளாம். இடத்தொடர்பு மேல் கீழ், முன் பின், வலம் இடம், கிழக்கு தெற்கு முதலிய சொற்களாற் குறிக்கப்படும். இத்தொடர்பு பூமி சாத்திரத்திலும் வானசாத்திரத்திலும் கேத்திர கணிதத்திலும் அதிகமாய் வரும்.

இருநிகழ்ச்சிகளுக் கிடையேயுள்ள காலத்தால் வருவது காலத்தொடர்பு. மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை என்பதில் மின்னுக்கும் மழைக்குமுள்ள தொடர்பு காலத்தொடர்பு. பொழுது பட்டபின் விளக்கேற்றினுன் என்னுமிடத்து பொழுது படுதலுக்கும் விளக்கேற்றுதலுக்குமுள்ள தொடர்பும் இது. இவன் படிக்கத் தொடங்கி ஆறு ஆண்டுகளாயின என்னுமிடத்து இவன் படிக்கத் தொடங்கியதற்கும் இப்போதைக்கும் உள்ளதும் இது. இத்தொடர்பு சரித்திரத்தில் அதிகமாய் வரும்.

ஒரு பொருளின் கூறுகள் அதன் சினைகளாம். சினைக்கும் பொருளுக்குமுள்ள தொடர்பு சினைத்தொடர்பெனப்படும். ஒரு பூமாலையிலுள்ள ஒவ்வொரு பூவும்

அவற்றைக்கட்டும் நூலும் பூமாலையின் சினைகள். ஒரு மொழித் தொடர்பிலுள்ள ஒவ்வொரு சொல்லும் அதன் சினைகள். க+ச+ட என்பதுக்கு க, ச, ட, +, க+ச, க+ட, ச+ட ஆகிய இவைகள் சினைகளாம். அன்றியும் உப்பு கடல்நீருக்கும், சீனி இனிமையான பழங்களுக்கும், நெய் தயிருக்கும் சினைகளாம். சினைத்தொடர்பு இரசாயனசாத்திரத்தில் அதிகமாய் வரும்.

குணத்துக்கும் குணிக்குமுள்ள தொடர்பு குணத்தொடர்பெனப்படும். செம்மை நிறத்துக்கும் இரத்தத்துக்குமுள்ள தொடர்பு குணத்தொடர்பு. சூட்டுக்கும் நெருப்புக்குமுள்ள தொடர்பும், கூர்மைக்கும் கத்திக்குமுள்ள தொடர்பும், குளிருக்கும் பனிநீருக்குமுள்ள தொடர்பும் இது. இத்தொடர்பு நூல்கள் யாவற்றிலும் வருவது.

காரணத்தொடர்பாவது காரணத்துக்கும் காரியத்துக்குமுள்ள தொடர்பு. விழுதலுக்கும் காயத்துக்குமுள்ள தொடர்பு காரணத் தொடர்பாம். அறப்பற்றுக்கும் நல்லொழுக்கத்துக்குமுள்ள தொடர்பும், வினைசெய்தலுக்கும் இளைப்புக்குமுள்ள தொடர்பும், மதுபானத்துக்கும் மதிமயக்கத்துக்குமுள்ள தொடர்பும், சோம்பலுக்கும் வறுமைக்குமுள்ள தொடர்பும், தூயமனதுக்கும் நல்வாழ்க்கைக்குமுள்ள தொடர்பும் இது. காரணத்திலே பல கூறுகள் உளவாயின் அவற்றின் தொகுதியே காரணமெனற்பாலது. ஆயினும் அவற்றுள் ஒன்றையேனும் பலவற்றையேனும் காரணமென்பாருமுளர். ஒரு மாணக்கன் பரீட்சையிலே சித்தியடையாமல் இருத்தற்கு முயற்சிக்குறைவு, தேகாரோக்கியக்குறைவு, ஆசிரியரின் திறமைக்குறைவு முதலிய பல கூறுகளின் தொகுதி



உண்மையான காரணமாக இவற்றுள் ஒன்றைமாத்திரம் காரணமாகச் சொல்லுதலுமுண்டு.

குறியாவது ஒரு பொருளை அறிதற்கு ஏதுவாய் நிற்பது. குறிக்கும் பொருளுக்குமுள்ள தொடர்பு குறித்தொடர்பெனப்படும். குறிகள் பெரும்பாலும் காரணமாயேனும் காரியமாயேனும் உள்ளவை. அத்தொடர்பு அறியப்படாத வழி அவைகள் குறிகளெனப்படும். புகையை நெருப்பின் காரியமென்று அறியாதார் அது நெருப்போடு குறித்தொடர்புடையதென்பர். கொம்புடைமைக்கும் இரைமீட்டற்குமுள்ள தொடர்பும், சிவப்புக் கொடிக்கும் அபாயத்துக்குமுள்ள தொடர்பும், உலோகத் தன்மைக்கும் பகாப் பொருளுக்குமுள்ள தொடர்பும் குறித்தொடர்பாம். இது நியாய சாத்திரத்தில் அதிகமாய் வரும்.

அகத்தொடர்பாவது ஒரு பொருளுக்கும் அதைப் பற்றிய மனமுயற்சிக்குமுள்ள தொடர்பாம். காட்சிக்கும் காண்டலுக்குமுள்ள தொடர்பும், ஒலிக்கும் கேட்டலுக்குமுள்ள தொடர்பும், விரும்பப்படும் பொருளுக்கும் விருப்பத்துக்குமுள்ள தொடர்பும், துணியப்பட்ட செயலுக்கும் துணிபுக்குமுள்ள தொடர்பும் இது.

## தொடர்புப்பன்மை

இரண்டு பொருள்களுக்குப் பல தொடர்புகள் இருத்தலுண்டு. ஆறு என்ற எண்ணுக்கும் முப்பத்தாறு என்ற எண்ணுக்கும் பல தொடர்புகள் உண்டு. முப்பத்தாறு ஆறிலும் முப்பது கூடியது; முப்பத்தாறு ஆறில் ஆறு மடங்கு; முப்பத்தாறு ஆறின்சதுரம்; அவைகள் இரண்டு மூன்று ஆகிய சினைகளை யுடையவை

இவற்றுள் எத்தொடர்பு கொள்ளவேண்டியதென்பது சந்தர்ப்பத்தால் அறியப்படுவது. உதாரணமாக இவற்றோடு ஐம்பத்தாறு அடுத்துவருமாயின் இரண்டைச் சினையாக வுடைமையே இவற்றின் தொடர்பென்பது நிச்சயிக்கப்படும்.

இராமன் என்பவன் பூதனுடைய வீட்டுக்குப்போனானாயின், அவன் பூதனுக்கு உபகாரஞ் செய்யப்போன நண்பனாகலாம்; அல்லது நண்பனைப்போல் நடித்துப் பொல்லாங்கு செய்யப்போன பகைவனாகலாம். இவ்விரண்டனுள் எத்தொடர்பு உண்மையானதென்பது குறிப்புகளினால் முடிவு செய்யற்பாலது. பகைவனை நண்பனென்றெண்ணி இடர்ப்பட்டோர் பலர்.

ஒரு பொருளிலே பல கூறுகளுளவாயின் அவற்றுள் ஒன்றுக்கொன்றுள்ள தொடர்புகளாலும் தொடர்புப் பன்மை நேரும். ஓர் ஐங்கோணம் ஒழுங்கானதோ ஒழுங்கற்றதோ என்றறிதற்கு, அதன் பக்கங்களும் கோணங்களும் அளவால் ஒத்தனவோ ஒவ்வாதனவோ என்பதை யறியவேண்டும். அது ஒழுங்கானதாயின் பக்கங்களின் ஒப்புமைத் தொடர்பு நான்கும், கோணங்களின் ஒப்புமைத் தொடர்பு நான்கும் அறியப்படல் வேண்டும். இத்தொடர்புகள் ஒன்றின்பின் ஒன்றாக அறியப்பட வேண்டியவை. இங்ஙனம் அறிதல் வகைமுறை எனப்படும்.

பல ஆண்டுகளாகக் காணாமலிருந்த ஒருவனை மட்டிட வேண்டுமாயின் அவனுடைய உடம்பின் ஒவ்வோர் அங்கத்தின் தொடர்பையும் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பார்த்தலாகாது. அவனுடைய வடிவம் முழுவதையும் பார்த்தல் வேண்டும். முதற்பார்வையிலே அவன்முன்



அறியப்பட்டவன் என்பது தோன்றும். பின்னும் பல முறை பார்க்க அவனுடைய வடிவம் அதிகமாகப் புலப்படும். அதனாலே அவன் யாவன் என்பதை அறியலாம். இந்த வகையான தொடர்புப் பன்மையிலே, தொடர்புகள் யாவும் ஒரே முறையில் அவதானிக்கப்படுகின்றன. பல முறை பார்த்தலால் அத்தொடர்புகள் படிப்படியாகத் தெளிவாகி வரும். பல தொடர்புகளை இப்படிக் காணுதல் தொகை முறை எனப்படும்.

கல்வியிலே வகைமுறை தொகைமுறை ஆகிய இரண்டும் ஆளப்பட்டு வருகின்றன. நுண்மையாகக் கற்கவேண்டிய நூல்களுக்கு வகைமுறையும், நயத்தற்குரியனவாகிய இலக்கியங்களுக்குத் தொகைமுறையும் சிறப்பாக உரியவை. ஆயினும் எவ்வகைக் கல்விக்கும் முதலிலே தொகை முறையும், பின்பு வகைமுறையும் வேண்டப்படும்.*

இலக்கணம், கணிதம், நியாயம் முதலிய நூல்களைக் கற்கும்போது முதலில் இலகுவானவற்றையும், பின்பு படிப்படியாக அரியனவற்றையும் கற்றல் தொகைமுறையாகும்.†

தொகை முறையாகக் கற்கும்போதும் ஒவ்வொன்றையும் வகைமுறையாகக் கற்றல் வேண்டும். உயிரெழுத்துக்கள் பன்னிரண்டு என்பதை முதன் முறையிலேயே அறிதல் வேண்டும். முதலில் எட்டெழுத்

* "தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்" என்றார் நன்னூலார்.

† தமிழிலே எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கற்போர் இலக்கண வினாவிடை, இலக்கணச் சுருக்கம், நன்னூற்காண்டிகையுரை, நன்னூல் விருத்தியுரை, தொல்காப்பியம் (எழுத்ததிகாரம், சொல்லதிகாரம்) ஆகிய இவற்றை ஒன்றன்பின் ஒன்றாகக் கற்றல் தொகைமுறையாம். ஒவ்வொன்றிலும் வகைமுறை வரும்.

துக்கள் என்றும், பின்பு பத்தென்றும், பின்பு பன்னிரண்டு என்றும் கற்றல் பொருந்தாது. இலக்கியத்தைக் கற்கும்போது முதலிலே கதையையும் கதைச் சிறப்பையும் அறிதல் வேண்டும். இதற்கு ஒவ்வொரு பாட்டின் முழுப் பொருளையும் அறிய வேண்டியதில்லை. இரண்டாம் முறை கற்கும்போது ஒவ்வொரு பாட்டின் பொருளையும் அதன் சொற்சுவை பொருட்சுவைகளையும் அறிதல் வேண்டும். மூன்றும் முறை கற்கும்போது ஒவ்வொரு பாட்டிலுமுள்ள நுட்பங்களும் அதிலுள்ள குறை நிறைகளும் அவற்றிற்கும் பிற இலக்கியங்களி லுள்ளவற்றிற்கும் இடையேயுள்ள தார தம்மியங்களும் கற்றல் தக்கதாகும். இது தொகைமுறையில் வகைமுறையாம்.

### வினுக்கள்

க. தொடர்புகளின் வகைகள் எவை (க௦)?
உ. வெண்மைக்கும் கருமைக்கும் ஒப்புமைத் தொடர்புண்மை எவ்வாறு?
ங. அகத் தொடர்பாவது யாது?
ச. தொகைமுறைஅறிவு எவ்வகைத் தொழிலுக்குப் பொருத்தமானது?
ரு. பின் வருவனவற்றின் தொடர்புகள் எவை:—
(அ) துதிக்கைக்கும் யானைக்கும்
(ஆ) சூட்டுக்கும் சுரநோய்க்கும்
(இ) சித்திரத்துக்கும் அழகுக்கும்
(ஈ) அறிதலுக்கும் அறியப்பட்ட பொருளுக்கும்
(உ) தொழில் நிறைவேற்றத்துக்கும் இன்பத்துக்கும்
(ஊ) பானைக்கும் சோற்றுக்கும்
(எ) கல்விக்கும் அறிவுக்கும்
(ஏ) பசுவுக்கும் கன்றுக்கும்
(ஐ) எழுக்கும் பதினுலுக்கும்
(ஒ) கோழி கூவுதற்கும் விடிதற்கும்
(ஓ) பஞ்சத்துக்கும் நோய்க்கும்

# பன்னிரண்டாம் அதிகாரம்

## தொடர்புப் பொருளறிதல்

தொடர்புப்பொருள்—பிறபொருட்டொடர்பு—அளவுமாற்றம்—பிரமாணப்பிரயோகம்—கல்விப்பிரயோகம்—ஆக்கப்பிரயோகம்.

### தொடர்புப்பொருள்

முன்னதிகாரத்தில் இரண்டு பொருள்களை அறியில் அவற்றின் தொடர்பை யறியலாமென்பது காட்டப்பட்டது. அப்படியாயின், இரண்டு பொருள்களுள் ஒன்றையும் அவற்றின் தொடர்பையும் அறியில் மற்றப்பொருளைப் பொதுவகையாய் அல்லது சிறப்பு வகையாய் அறிதல் கூடும் என்பது பெறப்படும்.

ஒரு குழந்தை பசியில்லாதபோது அழுமானுல், அழுதற்குக் காரணம் ஏதோ ஒரு துன்பம் என்று எண்ணிக்கொண்டு அக்குழந்தையின் தாய் கிட்டபோய்ப் பார்ப்பாள். அந்த நேரம் குழந்தையின் பசி நேரமானுல், அது அழுதற்குக் காரணம் பசியென்று நினைத்துப் பால்கொடுக்கப் போவாள். இந்த இரண்டு சமயங்களிலும் அறியப்பட்ட பொருள் குழந்தை அழுதல்; தொடர்பு காரணத்தொடர்பு; தொடர்புப்பொருள் முந்தியதிலே பொதுவகையான துன்பம்; பிந்தியதிலே சிறப்புவகையானதாகிய பசி. அவள் பொருளையும் தொடர்பையும் கொண்டு தொடர்புப் பொருளை அறிகிருள்.

சிலுவை அணிந்திருக்கும் ஒருவரைக் கண்டு அவர் கிறிஸ்தவர் என்றறிதல் சிலுவையாகிய குறித்தொடர்

யைக்கொண்டு தொடர்புப்பொருள் அறிதலாகும். சூரியன் நிற்கும் இடத்தைப்பார்த்து மூன்றுமணி ஆய் விட்டது என்றறிதல் இடத்தொடர்புகொண்டு நேர மாகிய தொடர்புப்பொருளை அறிதல். ஒருவனுடைய எழுத்தைக்கண்டு அவன் இன்னான் என்றறிதல் தொழிற் றொடர்புகொண்டு பொருளறிதல். மாம்பழத்தின் முற் பாகத்தைக்கண்டு அது மாம்பழம் என்றறிதல் சினைத் தொடர்புகொண்டு பொருளறிதல்.

தொடர்புப் பொருளறிதல் காட்சிக்கெட்டாத வற்றைஅறிதற்கும் அறிவை வளர்த்தற்கும் ஒரு முக்கிய சாதனம். இது நூல்கள் யாவற்றிலும் விரவியுள்ளது; நியாய நூலுக்கும் கணித நூலுக்கும் உயிராயும், பௌதிக நூலுக்கும் இரசாயன நூலுக்கும் பற்றுக்கோடாயும் உள்ளது.

தொடர்புப்பொருள் காட்சியாலேனும் கருதலா லேனும் இரண்டினாலேனும் அறியப்படுகின்றது. ஒரு வகுப்பிலுள்ள மாணுக்கர்களுள் நெடியவனைக் காட்சி யாலும், சோம்பலின் பயன் வறுமை யென்பதைக் கருத லாலும், பனிநீர் வெப்பத்தினால் உருகும் என்பதைக் காட்சி கருதல் ஆகிய இரண்டினாலும் அறியலாம்.

### பிறபொருட்டொடர்பு

தொடர்புகள் சில சந்தர்ப்பங்களிலே நேரே வராமல் பிறபொருள்களின் தொடர்பாய் வரும். "ஐந்து பலாப் பழம் பத்து ரூபாவாயின், எட்டுப்பலாப்பழங்களின் விலை யாது என்னுமிடத்து, எட்டுப் பலாப்பழங்களுக்கும் அவற்றின் விலையாயுள்ள ரூபாக்களின் தொகைக்குமுள்ள தொடர்பு நேரே வரவில்லை. அத்தொடர்பு ஐந்து



பலாப்பழங்களின் விலை பத்து ரூபா என்பதில் உள்ளது; அது இருமடங்கு என்பது. இந்தத் தொடர்பைக் கொண்டு எட்டுப் பலாப்பழங்களின் விலை பதினாறு ரூபா என்பது அறியப்படும். தாமரைக்கும் ஞாயிறு தோன்று தற்கும் உள்ள தொடர்பு ஆசிரியருடைய முகத்துக்கும் எதுக்கும் உள்ளது என்பதை ஆராயுமிடத்து, ஞாயிறு தோன்றத் தாமரை மலருதலினால், அத்தொடர்பு மலரு வித்தலாகிய தொழிற்றொடர்பென்பதும், அங்ஙனம் ஆசிரியருடைய முகத்தை மலருவிப்பது மாணுக்கருடைய சமுகமாதலால், தொடர்புப்பொருள் மாணுக்கரது சமுகம் என்பதும் பெறப்படும். சந்திரனுக்கும் பூமிக்கும் உள்ள தொடர்பு பூமிக்கும் எதுக்கும் உள்ளது என்பதை ஆராயுமிடத்து, பூமி சந்திரனாற் சுற்றப் படுவதாதலால் தொடர்புப் பொருள் பூமியாற் சுற்றப்படுவதாகிய சூரி யனாதல் வேண்டும். செல்வத்துக்கும் வறுமைக்குமுள்ள தொடர்பு ஒளிக்கும் எதுக்கும் உள்ளதெனின், வறுமை செல்வத்துக்கு மாறுனதாதலால்*, தொடர்புப் பொருள் ஒளிக்கு மாறுனதாகிய இருள் ஆதல் வேண்டும்.

பிறபொருட்டொடர்பு இருமடியாயும் வரும். யாழ்ப் பாணத்துக்கும் பனம்பழத்துக்கும் உள்ள தொடர்பு அரேபியாவுக்கும் எதுக்கும் உள்ளது என்னுமிடத்து, யாழ்ப்பாணம் பனையோடு இடத்தொடர்புடைமையா லும் பனைபழத்தோடு காரணத் தொடர்புடைமையாலும், யாழ்ப்பாணத்துக்கும் பனம்பழத்துக்கு முள்ள தொடர்பு இருமடியாயது. அப்படியே அரேபியாவை இடமாயுடைய பொருள் பேரீஞ்சு; அது தன்பழத்துக்குக்

* மாறுதல் ஒப்புமைத் தொடர்பின் ஒரு வகை. முன்னதிகாரத்திற் கூறப்பட்ட ஒவ்வொரு தொடர்பும் பலவகைப்படும் என்பதை அறிக.

காரணமாதலால், தொடர்புப் பொருள் பேரீச்சம் பழமாம்.*

பிறபொருட்டொடர்பு சுருங்கி வருதலுமுண்டு. "கொம்பரில்லாக்கொடிபோல் அலமந்தனன்" என் பதிலே கொடிக்கு வேண்டியது கொம்புபோல எனக்கு வேண்டியது கடவுளுடைய திருவருள் என்பதும், அஃ தில்லாமையால் அலமந்தனன் என்பதும் அடங்கியிருக் கின்றன. இதனிலும் சுருக்கமானது "பாலர்தோட் டம்" என்னும் தொடர்மொழி. இது, அநேக பூண்டுகள் இருக்கும் இடமாயும் ஒவ்வொரு பூண்டின் முழுவளர்ச் சிக்கும் வேண்டிய யாவும் செய்யப்படும் இடமாயும் தோட்டமிருப்பதுபோல அநேக பாலர்கள் இருத் தற்கும் அவர்கள் எல்லாத்துறைகளிலும் வளர்ச்சி

*பிறபொருட் டொடர்பு உவமானத் தொடர்பெனவும் படும். உவ மானங்கள் கருகலான விஷயங்களை விளக்குதற்குப் பெருந்துணையானவை சூடாக்கப்பட்ட இருப்புச் சலாகை பருத்தற்குக் காரணம் யாது என்னு மிடத்து, காரணத் தொடர்பையுடைய பொருள் வேண்டப்படுகின்றது. அங்ஙனம் பருத்தல் ஒரு கூட்டத்திலே நெருக்கமாக நிற்குஞ் சனங்கள் நெருக்கமின்றி நின்றாற் கூட்டம் பருப்பதை நிகர்க்கும் எனல் அதைத் தெளிவாக்கும். பெருமாக்கோதையாருக்கு வண்ணானுடைய உவர்மண் பூச்சு திருநீற்றுப் பூச்சாகத் தோன்றியதெவ்வாறெனில், அங்ஙனம் தோன்றி யமை அபின்தோணிக்காரனுக்குக் கடலிலே அடிவானத்திலே கருமை யாகத் தோன்றுவதெல்லாம் காவற்கப்பலின் புகையாகத் தோன்றுதலைப் போலும் என்றும், தோணிக்காரனுடைய போலிக்காட்சிக்குக் காரணம் அச்சமாவதுபோலப் பெருமாக்கோதையாருடைய போலிக்காட்சிக்குக் காரணம் திருநீற்றிற்கொண்ட பேரன்பு என்றும் விளக்குதல் உவமான முறையாம். வீசகணிதத்திலே பின்னங்களைக் கூட்டும் முறை பாடீ கணிதப் பின்னங்களைக் கூட்டும்முறையே என்பதும், சனத்தொகை பெருகு தலைக் கணிக்கும்முறை தொடர்வட்டியைக் காணும் முறையே என்பதும் உவமான முறைகளாம்.



யடைதற்கு வேண்டிய தொழில்கள் யாவும் செய்தற்கும் இடமாயுள்ள சிறுவர் பள்ளிக்கூடம் என விரியும்.

பிறபொருட் டொடர்பாற் பொருளறியுமிடத்து, தொடர்பறிதலும் தொடர்புப்பொருளறிதலும் ஆகிய இரு தொழில்கள் ஒரே சமயத்தில் நிகழ்தலால், விவேகம் குறைந்தவர்களும் அவதானமில்லாதவர்களும் பிழைபடுவர். "கல்வியாகிய பயிருக்குக் கண்ணீராகிய மழை வேண்டும்" என்னும் பிழைமொழி பயிருக்கும் மழைக்கு முள்ள தொடர்பு கல்விக்கும் கண்ணீருக்கு முள்ள தொடர்பென விரியும். இதிலே தொடர்புப் பொருள் கல்விப்பற்று; கண்ணீரன்று. சூரியன் பூமிக்கு ஒளிகொடுத்தலாலே, விளக்குக்கும் வீட்டுக்கு முள்ள தொடர்பே சூரியனுக்கும் பூமிக்கு முள்ளது எனக்கொண்டு, வீடு விளக்கைச் சுற்றாமையால் பூமி சூரி யனைச்சுற்றாது என்று கருதல் பொருந்தாது. தர்க்கம் செய்வோர் தக்க நியாயமில்லா விடத்துப் போலி உவ மானங்களைக்கொண்டு தம் மதத்தை நிறுவ முயலுவர்.

### அளவுமாற்றம்

பிறபொருட்டொடர்பறிதலின் ஒரு வகை அளவு மாற்றம் எனப்படும். அளவுமாற்றமாவது ஒரு பொரு ளின் அளவுகளை ஒரே கணக்காகச் சிறுப்பித்தல் அல்லது பருப்பித்தலாம். உ00யார் நீளம் கஙுயார் அகலமுள்ள ஒரு தோட்டத்தின் படத்தை இரண்டங்குல நீளம் ஒன்றரை அங்குல அகலமுள்ளதாகக் கீறுதல் சிறுப்பித் தலாம். ஈயினுடைய நாமிகச் சிறிதாதலால், அதன் இயல்பை அறிதற்காக, உருப்பெருக்கியிற் கண்டபடி, அதன்வடிவத்தை வரைதல் பருப்பித்தலாம். இவற்றி

லேயன்றிக் கல்வி முறையிலும் அளவுமாற்றம் பயன்படுகின்றது.

கடினமான கணக்குகளை விளக்குதற்கு அவற்றைச் சிறுப்பித்து வாய்க்கணக்குகளாக்குதல் ஓர் உபாயமாம். வாய்க்கணக்காக்கும்போது எண்கள் சிறுப்பிக்கப்பட்டு விஷயம் இலகுவாக்கப்படுதலோடு இரசிப்பித்தற்காகக் கற்கும் மாணுக்கர்கள் அதனோடு தொடர்புறுத்தப்படுவர்.* சிறு கணக்குகள் செய்த முறையைப் பெருங்கணக்குகளுக்கு உபயோகிக்கும்போது பருப்பித்தல் வரும். (க+ங) உடைய சதுரத்தை அறியும் முறையை (க+ங+ச) உடைய சதுரத்தை அறிதற்கு உபயோகித்தல் பருப்பித்தலாம்.

தௌர்ப்பல்லியம் என்னுஞ் சொல்லின் பொருளைச் சௌக்கியம் என்ற சொல்லைக்கொண்டு விளக்குதல் கூடும். சௌக்கியம் என்னுஞ் சொல் சுகம் என்னுஞ் சொல்லோடு தொடர்புடையதென்பது இலகுவிற் புலப்படும். சௌக்கியத்துக்கும் சுகத்துக்கும் உள்ள தொடர்பு தௌர்ப்பல்லியத்துக்கும் எதுக்கும் உள்ளதெனில், சௌக்கியம் என்பதிலுள்ள ஔகாரம் உகரமாக, யகர

* "இராமன் ஒரு தோட்டத்தைப் பதினெட்டுநாளிற் கொத்துவான்; பூதன் இருபத்துநாலு நாளிற் கொத்துவான். ஆயினும் அவர்கள் இருவரும் சேர்ந்து அதைக் கொத்தி முடித்தார்கள். இருவருக்கும் பொதுவிலே ௧௧ ரூபா, ௫௫ சதம் கூலியாகக் கொடுக்கப்பட்டது. அதிலே இராமன் எவ்வளவு எடுப்பான்?" என்னுங் கணக்கை விளக்குதற்குப் பின்வரும் கணக்கை ஒரு மாணுக்கனைப் பார்த்துச் சொல்லலாம், "நீ ஒரு வேலியை ஒரு நாளில் அடைப்பாய். உன் பக்கத்திலே நிற்கும் கணபதிப்பிள்ளை இரண்டு நாளில் அடைப்பான். ஆயினும், நீங்கள் இருவரும் அந்தவேலியை அடைக்க, உங்களுக்குப் பொதுவிலே எழுபத்தைநது சதம் கிடைத்தால், அதில் எவ்வளவு நீ எடுப்பாய்?"



மெய்யும் அதன்முன் நிற்கும் உயிர்மெய்யும் கெட, சௌக்கியம் சுகமாகும். அப்படியே, தௌர்ப்பல்லியம் துர்ப்பலம் ஆகும்.

## பிரமாணப்பிரயோகம்

தொடர்புப்பொருளறிதல் பிரமாணப் பிரயோகத்தில் வரும். இங்கே பிரமாணம் என்றது இரசாயனம், கணிதம், நியாயம், இலக்கணம் முதலிய நூல்களில் வரும் விதிகளையும் கட்டளைச்சட்டங்கள் முதலியவற்றையுமாம். பிரமாணமானது பொருள்களைப் பொதுவகையாகக் கூறுவது; பிரயோகம் அதைச் சிறப்புவகையாகக் கூறுவது. "உலோகங்கள் பகாப்பொருள்கள்" என்பது இரசாயனநூல் விதி. அதை இரும்புக்குப் பிரயோகிக்கும் போது "இரும்பு பகாப்பொருள்" என்பது பெறப்படுகின்றது. தனிவட்டியைக் காணுதற்குப் பிரமாணம், "முதற்பணம், காலம், ஒன்றன்வட்டி ஆகிய இவற்றைக் குறிக்கும் எண்களின் குணிதம் தனிவட்டி" என்பது. "௪௫௦ ரூபாவுக்கு ஐந்து வருடத்துக்கு ரூபாவுக்கு வருடம் ஆறு சதம் வட்டியாக முழுவட்டி யாது" எனில், அது ௪௫௦, ௫, ௬ சதம் ஆகிய இவற்றின் குணிதம் என்பது பெறப்படும்.

## கல்விப்பிரயோகம்

கல்வி உபயோகப்படுத்தவேண்டியதொன்றுதலால், கலைகளைக் கற்கும்போது அவற்றிலுள்ள வாய்மைகளையும் விதிகளையும் உபயோகித்தல் இன்றியமையாதது. இந்த உபயோகம் போலிப்பிரயோகம் உண்மைப்பிரயோகம் என இருவகைப்படும். தனிவட்டியைக் கூறும் விதியைக் கற்றபின் அவ்விதி உபயோகிக்கப்படுங் கணக்குகளைக்

கணக்குப்புத்தகத்திலிருந்து எடுத்துச் செய்தல் போலிப் பிரயோகம்; வட்டிக்குப் பணங் கொடுத்தால் அல்லது வாங்கினால் வட்டியைக் கணக்கிடுதல் உண்மைப்பிரயோகம். தர்க்கநூல் விதிகளை அந்நூலிலுள்ள நியாயங்களைப் பரீட்சித்தற்காக உபயோகித்தல் போலிப்பிரயோகம்; பிறனொருவனோடு வாதஞ் செய்யும்போது உபயோகித்தல் உண்மைப்பிரயோகம். நீதி நூல்களிலுள்ள விதிகளை உபயோகித்து ஒருவனுடைய ஒழுக்கம் தக்கதோ தகாததோ என்றறிதல் போலிப்பிரயோகம்; அவ்விதிகளின்படி ஒழுகுதல் உண்மைப்பிரயோகம். நயப்புவிதிகளைக் கொண்டு ஒரு பாடலை நயத்தல் போலிப்பிரயோகம்; அவ்விதிகளின்படி செய்யுளியற்றல் உண்மைப் பிரயோகம். பிரயோகமின்றிக் கற்குங் கல்வி கல்வியன்று; அது கேள்வியாம்.

## ஆக்கப்பிரயோகம்

தொடர்பறிதலும் தொடர்புப் பொருளறிதலும் ஒன்றுக்கொன்று துணையாய் எவ்வகைக் கருதலையும் தம்முள் அடக்குகின்றன. உள்ளதை யறிதற்குத் தொடர்பறிதலும் புதிதாக ஒன்றை யாக்குதற்குத் தொடர்புப் பொருளறிதலும் அதிகமாய் உபயோகப்படும். பேரறிஞர்கள் காணும் புதிய உண்மைகளுக்கும் அவர்கள் புதிய யந்திரங்களை ஆக்கும் முறைக்கும், பாலர், பித்தர், புலவர் முதலியோருடைய கற்பனைகளுக்கும் தொடர்புப் பொருளறிதலே முக்கிய ஆதாரமாகின்றது.



## வினாக்கள்

௧. காட்சியினாலே தொடர்புப்பொருள் அறிதற்குப் புத்தகத்திலில்லாத ஓர் உதாரணம் கூறுக.

௨. தொடர்புப்பொருளறிதல் பிரயோகிக்கப்படுந் துறைகள் கூறுக. (௩)

௩. பிரமாணத்திலே பொருளும் தொடர்புப்பொருளும் எவ்வாறு கூறப்படுகின்றன?

௪. (க) புத்தகத்துக்குச் சினைத்தொடர்புடையது எது?
(ங) நெருப்புக்குக் குணத் ,, ,,
(ச) உண்ணுதற்குக் காரணத் ,, ,,
(ஞ) துக்கத்துக்குக் குறித் ,, ,,
(ட) தேனுக்கு இடத் ,, ,,

௫. (க) பாம்புக்குங் கீரிக்குமுள்ள தொடர்பு எலிக்கும் எதுக்கும் உள்ளது?
(ங) தோணிக்குங் கடலுக்குமுள்ள தொடர்பு ஒட்டகத்துக்கும் எதுக்கும் உள்ளது?
(ச) பயிருக்குந் தோட்டத்துக்குமுள்ள தொடர்பு பாலருக்கும் எதுக்கும் உள்ளது?
(ஞ) முட்டைக்கும் பட்சிக்குமுள்ள தொடர்பு வித்துக்கும் எதுக்கும் உள்ளது?
(ட) நாலுக்கும் பதினாறுக்குமுள்ள தொடர்பு ஐந்துக்கும் எவற்றுக்கும் உள்ளது?

௬. பின்வரும் வாக்கியங்களுள் இரண்டு வாக்கியங்களுக்கும் மற்றையதுக்கும் குறிததொடர்புண்டோ என்பதை ஆராய்க.
(க) அரசனை அவமதிப்பவன் தேசப்பற்றுடையவன் ஆகான்.
(ங) தேசப்பற்றுடையோர் யாவரும் கட்டளைச் சட்டங்களுக்கு அமைபவர்.
(ச) கட்டளைச் சட்டங்களுக்கமைபவர் அரசனை அவமதியார்.

# பதின்மூன்றும் அதிகாரம்

## கற்பனை

கற்பனையின் வகைகள்—கனவகை—கணிப்புவகை—நுட்பவகை.

### கற்பனையின் வகைகள்

இல்லாத ஒன்றை மனத்தில் ஆக்குதல் கற்பனை. சிறுவர்கள் தூண்களை மாணுக்கராக்குதலும், கண்ணுடிவிற்போன் அரசன் மகளை மணம்செய்தலும், மழை பெய்விப்பவன் நானே என்று பைத்தியகாரன் நினைத்தலும், பின்னர்க் கட்டும் வீட்டின் படத்தைச் சிற்பன் வரைதலும், போர் எப்படி நடைபெறவேண்டுமென்று சேனுபதி முன்னர்க் கணித்தலும், பரோபகாரி பிறர் துயரத்தை மட்டிட்டுத் தனதாக்கலும், இளஞ்செழியன் ஆயிரம் பொற் கொல்லரைப் பலிசெய்தான் என்று கதை வல்லோன் கண்டதும், "அக்கடுவிடத்தைஅரனுக்கருள்வதென்றே, மைக்கடலில் வைகலொழி வையை" என்று பாவலர் கண்டதும், சந்திரனை விழுபழமாகச் சாஸ்திரி கண்டதும் கற்பனைகளாம்.

### கனவகை

இவற்றுள் முதல்மூன்றும் கனவை நிகர்ப்பன. நனவிலே கண்டவைகளும் விரும்பியவைகளும் அளவு, வடிவம், தொடர்பு முதலியவற்ருல் வேறுபட்டுத் தோன்றுவது கனு. சிறுவர்கள் முதியோருடைய செயல்களைச் சிறுப்பித்துக் கற்பிப்பர். பகற்கனுக்காண்போர் தாம் விரும்பியவற்றைப் பருப்பிப்பர். பைத்தியகாரன் தன் பகற் கனுவை வரம்பின்றிக் கற்பிப்பன்.



ஒருசிறுவன் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து பசியாறியதும், ஒரு தடியை எடுத்துக்கொண்டு போய்த் தூணைப் பார்த்து, "நேற்று நீ ஏன் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை" என்று சொல்லி அடிக்கிருன். பின்பு தூண்களுக்குக் கணக்குச் சொல்லுகிருன். அவற்றுட் சிலவற்றுக்கு "உன்னுடைய கணக்கு பிழை; கை நீட்டு" என்று சொல்லி அடிக்கிருன். பின்பு தூண்களுடைய பெயரைச் சொல்லி வரவு பதிகிருன். இப்படியே, ஆசிரியர் செய்ய இவன் கண்டவற்றைத் தனக்கியைய மாற்றி இவன் செய்கிருன். இவனுடைய நடிப்பிலுள்ள விசேஷம் சிறுவர்களை மாணுக்கராகக் கொள்ளாது தூண்களை மாணுக்கராகக் கொள்ளுதல். அங்ஙனம் கொண்டது தொடர்புப் பொருளறிதலாலாம். எப்படியெனில், "ஆசிரியருக்கு நான் இருப்பதுபோல, எனக்கிருக்கத் தக்கது யாது" என்று ஆராயுமிடத்து, அது தூண் என்று காணப்பட்டது. தூண் தொடர்புப்பொருள்.

கண்ணுடிவிற்பவன் அரசன்மகளை மணந்தது பகற்கனு. அவனுடைய கனு எப்படியெனில், "நான் கண்ணுடிப் பண்டங்களைச் சிலகாலம் விற்றுவருவேனுயின், பெரும்பொருள் சம்பாதித்து விடுவேன். அப்பொருளுக்கு இரத்தினங்களை வாங்கி விற்று வருவேனுயின், பெருஞ்செல்வனுகி அரசனும் மதிக்கத்தக்கவனுவேன். அப்போது நான் அரசனுடைய மகளை மணஞ் செய்தற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வேன். அரசன் என்னைத் தன்னுடைய மருகனுகக் கொள்ள விரும்பி மகளை எனக்கு விவாகஞ் செய்து தந்த பின்பு, ஒரு தினத்திலே நான் அவளை உவர்த்துச் சினப்பேன். அவள் என்னுடைய சினத்தை ஆற்றுதற்காக என் காலிலே

விழுந்தழுவாள். அப்போது நான் அவளை உதைப்பேன்" என்பது.

முற்றுப்பெறாத ஆசைகளாலே கனாக்களுண்டாதல் இயல்பு. விவாகஞ் செய்யவேண்டும் என்ற ஆசை கண்ணாடிக்காரனைத் தொட்டுக்கொண்டது. வேலையில்லாத நேரமே பகற்கனாவுக்கு உவப்பான நேரம். ஆதலால், விற்பனவில்லாத நேரத்திலே இக்கனா தோன்றியது. தூக்கத்தில் வருங் கனாவைப்போலவே இக்கனாவிலும் காரியம் நடைபெறத்தக்கதோ தகாததோ என்ற சிந்தனை உண்டாவதில்லை;* ஆசை போகத்தக்க அளவுக்குப் பகற்கனா போகும். இது நனவிலே காண்பதைப் பருப்பித்தலாலாவது. பருப்பித்தல் தொடர்புப்பொருளறிதலின் ஒருவகை யென்பது முன்னதிகாரத்திற் காட்டப்பட்டது.† கண்ணாடிக்காரன் சிறு லாபத்தைப் பெரும் இலாபமாக்கினான்; கண்ணாடியை இரத்தினமாக்கினான்; சிறுகுடிப் பெண்ணை அரசன் புதல்வி யாக்கினான். ஆகவே, பகற்கனாவுக்கும் தொடர்புப் பொருள் அறிதல் ஆதாரமாகின்றது.

"மழையைப் பெய்விப்பவன் யானே" என்று பைத்தியகாரன் கற்பித்துக்கொள்ளுகிறான். முதன்மையூக்கம் வலிபெற்றவர்கள் தங்களைப் பருப்பிக்க முயலும்போது பெருந்தடைகள்நேர்ந்தால், அவ்வூக்கம் மறைந்து நின்று முனைத்து அவர்களை மிகவும் பருப்பித்துக்காட்டும். அவர்கள் பைத்தியகாரராய்விட்டால், தங்களை எல்லை கடந்து பருப்பிப்பர். அவர்கள் செய்வது மனோராச்சி-

* ஆயினும் தண்ணீரில் நடத்தல் விலங்குகள் பேசுதல் போன்ற இயற்கைக்கு விரோதமான எண்ணங்கள் பகற்கனாவில் வரா.

† ௧௭௭ ஆம் பக்கம்.



யமே யாதலால், தங்களைக் கடவுளென்றேனும் சிறு தெய்வமென்றேனும் நினைத்தல்கூடும். தெய்வம் மழை பெய்விக்குமாதலால் தாமே மழை பெய்விக்கிறவர்களென்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாகும். ஆகவே, பைத்தியகாரரது கற்பனையிலே பருப்பித்தலும், காரணகாரியத் தொடர்பறிதலும் அங்கங்களாகின்றன. இவைகள் தொடர்புப் பொருளறிதலாம்.

இவ்வுதாரணங்களிலே, சிறுவனும் கண்ணாடிக்காரனும் பைத்தியகாரனும் தங்களைப் பருப்பித்துக்கொண்டனர். இவ்வாறின்றிச் சிறுவர்கள் தங்களை நாய்க்குட்டிகளாகவும், கண்ணாடிக்காரன் தன்னைக் கள்வராற் கட்டிவைக்கப்பட்டவனாகவும், பைத்தியகாரன் தன்னைப் பிறரால் இம்சிக்கப்படும் எளியவனாகவும் சிறுப்பித்துக் கற்பனை செய்தலும் உண்டு. பருப்பிப்பினும், சிறுப்பிப்பினும், வேறுவிதமாகத் தத்தம் நிலையை மாற்றுகினும், அக்கற்பனைகளுக்குத் தொடர்புப் பொருளறிதல் ஆதாரமானதென்பதும் தொடர்பறிதல் துணைபுரிவதென்பதும் எளிதில் உணரப்படும்.

## கணிப்புவகை

சிற்பன் தான் கட்டவேண்டிய வீட்டின் அளவுகளைக் கணித்துப் படத்தை வரைதலும், சேனாபதி போர் எப்படி நடைபெற வேண்டுமென்று கணித்து நிரைசெய்தலும், பரோபகாரி பிறர்துயரத்தைக் கணித்துத் தனதாக்கலும் கற்பனைகளாயினும் கனாக்களைப்போலப் பொய்யானவை யல்ல. வீடும் போரும் கணிக்கப்படும்போது இல்லாமையாலும், இடர்ப்படுவோர் பிறராதலாற் பரோபகாரிக்கு இடர் இல்லாமையாலும், இவை

கள் கற்பனைகளேயாம். இவற்றுள் முதலிரண்டும் காரணத்திலிருந்து காரியமாகிய தொடர்புப் பொருளை அறிதலாயும், பிந்தியது ஒப்புமைத்தொடர்பிலிருந்து பொருளை அறிதலாயும் உள்ளன. கதை வல்லோனது கற்பனைகள் கனுக்களைப்போல இல்லாதவைகளாயினும் கனுக்காண்போர் மயங்குவதுபோல அவன் மயங்குவதில்லை.

சிற்பன் வீட்டுக்காரனுடைய தேவைப்படி அறைகளின் தொகையையும் அளவையும் வடிவத்தையும் மட்டிடுகிறான்; சுத்தமான காற்று வரும் பக்கங்களிலே பலகணிகளைக் குறிக்கிறான்; வெயில் தாக்காத திசையாக அறைகளை நிரைக்கிறான்; இவற்றைப் படத்திலே ஒரேயளவாகச் சிறுப்பித்து வரைகின்றான். இவைகள் யாவும் தொடர்புப்பொருளறிதலாக வருவன.

சேனாபதியானவன் சேனையை அணிவகுக்கும் முறைமையை முன்னரே கணிப்பதோடு நில்லாது, போரிலே செய்யவேண்டிய சூழ்ச்சிகளையும் சிந்தித்துத் தெளிந்துகொள்ளுகிறான். பகைவனுடைய சேனை சிறிதாயினும் மலையின்மேல் நிற்றலால் அதை வெல்லுதல் அரிதென்றும், தன்னுடைய சேனை சற்றுநேரம் போர் செய்தபின் தோல்வியடைந்தாற்போலப் பின்காட்டி ஓடினால் பகைவனுடைய சேனை தம்மைத் துரத்துதற்காக மலையிலிருந்து கீழே இறங்கி வருமென்றும், அப்போது தன்னுடைய சேனை திரும்பி எதிர்த்துப் போர் செய்தால் வெல்லும் என்றும் அறிதல் காரணகாரியத் தொடர்புப்பொருள்களை அறிதலாம்.

ஒருவன் பசியால் வருந்தும்போது, பரோபகாரி அதைக் கண்டு, "எனக்குப் பசி வரும்போது நான் எவ்வளவாக இளைத்துத் தவிக்கின்றேன். அவனுடைய



வேதனையும் என்னுடைய வேதனைபோலவே யிருக்கும். ஆதலால், என்னுடைய உணவை அவனுக்குக் கொடுத்துவிட்டு நான் பின்னர்ச் சமைத்துண்பேன்'' என்றெண்ணுகிறான். ஒரு குழந்தையினுடைய தாய் நோயினாற் பீடிக்கப்பட்டிருக்கும்போது, அந்தக் குழந்தைக்குப் பால் கொடுப்பாரின்றி அது தவிக்குமாயின் பரோபகாரமுள்ள குழந்தைப்பிள்ளைக்காரி அதைக் கண்டு, "என்னுடைய குழந்தை பசித்த நேரத்திலே எவ்வளவாக வருந்துகின்றது. இந்தக் குழந்தையும் அவ்வளவாக வருந்துமல்லவா! நான் இதற்குப் பால் கொடுக்கவேண்டும்'' என்று துணிபு செய்வாள். பரோபகாரிகளாகிய இவ்விருவருடைய கற்பனைகளும் ஒப்புமைத்தொடர்புகொண்டு தொடர்புப் பொருளறிதலால் வந்தவை.

கதைவல்லோன் கதையை யாக்குதல் சிற்பன் வீடு கட்டுதலைப் போலும். சிற்பன் வீட்டுக்கு வேண்டிய கல், மண், நீறு, மரம், ஓடு முதலியவற்றைப் பலவிடங்களிலுமிருந்து பெற்றுக்கொள்வதுபோல, கதைவல்லோன் கதையில் வரும் மனிதர்களின் தன்மைகளையும், சம்பவங்களையும், அதில் விளக்கப்படும் வாய்மைகளையும் அநுபவத்தாலும் கல்விகேள்விகளாலும் கருதலினாலும் பெறுகின்றான். சிற்பன் வீட்டுக்கு வேண்டிய பொருள்களைச் சம்பாதித்துச் சிற்பமுறைப்படி வீட்டைக் கட்டுவதுபோல, கதைவல்லோன் கதையிலக்கணப்படி காரணகாரியத் தொடர்பை யநுசரித்துக் கதையை யாக்குகின்றான்.

பிசாசவழிபாடுடையோன் தனக்கு வந்த நோய் தீர்தற்காக ஆட்டுப்பலி செய்தலை அறிந்த கதைவல்லோன் பாண்டிநாடு முழுவதும் மழையின்றி வருந்துதலைத் தீர்த்

தற்காக நெடுஞ்செழியன் ஆயிரம் பொற்கொல்லரைக் கண்ணகிக்குப் பலிசெய்தான் என்னுங் கற்பனையைக் கண்டான். ஒருநோய்க்கும் ஓராட்டுக்குமுள்ள தொடர்பு ஓரூரின் மழையின்மைக்கும் எதுக்குமுள்ளதென்றறிதல் பிறபொருட்டொடர்பாற் றொடர்புப்பொருள் அறிதலாம்.

### நட்பவகை

பாவலர்களுடைய வர்ணனைகளும் பேறிஞர்களது தரிசனங்களும் மேற்கூறிய கற்பனைகள்போலவே கருதலுக்கு உட்பட்டவைகளேயாயினும், நுண்ணிய விவேகத்தாலன்றிப் பெறப்படாதனவாம். இவைகள் இத்துணை அரியனவாயிருத்தலைக் கண்ணுற்ற பலர் இவைகள் கருதலளவையைக் கடந்தவைகளென்றும், கற்பனையாற்றல் என்று ஓராற்றல் கருதலின் வேறாய் உண்டென்றும், அவ்வாற்றலின் துணைகொண்டு இவைகள் கற்பிக்கப்படுகின்றன என்றும் மயங்குவர். இவ்வர்ணனைகளையும் தரிசனங்களையும் கூறுபடுத்திப் பார்க்கில் இவைகள் யாவும் கருதலில் அடங்குதல் அறியப்படும்.

“கடல் சிவபிரானுக்கு நஞ்சைக் கொடுத்தமையால் அது சிவத் துரோகியென்று கண்டு, வையையாறு அதனோடு சேர்ந்திலது” என்னும் புலவர் கற்பனையைக் கூறுபடுத்தி ஆராய்வாம்.

பாற்கடல் சிவபிரானுக்கு நஞ்சைக் கொடுத்தமை சிறுவரும் அறிந்த ஒன்று. வையையாறு கடலோடு சேராமை எவரும் நேரே அறியத்தக்கது. இவற்றைத் தொடுத்து, கடல் சிவபிரானுக்கு நஞ்சுகொடுத்தமையால் வையை கடலோடு சேர்ந்திலது என்றல் ஓர் அரிய கற்பனையேயாம்.



பாற்கடலின் தொழிலை நீர்க்கடலுக்கேற்றியது கடல் என்னும் ஒற்றுமைபற்றியாம். வையையாறு பெருகிச் சிவனடியாராகிய மாணிக்கவாசகரைச் சிறையினின்றும் மீட்டற்குக் காரணமானமையால் அது ஒரு சிவ தொண்டனென்பதும், சிவபிரானுக்கு நஞ்சு கொடுத்தமையாற் கடல் சிவத்துரோகியென்பதும், சிவதொண்டன் சிவத்துரோகியோடு சேரலாகாதாதலால் வையையாறு கடலோடு சேராதென்பதும் காரணத்தொடர்பு கொண்டு பொருளறிதலாம்.

ஆதலால் புலவரது வர்ணனைகளும் கருதலுக்குட்பட்டவைகளேயன்றி வேறல்ல என்பதையறிக.

பேரறிஞரது கற்பனைகள் புலவரது கற்பனைகள் போல் அரியனவாயினும், அவைகள் இருதன்மைகளால் வேறுபடுகின்றன. ஓரறிஞர் ஒரு கற்பனையை யாக்கப் பல்லாண்டுகள் செல்லுதலும் உண்டு; புலவர்களுடைய கற்பனைகள் சில நிமிஷங்களில் ஆக்கப்படுகின்றன. அறிஞர்களது கற்பனைகள் பேருண்மைகள்; புலவர்களது கற்பனைகள் பேரழகுகள்.

சந்திரனை விழுபழமாகக் கருதினவர் பேறிஞராகிய நியூற்றன் என்பவர். இவரும் இவரைப் போன்றவர்களும் ஆலம்வித்தை ஆலமரம் ஆக்குபவர்கள்; ஒரு சிறு உண்மையிலிருந்து அதையும் அதைப்போன்ற பல உண்மைகளையும் அடக்கும் வியாபக உண்மையைக் காண்பவர்கள். வியாபக உண்மையை யாக்குதற்குத் தொடர்பறிதலும் தொடர்புப்பொருளறிதலும் வேண்டும். சந்திரனுக்கும் பூமிக்குமுள்ள தொடர்பு கொப்புப்பொருத்தற்ற மாம்பழத்துக்கும் பூமிக்குமுள்ள தொடர்பென்பதை நியூற்றன் அறிந்தார். மாம்பழத்

துக்கும் சந்திரனுக்கும் ஆயிரக்கணக்கான வேறுபாடு கள் இருக்கவும், அவற்றிலிருந்து இவ்வரிய ஒற்றுமை யைப் பிரித்துக் கண்டது அற்புதமேயாம். இவ் வொற்றுமையைக் கண்டபின் இவற்றையும் இவை போன்ற பிறவற்றையும் அடக்கத்தக்க ஒரு வியாபக விதியை ஆக்குதலும் அருந்தொழிலாம். அவ்விதி தொடர்புப்பொருளாய் வரும். எப்படியெனில், ஒவ் வொரு தனிவாய்மையும் வியாபகவிதியின் சினையா கும். ஆதலால் தனிவாய்மையிலிருந்து வியாபகவிதியை யறிதல் சினையிலிருந்து முதற்றொடர்புள்ள பொருளை யறிதலாகும்.

தனிவாய்மைகள் சினையாதல் எவ்வாறெனில், "உலோகங்கள் பகாப்பொருள்கள்" என்பது வியாபக வாய்மை. பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, இரசம் முதலிய ஒவ்வொன்றும் உலோகம் என்பதன் சினைகள். ஆதலால், "பொன் ஒரு பகாப்பொருள்", "வெள்ளி ஒரு பகாப்பொருள்", முதலியவைகள் "உலோகங்கள் பகாப்பொருள்கள்" என்பதில் அடங்குவன. "பூமி மாம்பழத்தைக் கவருகின்றது" என்பதும் "பூமி சந் திரனைக் கவருகின்றது" என்பதும், "பூமி எப்பொருளை யும் கவருகின்றது" என்பதில் அடங்கும். "பூமி எப் பொருளையும் கவருகின்றது" என்பதும், "சூரியன் எப்பொருளையும் கவருகின்றது" என்பதும், "பிரபஞ் சத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் மற்றெல்லாப் பொருளையும் கவருகின்றது" என்பதில் அடங்கும்.

மேலே கூறியவற்றுற் பேரறிஞர்களது கற்பனை களாகிய வியாபகவிதிகள் கருதலளவைக்குட்பட்டவை



களன்றி இதுக்கப்பாற்பட்ட ஒரு தனியாற்றலாற் பெறப்படுவனவல்ல என்பது தெள்ளிதிற் புலப்படும்.

## வினாக்கள்

க. கற்பனையின் இலக்கணம் யாது?

உ. கனவுக்கும் பகற்கனவுக்கும் உள்ள ஒற்றுமை வேற் றுமைகள் எவை?

ங. கதை எவ்வாறு கற்பிக்கப்படுகின்றது?

ச. செய்யுட் கற்பனைக்கும் சாத்திரக் கற்பனைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் எவை?

# பதினான்காம் அதிகாரம்

## அறிவு நிகழ்ச்சி

மனவாற்றலின் அளவு—ஊசல்—அவதானம்—நிலைத்தல்—நினைப்பு—இளைப்பு—நினைப்பின் ஆட்சி—மறப்பு.

### மனவாற்றலின் அளவு

அறிவை நேரே பெறும் வழிகள் மூன்றும் முன்னதிகாரங்களிற் கூறப்பட்டன. அவ்வழிகளாற்பெறப்படும் அறிவின் அளவும், அது நினைப்பிலிருக்கும் இயல்பும், அறிதலையும் நினைத்தலையும் ஆளும் திறனும் இவ்வதிகாரத்தில் ஆராயப்படும்.

அறிதற்கு முதற்றுணையாயிருப்பது மனவாற்றல் என்றும், இவ்வாற்றல் ஒரு யந்திரத்தை இயக்கும் நீராவியின் ஆற்றலை நிகர்ப்பது என்றும் முன்னர்க் கூறப்பட்டது. * யந்திரத்தின் வேலை நீராவியின் ஆற்றலுக்குத் தக்கதாய் இருப்பது போல, அறிதலின் அளவு மனவாற்றலின் அளவுக்குத் தக்கதாய் இருக்கும். யந்திரத்தின் வேலையை ஒருமணி நேரத்துக்கு இவ்வளவு என்று அளவிடுதல்போல, அறிதலின் அளவையும் ஒருமணிநேரத்துக்கு இவ்வளவென்று அளவிடுதலே தக்கது. அறிதலை இங்ஙனம் அளவிடும்போது, மனவாற்றலின் அளவைக் கணித்தல் கூடும்.

ஒருமணிநேரத்திற் பெறப்பட்ட அறிவை அளக்குமிடத்து, அவ்வறிவிற் பிழையான பாகத்தை நீக்கிச்

* பத்தாம் அதிகாரத்தில்.



சீரான பாகத்தை மாத்திரம் அளத்தலே முறையாகும். ஒருவன் ஒருமணிநேரத்திலே நூறு வினாக்களுக்கு விடையெழுதினானாயினும், அவற்றுள் எழுபது மாத்திரம் சீரானவைகளாயின், அவ் வெழுபதையுங் கொண்டே அவனுடைய மனவாற்றலை அளத்தல் வேண்டும். ஆதலால் மனவாற்றலை அளத்தற்கு அறிதலின் சீரை அறியவேண்டும். இனி, ஒருமணி நேரத்தில் நூறுவினாக்களுள் எழுபதுக்குச் சீராக விடை எழுதியவன் ஒன்றரைமணி நேரத்திலே நூற்றுக்கும் சீராக விடை எழுதத்தக்கவனாயிருத்தல் கூடும். ஆதலால் மனவாற்றலை அளத்தற்கு அறிதலின் விரைவையும் அறிதல் வேண்டும். ஆகவே மனவாற்றல் அறிதலின் சீராலும் விரைவாலும் அளக்கப்படுவது. இக்கூறுகள் இரண்டையும் ஒருங்கே அளக்கும் வினாக்கள் அகநூல் வல்லோரால் இயற்றித் தரப்படுத்தப்பட்டு * உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

இவ்வகை வினாக்களால் மனவாற்றலை அளக்குமிடத்து, அது சிறுவயது தொடங்கி வளர்ந்து வருவதாயும், பதினாறும் வயது வரையிலே முற்றுவதாயும், அதன்பின் அது ஒரே யளவினதாய் இருப்பதாயும் காணப்படுகின்றது. வளர்ந்தவர்களுடைய மனவாற்றல் என்றும் ஒரேயளவினதென்னுங் கொள்கை அகநூல் கல்லாதாரிடத்தும் உண்டு. விவேகம் எனப்படுவது மனவாற்றல். விவேகி யென்று ஒருகால் மதிக்கப்படுகிறவன் என்றும் விவேகியாகவே மதிக்கப்படுகிறான். சென்ற ஆண்டு விவேகியெனப் பட்டவன் இவ்வாண்டும் விவேகியெனப் படுகிறான்.

* தரப்படுத்தலாவது குறித்த நேரத்திலே மட்டான மனவாற்றலுடைய ஒருவன் பிழையின்றி விடையெழுதத்தக்க வினாக்களைத் தொகுத்தல்.

வளர்ந்தவர்களுடைய மனவாற்றல் எப்போதும் ஒரேயளவினதாயின், அதைக்கொண்டு செய்யப்படுந் தொழிலும் எப்போதும் ஒரேயளவினதாயிருத்தல் வேண்டும். இதனாலே மனம் எப்போதும் ஒரேயளவான தொழிலைச் செய்துகொண்டிருக்கத் தக்கது என்னும் அரிய உண்மை பெறப்படுகின்றது.* தொழில் செய்யும்போது மனவாற்றல் அத்தொழிலிலே செல்லும். தொழிலின்றியிருக்கும்போது மனவாற்றல் பலபொருள்களிற் சென்று சிதறும். ஆயினும், மனத்தினாற் செய்யப்படும் வேலை தொழில் செய்யும்போதும் சும்மாவிருக்கும் போதும் ஒரேயளவினதேயாம்.

யந்திரத்திலே பிழைபாடிருந்தால் நீராவியின் ஆற்றலுக்குத் தக்கவேலை நடைபெறாதிருத்தல்போல, மனத்தின் கருவியாகிய மூளையிலே குறைவுகள் இருந்தால் மனவாற்றலுக்குத்தக்க வேலை நடைபெறாமல் மனத்தொழில் குன்றும்.

மூளையில் வரத்தக்க குறைவுகளாவன இரத்தத்தின் தூய்மைக் குறைவும் கேடயச்சத்தின் குறைவும் † பிறவுமாம். மேலதிகமான அகமுயற்சியிலே மனவாற்றல் சென்று குறைவடைதலினாலும் அறிதற்றொழில்

* ஒவ்வொருவருடைய மனமும் இடைவிடாது தொழில் செய்துகொண்டிருத்தலால் உபயோகமான தொழிலில்லாதவர்கள் பெரும்பாலும் தீயதொழில்களைச் செய்வர். ஆற்றல் மிகுந்த சிறுவர் பலர் போதிய தொழிலில்லாமையாற் புரளிகள் செய்து புரளிக்காரரெனப் பேர் பெற்றனர். ஆயினும், இவர்களிற் சிலர் அருந்தொழில்களைச் செய்து கீர்த்திமான்களாயினர்.

† கேடயச்சத்து நோயினாற் குறைந்தவர்களுக்கு அதைப் பிறபிராணிகளிலிருந்தெடுத்து மருந்தாகக் கொடுத்தலுண்டு. அதை உண்டபின் அவர்களில் விவேகம் விளக்கமாகும்.



குறைந்துபோம். அகமுயற்சி மேலதிகமாதல் "அவசரத்திலும்" சுவைகள் முதலியவற்றிலுமாம். "அவசரகாரனு"டைய மனவாற்றல் குறைதலினாலே அவனுக்கு அறிவு குன்றும். *கோபம், அச்சம் முதலிய சுவைகள் நிகழும்போது அறிதற்றொழில் குறைதல் யாவரும் அறிந்த விஷயம்.

மனம் அறிதற்றொழிலைச் செய்யும்போது, தொழில் எளிதாயின் அகலமாயும், அரிதாயின் அற்பமாயும் நிகழ்கின்றது. ஒருதொகையான எண்களுள், ஒற்றை எண்கள் எவை என்றறிதல் எளிது. அவற்றுள், மூன்றின் குணிதங்கள் எவை என்றறிதல் சற்றே கடினமானது; ஏழின் குணிதங்கள் எவை என்றறிதல் அதனிலும் கடினமானது. ஆதலால், ஒரு நிமிஷத்திலே மூன்றின் குணிதமோ அன்றோ என்றாராயப்பட்ட எண்களின் தொகை ஒற்றையோ அன்றோ என்றாராயப்பட்ட எண்களின் தொகையிற் குறைவாயும், ஏழின்குணிதமோ அன்றோ என்றாராயப்பட்ட எண்களின் தொகையிற் கூடியதாயும் இருக்கும்.

இங்ஙனம் மனவாற்றல் ஆழமான விஷயங்களை ஆராயுமிடத்து அகலக்குறைவாயும், ஆழமற்ற விஷயங்களை யாராயுமிடத்து அகலமாயும் தொழில் செய்தலால், அது ஆழஅகலங்களின் குணிதத்தால் அளவிடத்தக்கதாதல் வேண்டும்.

## ஊசல்

மனவாற்றலின் அளவை நுட்பமாய் ஆராயுமிடத்து, அது சாமானிய அளவிலும்பார்க்கச் சற்றே கூடியும்

*இதை "அவசரகாரனுக்குப் புத்தி மத்திமம்" என்னும் பழமொழியிலுங் காண்க.

குறைந்தும் வருவதாகத் தோன்றும். அது ஒருகால் வழக்கமான அளவிலே நிற்கும்; பின்பு சற்றே கூடும்; அதன்பின் வழக்கமான அளவுக்கு வரும்; அதன்பின் சற்றே குறையும்; பின்பு வழக்கமான அளவுக்கு வரும். இப்படியாக அது மாறிமாறிக் கூடியுங் குறைந்தும் வரும். ஊஞ்சலானது மத்தியநிலைக்கு முன்னும் பின்னுஞ் செல்வதுபோல இவ்வாற்றல் அளவாற் பேதப்படுதலால், இப்பேதப்பாடு மனவாற்றலின் ஊசல் எனப்படும். அதிதூரத்திலே வைக்கப்பட்ட ஒரு கடிகாரத்தின் சத்தத்தை அவதானிக்கும்போது, அது ஒரு கால் பலமாயும் மறுகால் மெதுவாயும் கேட்கின்றது. கடிகாரத்தின் ஒலி உள்ளபடி ஒரேஅளவினதாயிருத்தலால் அது புலப்படும்போது தோன்றும் வேற்றுமை மனஆற்றலின் ஊசலால் ஆதல்வேண்டும்.

## அவதானம்

மனவாற்றல் ஒரு விடயத்திலே செல்லுதல் அவ்விடயத்தை அவதானித்தல் எனப்படும். விடயத்திலேயுள்ள பற்று அற்பமாயிருந்தால் அதிலுள்ள அவதானமும் அற்பமாயிருக்கும். அப்போது, அதிலே செல்லாது எஞ்சிநிற்கும் மனவாற்றல் பிறவிடயங்களிலே செல்லும். பழக்கத்தொழில்களைச் செய்தற்கு வேண்டிய மனவாற்றல் அற்பமாதலால், அவைகளைச் செய்யும்போது பிறதொழில்களையுஞ் செய்தல் கூடும். சிலர் பாடிக்கொண்டு மிகுந்த ஆராய்வு வேண்டிய அருந்தொழில்களைச் செய்கிறார்கள். ஆயினும், மனவாற்றல்முழுவதையும் வேண்டுகின்ற ஒரு தொழிலைச் செய்யும்போது காலாட்டுதலைப்



போன்ற *இலகுவான பழக்கத்தொழில்களும் ஆகாவாம்.

அவதானம் விடயத்தின் வடிவத்திலேனும் பொருளிலேனும் செல்லும்; முதலில் வடிவத்திலும் பின்பு பொருளிலும் செல்லுதலே வழக்கம். ஒரு பசுவை அவதானிக்கும்போது, அதன்வடிவத்தை அவதானித்தபின்பு, அது கற்றாவோ அன்றோ என்பதையும், இளமையானதோ முதியதோ என்பதையும், வயமுடையதோ வயமற்றதோ என்பதையும் அவதானித்தல் வழக்கம். ஒரு செய்யுளை அவதானிக்கும்போது, முதலிலே அதன் வடிவமாகிய மொழித்தொடர்களும் பின்னர் அதன் பொருளும் அவதானிக்கப்படும். பொருளை அவதானித்த பின்பு சொற்சுவையை நுகர்தற்காகச் சொற்களை அவதானித்தல் உண்டு. நூல்களைக் கற்கும்போது, பொருளை அறிதற்காகவே மொழித்தொடர்களை அவதானிப்பர்; பொருளிலே அவதானம் ஏறஏற மொழித்தொடர்களைப் பற்றிய சிந்தனை குறையும். ஆயினும், வடிவத்தை மாத்திரமேனும் பொருளைமாத்திரமேனும் அவதானிக்கத் தேவைப்படுவோர் அவற்றையே அவதானிப்பர். ஒரு நூலிலுள்ள எழுத்துப்பிழைகளைத் திருத்துபவர்கள் சொற்களையே அவதானிப்பர்; பொருட்பிழைகளைத் திருத்துபவர்கள் பொருளையே அவதானிப்பர். எதிலே அவதானம் அதிகமாகச் செல்கின்றதோ அது அதிகம் தெளிவாய் அறியப்படும்.

ஒருவன் தொழிலில்லாம லிருக்கும்போது அவனுடைய மனவாற்றல் பல விஷயங்களில் மாறிமாறிச்

* கற்கும்போது "சித்திரப்பாவையின் அத்தக வடங்கி" யிருத்தல் நன்றென்பர் நன்னூலார்.

சென்று அந்நேரம் அவனுக்கு அதிகமாக வேண்டிய ஒன்றில் நிலைத்து நிற்கும்.

பற்றில்லாத தொழிலைச் செய்யும்போது, மனவாற்றல் பிறதொழில்களை அவாவும். ஆசிரியன் அசடனாயின், கல்வியிலே பற்றில்லாத மாணாக்கனுடைய மனம் படிப்பிலே செல்லாது. அப்போது பலவகையான பிற எண்ணங்கள் மனவாற்றலைக் கைப்பற்ற வரும். முதனாளிரவு பார்த்த கூத்து வரும்; அன்றிரவு நடைபெறும் திருவிழா வரும்; அடுத்த மாதத்து விடுதலை வரும்; சகோதரியுடைய விவாகம் வரும்; வேறும் பல வரும். இவற்றுள் எதிலே அந்த நேரத்தில் அவனுக்கு மிகுந்த பற்றுள்ளதோ, அதிலே அவனுடைய மனவாற்றல் செல்லும்.

மாணாக்கனுக்குக் கல்வியிலே பற்றில்லையாயினும், அது அவனுடைய பிற்கால சீவியத்திற்கு இன்றியமையாததெனத் தோன்றுமாயின், அவன் அகமுயற்சியினாலே மனவாற்றலைக் கல்வியிலே செலுத்துதல் கூடும். கல்வியிலேயன்றி மற்றெத்தொழிலிற் செல்லும் மனவாற்றலையும் அகமுயற்சி ஆளத்தக்கது. அதை ஆளத்தக்க அகமுயற்சியைப் பெறுவது எவ்வாறெனில், அவ்விஷயத்திலே பற்றை உண்டாக்குதலாலேனும் அதனோடுபிற பற்றுக்களையேனும் ஊக்கங்களையேனும் தொடர்புறுத்தலாலேனுமாம். கல்வியிலே பற்றில்லாத மாணாக்கனுக்குக் கல்வியை இலகுப்படுத்தலினாலும் அவனை உற்சாகப்படுத்துதலினாலும் பற்றுண்டாகும். ஆசிரியர் அவனுக்குக் கல்வியில் அருந்துணை புரிவாரானால் அவன் அவருக்கு நன்றியுள்ளவனாகி அவரை மகிழ்வித்தற்காகக் கல்வியிலே ஆற்றலைச் செலுத்துவான். சில ஆசிரியர்கள்



இனியபொருள்களைச் சிறுவர்களுக்குக் கொடுத்துக் கல்வியிலே பற்றை வைப்பிக்கிறார்கள். சில மாணாக்கர்கள் முதன்மையூக்கத்தால் ஏவப்பட்டுப் புகழை விரும்பியேனும் தம்மோடு எதிரிடையாய் நிற்போரைக் கீழ்ப்படுத்த விரும்பியேனும், கல்வியிலே பற்றுவைக்கிறார்கள்; சிலர் பிற்கால சீவனத்துக்கு வேண்டியதென்று கண்டு அதிலே பற்றுவைக்கிறார்கள். இப்படியாக, ஒரு தொழிலில் நேரே வெறுப்பிருந்தாலும், அதனால் வரும் நயத்தை விரும்பி அகமுயற்சியையேற்றி அதிலே மனவாற்றலைச் செலுத்துதல் கூடும்.

### நிலைத்தல்

நாம் ஒரு விடயத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கும்போது அதைக் கைவிட்டு வேறொரு விடயத்தைச் சிந்திக்கவேண்டிவந்தால், மனவாற்றல் முந்திய விடயத்தை விட்டு உடனே செல்லமாட்டாமல், சற்றே தாமதித்து, படிப்படியாகவே புது விஷயத்திற் செல்லும். ஒருவன் தன்னுடைய குழந்தைக்கு வந்த சுரநோய் தணியாமையைப் பற்றிச் சிந்திக்கும்போது ஒரு கடிதத்தை வாசிக்க நேர்ந்தால், அதன் பொருளில் ஒரு சிறு பாகம் மாத்திரம் முதலிற் புலப்படும். பள்ளிக்கூடத்திலே, மாணாக்கர்கள் ஒரு பாடத்தைப் படித்துமுடித்தவுடனே, ஆசிரியர் வேறொரு பாடத்தைத் தொடங்குவாராயின், முதலிலே இந்தப் பாடம் புலப்படாமலே இருக்கும். இதை யறிந்த நல்லாசிரியர்கள் ஒவ்வொருபாடமும் முடிந்தவுடனே மாணாக்கர்களைச் சற்றுநேரம் ஓயவிடுகிறார்கள். இப்படியாக ஒரு விடயத்தைக் கைவிடத் துணிந்த பின்பும், மனவாற்றல் அதிலே செல்லுதல்

நிலைத்தல் எனப்படும். இது மனவாற்றலின் புடை பெயர்ச்சியிலுள்ள தாமதத்தால் உண்டாவதாகும்.

நிலைத்தல் கருதலிலன்றிக் காட்சி முதலிய தொழில்களிலும் நிகழ்கின்றது. கண்ணுக்கு எதிர்ப்படும் பொருள்கள் உடனே தோன்றாமற் சற்றுநேரத்தின் பின்பே தோன்றுகின்றன; அவை மறைந்தபின்பும் சற்றுநேரம் தோன்றுகின்றன. நீளமான நெருப்புக் கொள்ளியை விரைவாகச் சுழற்றினால், விருத்தவடிவமான ஒளிதோன்றும். அஃதாவது, கொள்ளியிலுள்ள நெருப்பு அந்த விருத்தத்தின் எல்லாப் பாகத்திலும் ஒரே நேரத்தில் இருப்பதாகக் காணப்படும். ஆயினும் அது ஒரு நேரத்தில் ஒரு இடத்தில் மாத்திரம் இருப்பதே உண்மை. ஆதலால் மற்றைய இடங்களிலே காணப்படுவது நெருப்பன்று; நெருப்பு அந்த இடங்களுக்கு வந்தபோது உண்டான காட்சியின் நிலைத்தலால் வரும் தோற்றமாம். காட்சி எவ்வாறு நிலைக்கின்றதெனில், நெருப்பிலிருந்து கண்ணுக்கூடாகச் சென்ற ஒளி திரிபுற்று நாடிமூலங்களைத் தாக்கும்; இந்தத்தாக்கம் உண்டாகச் சற்றுநேரம் செல்லும்; தாக்கம் உண்டான பின்பே காட்சியுண்டாகும். ஆதலால் நெருப்பு கண்ணுக்கெதிர்ப்பட்டவுடனே தோன்றாமற் சற்றுநேரத்தின் பின்பே தோன்றும். அந்தத் தாக்கம் நீங்குதற்கும் சற்று நேரம் செல்லுமாதலினால் நெருப்பு மறைந்த பின்பும் அதன் தோற்றம் நிகழும்.

மறித்தல்* விளையாட்டிலே, மறிக்கப்படுகிறவன் இடையிலே சடுதியாகத் திரும்பும்போது மறிப்பவன் உடனே திரும்பமாட்டாமை நிலைத்தலினாலாம். ஒரு

* இது கிளித்தட்டு விளையாட்டெனப்படும்.



தொழில் நிறைவேறியபின்பும் அதைப்பற்றிய சிந்தனை நீங்காமையும், விடப்பாம்பைக் கண்டபோது தோன்றிய அச்சம் அது அகன்றபின்பும் நீங்காமையும் நிலைத்தலால் நிகழ்வன.

நிலைத்தல் மனிதரில் வெவ்வேறளவினதாய் இருக்கும். மறைந்தபொருள் சிலருக்கு மிக அற்பநேரம் மாத்திரந் தோன்றும்; வேறு சிலருக்கு அதிகநேரம் தோன்றும். மனவாற்றல் பரீட்சைகளால் அளக்கப்பட்டு வருதல்போல, நிலைத்தலும் பரீட்சைகளால் அளக்கப்பட்டு வருகின்றது. பின்வரும் பரீட்சை மிக இலகுவானது.

சுழலக்கூடிய வட்டமான தட்டொன்றிலே ஒருபாகத்தைச் சிவப்பு நிறமாக்கி அவ்வளவு அயற்பாகத்தைப் பச்சைநிறமாக்கிவிட்டு அதைச் சுழற்றினால், நரைநிறம் தோன்றும். அது எப்படியெனில், சிவப்பும் பச்சையும் கலக்க நரை நிறமுண்டாதல் இயல்பு; தட்டைச் சுழற்றும்போது, ஏதாயினும் ஓரிடத்துக்குச் சிவப்புப் பாகம் வந்து விலகினபின்பும் அங்கு சிவப்புநிறம் தோன்றும். அதற்கிடையிலே பச்சை நிறப்பாகம் வந்துவிடும்; ஆதலால் அந்தஇடத்திலே சிவப்பும் பச்சையும் கலக்கும்; கலத்தலினாலே நரைநிறம் தோன்றும்.

நிலைத்தலியல்பு அதிகப்பட்டவர்களுக்கு ஓரிடத்திலே சிவப்புநிறம் நெடுநேரம் நிற்கும். ஆதலால் தட்டை மெல்லவாகச் சுற்றினாலும் அவர்களுக்கு நரைநிறம் தோன்றும். நிலைத்தலியல்பு குறைந்தவர்கள் நரை நிறத்தைக் காணுகில் அதை விரைவாகச் சுழற்றவேண்டும். ஆதலால், நரைநிறம் தோன்றுதற்கு அத்தட்டுச் சுழல வேண்டிய வேகத்திலிருந்து நிலைத்தலை அளக்கலாம்.

நிலைத்தல் ஓர் ஆற்றலன்று. அதன் அளவு மனவாற்றலின் புடைபெயராமையின் அளவாம்.

நினைப்பு

ஒரு பொருளை ஒரு முறை அறிந்துவிட்டால் அதைப் பற்றிய அறிவு பின்பு எளிதிலே வரும். சுந்தரம் என்பதன் பொருள் அழகு என்பதை ஒருவர் ஒருமுறை அறிந்தாராயின், பின்பு அவர் அதை அறிதல் இலகுவாகும். இலகுவாதல் எப்படியெனில், "சுந்தரம் என்பதன் பொருள்யாது" என்று அவரை வினவினால், "அழகு" என்று சொல்லத்தக்கவரா யிருப்பார். அவர் திறமை குறைந்தவராயின், "சுந்தரம் என்பதன் பொருள் அழகோ பசுவோ" என்று வினவினால், "அழகு" என்று விடை சொல்லுவார்.

ஒருமுறை அறிய எளிதிலே வருவது பலமுறை அறிய மிக எளிதிலே வரும். சுந்தரம் என்பதன் பொருள் அழகு என்று பல முறை அறிந்தவர் அதை எப்போதும் அறியத்தக்கவராய் இருப்பார்.

பலமுறை அறிதலேயன்றி அவதானமும் முன்னறிந்ததைப் பின்பு எளிதில் அறிதற்குத் துணையாகும். ஒரு வகுப்பிலுள்ள மாணுக்கர்கள் யாவருக்கும், "சுந்தரம் என்பதன் பொருள் அழகு" என்று சொன்னால், சுந்தரம் என்னும் பெயரையுடைய மாணுக்கன் அதை மற்றவர்களிலும் பார்க்க அதிகமாய் அவதானிப்பான். அவனுக்கு அச்சொல்லின் பொருள் பின்பு மிகவும் இலகுவாய் வரும். ஒரு செய்யுளை அற்ப அவதானத்தோடு ஐம்பது முறை வாசித்தலும் மிகுந்த அவதானத்



தோடு ஐந்து முறை வாசித்தலும் ஒரேயளவு பயனைத் தருதல் கூடும்.

முன்னறிந்த ஒன்றைப் பின்பு அறிதல் நினைப்பு எனப்படும். நினைப்பை இலகுப் படுத்துவன பன்முறை அறிதலும் அவதானமுமாம்.

இவை யிரண்டும் நினைப்பை இலகுப்படுத்துவன வன்றி முன்னறிந்ததை அறியுமாறு ஏவத்தக்கவைகளல்ல. அங்ஙனம் ஏவத்தக்கவைகள் பற்று, அண்மைச் சார்பு, ஒப்புமைச்சார்பு ஆகிய மூன்றுமாம்.

ஒருவனுக்கு எதிலே அதிகம் பற்றுண்டோ அதைப் பற்றிய எண்ணம் தானுகவே வரும். தந்தையாருடைய சொல்லுக்கமைதலிலே பெரும் பற்றுடையவனாய் அதை ஒரு விரதமாகக் கொண்டவனுக்கு "தந்தை சொன்மிக்க மந்திரமில்லை" என்னும் மந்திரம் தானுகவே வந்து கொண்டிருக்கும். அற்பன் ஒருவனுக்குத் தேசாதிபதி கைகொடுத்தாராயின், அதைப்பற்றிய எண்ணம் அவனுக்குத் தானுகவே வரும்.

இரண்டு பொருள்களை ஒரேநேரத்தில் அறிந்தால், அவற்றுள் ஒன்று பின்னொருமுறை அறியப்படும் போது, மற்றதின் எண்ணம் வருதலு முண்டு. "அருச்சுனனும் கன்னனும் போர் செய்தனர்" என்பதை அறிந்தவனுக்கு, அருச்சுனனைப்பற்றிய பேச்சு நிகழும் போது, பழைய தொடர்பினாலே, கன்னனுடைய எண்ணம் வருதல் கூடும். கோயிலிலே பூசை நடக்கும்போது மணிச்சத்தத்தைக் கேட்டவர் பின்னொரு முறை மணிச்சத்தத்தைக் கேட்கும்போது கோயிற் பூசையைப்பற்றி எண்ணுதல் கூடும். சோமவாரத்திலே சர்க்கரைச்சோறு தின்ற சிறுவன், சோமவாரம் என்ற சொல்லைக் கேட்ட

வுடனே, சர்க்கரைச்சோற்றை நினைப்பான். பள்ளிக் கூடத்திலே துன்புறுத்தப்பட்ட சிறுவனுக்கு பள்ளிக் கூடம் என்ற எண்ணம் வரும்போது துன்பத்தின் எண்ணமும் வரும். அரசியற் சபைத்தெரிவு நடந்தபோது செலவின்றி வயிறுர மதுவுண்டவனுக்கு அரசியற்சபைத் தெரிவின் எண்ணம் வரும்போது வயிறுர மதுவுண்ட எண்ணமும் வரும். இப்படியாக ஒரேநேரத்தில் அறியப்பட்ட இருபொருள்களின் எண்ணத்தொடர்பு அண்மைச்சார்பு எனப்படும். இது ஒரு எண்ணத்தை அதனோடு தொடர்புடைய வேறோர் எண்ணத்தின் துணை கொண்டு எழுப்பத்தக்கது.

கல்வியைப்பற்றிய அநேக முறைகள் அண்மைச் சார்பை ஒட்டியிருக்கின்றன. ஒருகுழந்தைக்குப் பசு என்றவிலங்கைக் காட்டி "அது பசு" என்று சொன்னால், அந்த விலங்கின் காட்சியும் அந்தச்சொல்லின் ஒலியும் ஒரேநேரத்திலே புலப்பட்டுத் தொடர்புறுகின்றன. இப்படியாக இரண்டு மூன்று முறை பசுக்களைக் காட்டிப் பேரைச்சொன்னால், அக்குழந்தை பசுவைக் காணும்போது பசு என்ற சொல்லை நினைக்கும்; அன்றியும், "பசு" என்ற சொல்லைக் கேட்கும்போது அவ் விலங்கை நினைக்கும். கமலம் என்பது தாமரை என்பதை ஒரு சிறுவன் பலமுறை நினைத்தானயின், பின்பு "கமலம்" என்னும் சொல்லைக் கேட்கும்போது தாமரையை நினைப்பான். "அறம்செய்ய விரும்பு" என்பதிலுள்ள மூன்று சொற்களும் ஒருமுறை தொடுத்துச் சொல்லப்பட்டால், பின்பு அவைகள் தொடுத்து வருதல் இலகுவாகும்.



பூனை சுடுபாலிலே வாயை வைத்தால், அதுக்குத் துன்பம் உண்டாகும். பின்பு சுடுபாலையே யன்றி அடுக்களையையும் நாடாதென்பர். எருது, குதிரை, யானை முதலிய மிருகங்களைப் பழக்குதற்குத் துணையாயிருப்பதும் இவ்வண்மைச்சார்பாம். குதிரையைப் பழக்குகிறவன் அதை ஒரு பக்கத்துக்குத் திருப்பும்போது, அந்தப் பக்கத்துக் கடிவாளத்தை இழுக்கிருன். ஆகவே அதை இழுத்தலும் அந்தப் பக்கத்துக்குத் திரும்புதலும் ஒரே நேரத்தில் நடைபெறுகின்றன. அதனாலே கடிவாளத்தை இழுக்கும்போது குதிரை அந்தப் பக்கத்துக்குத் திரும்புதல் இலகுவாகின்றது.

ஒரு எண்ணத்தை அதனோடு கூடிய எண்ணம் எழுப்புவது போல அதைப்போன்ற எண்ணமும் எழுப்பத்தக்கது. தடாகத்திலே குவளைகள் அலர்ந்திருந்தமை நமிநந்தியடிகள் தண்ணீரால் விளக்கேற்றியதையும், சீதையின் ஒவ்வோருறுப்பையும் பார்த்தவர்கள் பிறவுறுப்புக்களைப் பாராமலிருந்தமை சமயவாதிகள் கடவுளின் ஒவ்வோரிலக்கணத்தை மாத்திரங் காணுதலையும் கவிகளுக்கு ஞாபகப்படுத்தின. கட்குடியன் மோரைக் காணும்போது கள்ளை நினைத்தலும், பிறவூரிலே ஆற்றைக் காண்பவன் தன்னூரிலுள்ள ஆற்றை நினைத்தலும், ஒருவனை அவனுடைய மகன் நிந்திக்கும்போது அவன் தன்னுடைய தந்தையை நிந்தித்ததை நினைத்தலும் ஒப்புமையால் வருவனவாம்.

நினைப்பு மனவாற்றல் அன்று. அது மனவாற்றலுக்குத்துணையாய ஒன்று. நினைப்பு இல்லையாயின் மனக்கோளும் பொருள்களைப்பற்றிய அறிவும் இல்லையாகும். மனவாற்றலின் அளவு மனிதருக்கிடையே வேறுபடுதல்

போல, நினைப்புவன்மையின் அளவும் வேறுபடுகின்றது. ஆயினும் மனவாற்றலின் அளவுக்கும் நினைப்புவன்மையின் அளவுக்கும் ஒரு தொடர்பும் இல்லை. மனவாற்றல் கூடியவர்களுக்கு நினைப்புவன்மை அற்பமாயிருத்தலும், மனவாற்றல் மிகக்குறைந்தவர்களுக்கு அது அதிகமாயிருத்தலும் உண்டு. சில மந்தர்கள் ஒருபாட்டை ஒருமுறை வாசித்தபின்பு பாராமற் சொல்லுகிறார்கள்.

## இளைப்பு

தொழில் செய்தற்கு ஆற்றல் வேண்டும். ஆதலால், தொழில் செய்யச் செய்ய ஆற்றல் குறைந்து கொண்டு வரும். ஆற்றல் குறைதலினாலே தொழிலும் குறையும். ஒரு பொருளை நெடுநேரம் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தால் அதைப்பார்த்தற்கு வேண்டிய ஆற்றல் குறைந்துபோம். ஆதலால், பின்னும் அதைப் பார்த்துக் கொண்டிருத்தல் பிரயாசமாகும். இப்படியான பிரயாசம் இளைப்பு எனப்படும்.

இளைப்பு சிலருக்கு விரைவாக வந்து விரைவாகத் தீரும்; வேறுசிலருக்கு நெடுநேரத்தின்பின் வந்து நெடுநேரத்திலே தீரும். இதை உணராதார் விரைவில் இளைப்பவர்களைச் சாலக்காரரென்பர்.

ஒரு பொருளை நெடுநேரம் உற்றுப்பார்த்துக்கொண்டிருத்தலினாலே கண் இளைத்ததாயின், காதினாலே தொழில் செய்தல் அரிதாகாது. அந்தச் சமயத்திலே கதைகேட்டல் எளிதான தொழிலாயும் விருப்பமானதாயுமிருக்கும். அதன் பின்பு மனவாற்றலை அதிகமாக வேண்டிநிற்கும் ஒரு நூலை வாசிக்கலாம். அது முடிந்த பின்பு ஒரு கீதத்தைப்பாடலாம். இப்படி வெவ்வேறு



வகையான ஆற்றலை வேண்டுந் தொழில்களை ஒன்றன்பின் ஒன்றாகச் செய்தல் சாலும். ஆயினும் ஒவ்வொரு தொழிலையுஞ் செய்யும்போது, இவைகள் யாவற்றுக்கும் வேண்டிய பொது ஆற்றல் குறைந்து கொண்டேவரும். இதனாலே இறுதியிலே எத்தொழில் செய்தலும் இயலாததாய் விடும்.*

ஆகவே இளைப்பானது சிறப்பிளைப்பு பொதுவிளைப்பு என இருவகைப்படும். சிறப்பிளைப்பினாலே சிற்சில கருவிகள் தொழில் செய்யமாட்டாமற் போகும். பொது இளைப்பினாலே எவ்வகைத் தொழில் செய்தலும் இயலாததாய்விடும். சிறப்பிளைப்பை நோக்கியே பள்ளிக்கூடப்பாடங்களை நிரைப்படுத்தும்போது ஒரேதன்மையான ஆற்றலை வேண்டும் பாடங்கள் அடுத்தடுத்து வைக்கப்படுவதில்லை.

ஆற்றற்குறைவேயன்றி, விருப்பக்குறைவும் தொழில் செய்யமாட்டாமைக்குக் காரணமாகும். இது அலுப்பு எனப்படும். தொழில் செய்யும் போது அலுப்புப்படுகிறவர்களை நெருக்கினால் அல்லது உற்சாகப்படுத்தினால் அந்தத் தொழிலைச் செய்வார்கள். ஒரு தொழிலில் அலுப்புப்படுகிறவர்கள் வேறொரு தொழிலை ஆவலோடுஞ் செய்வார்கள். ஒருவன் அதிகமாய் விரும்புந் தொழிலைச் செய்யாமையும் அலுப்புக்குக் காரணமாகும். ஒரு மாணாக்கனுக்கு விளையாட்டிலே விருப்பம் இருக்கும்

* ஒவ்வொரு வகையான அறிதற்றொழிலைச் செய்தற்கு மூளையின் ஒவ்வொரு பகுதியிலுள்ள நாடிமூலங்களின் தொழிற்பாடு வேண்டும். தொழில் செய்யும்போது அவைகள் தேய்ந்து மெலியும். அவைகள் மெலிதலினாலே இளைப்பு தோன்றும். இது சிறப்பிளைப்பு. தேய்வுப்பொருள்கள் இரத்தத்தோடு கலத்தலால், இரத்தம் செல்லும் பிரபகுதிகள் அதன்தூய்மைக்குறைவினால் மெலிவடையும். இதனாலே பொது இளைப்பு தோன்றும்.

போது மிகவும் இலகுவான படிப்பும் அலுப்புக்குக் காரணமாகும், அதிலே அகமுயற்சி செல்லாதாதலால்.

ஆகவே, தொழில்செய்யமாட்டாமைக்குக் காரணம் ஆற்றற்குறைவால் வரும் இளைப்பு என்றும் விருப்பக்குறைவால் வரும் அலுப்பென்றும் இருவகைப்படுதலையும், இளைப்பு தனிக்கருவிகளின் ஆற்றற்குறைவாலுண்டாவதாகிய சிறப்பிளைப்பென்றும், எல்லாக்கருவிகளுக்கும் ஆற்றல் குறைவதாலுண்டாகிய பொது இளைப்பென்றும் இருவகைப் படுதலையும் அறிக.

தொழில்செய்யத் தொடங்கவே இளைப்பு தொடங்கி விடும். ஆயினும் சற்றுநேரத்தின்பின் அது மறைந்து நிற்கத் தொழில் நடைபெறும். இறுதியிலே தொழிலைச் சிறிதுஞ் செய்யமாட்டாத நிலை வந்து இளைப்பு முற்றாக வெளிப்படும். குதிரைகள் நெடுநேரம் வேகமாய் ஓடி வந்து நின்றவுடனே இளைத்து விழுந்து இறத்தலுண்டு.

## நினைப்பின் ஆட்சி

முன்னறிந்த பொருளை நினைத்தற்குக் காரணமாவன அகமுயற்சியும் மனவாற்றலுமாம். நெடுநாளாக நினையாத நகரத்தின் பெயரை நினைக்க விரும்பும்போது, அவ்விருப்பத்தால் உண்டாகும் அகமுயற்சி அதை நினைப்புக்கு வருவிக்க முயலும், அந்நேரம் பிறிதொன்றன் எண்ணம் இல்லையாயின், தொழிலின்றியிருக்கும் மனவாற்றல் அதிலே தொழிற்படும். அது முன்பு பலமுறை அறியப்பட்டதாயின் அதன் பெயர் எளிதில் வரும். ஆதலால், வேண்டும்போதெல்லாம் ஒரு விஷயத்தைப்பற்றிய எண்ணம் எமக்கு வரவேண்டுமாயின் அதைப் பலமுறை அவதானத்தோடு சிந்தித்திருத்தல் வேண்டும்.



அன்றியும் அஃது எழுப்புதற்குத் துணையாகும் அண்மைச்சார்பையேனும் ஒப்புமைச் சார்பையேனும் ஆக்கிக் கொள்ளுதல் தக்கதாம். நினைப்புக்கு நிமித்தகாரணமாயும் மூலகாரணமாயும் துணைக்காரணமாயும் உள்ள இவற்றைப் பயன்படுத்தி நினைப்பை எளிதில் ஆளுதற்கு வேண்டிய சில முறைகள் பின் வருமாறு.

௧. ஒரு விஷயத்தை நினைப்பில் இருத்தவேண்டுமானால் அதைக் கூறுகளாக்கி அவற்றைத் தொடர்புறுத்திக் கொள்ளுதல் அதற்குப் பெருந்துணையாகும். இயல்பாகத் தொடர்பில்லாதவற்றிலும் தொடர்புகளை வலிந்து காணலாம். சரசுவதியின் ஆசனம் வெண்டாமரையோ செந்தாமரையோ என்ற ஐயம் நிகழ்ந்து கொண்டிருந்தால், அவ்வாசனம் சரசுவதியின் முதலெழுத்தாகிய சகரவரியெழுத்தை முதலிலில்லாததென்று தொடர்பு காணலாம். இங்கிலாந்தரசனாகிய முதலாம்சாள்ஸ் இறந்த ஆண்டு ௧௬௪௯. இந்த இலக்கத்தில் முதலிலிருக்கும் இரண்டெண்களும் அவனிருந்த காலத்தினாலும், மற்றைய இரண்டு எண்கள் ஆறோடும் ஒன்றோடுஞ் சேர்ந்து பத்தாவன என்னுந் தொடர்பினாலும் நினைப்பிலிருக்கும். ஒரு கூட்டத்தைச் சேர்ந்த பொருள்களின் தொகையை நினைத்தல் அவைகள் ஒவ்வொன்றையும் நினைத்தற்குத் துணையாகும். பகுபத உறுப்புக்கள் ஆறு என்பதை அறிந்தால், அவற்றுள் ஐந்து நினைப்புக்கு வரும்போது, ஆறாவதை வலிந்து ஆராய்ந்து ஞாபகப்படுத்தலாம்.

௨. ஒருபாடத்தை நினைப்பாக்க வேண்டுமாயின், அதை வசனம் வசனமாகவேனும், கூறு கூறாகவேனும், முற்றாகவேனும் பன்முறை படிக்கலாம். ஒவ்வொரு வசனமாய் நினைப்பாக்கும்போது மேலே குறித்த பொருட்

டொடர்பின் துணை வராது. நினைப்பாக்கப்படுவது பாட்டாயின் பொருட்டொடர்பேயன்றி இசைத்துணை எதுகைத்துணைகளும் வரா. கூறுகூறுக நினைப்பாக்குதல் சிறுவருக்கு வாய்ப்பானது. ஏனெனில், இருநூறுவரிகொண்ட ஓர் அகவல் முழுவதையும் ஒருமுறை வாசித்தலே அவர்களுடைய ஆற்றலை வாங்கிவிடும். முதிர்ந்தவர்கள் அந்த அகவல் முழுவதையும் பலமுறை வாசித்து நினைப்பாக்குதலே சுலபமான முறை. ஒருவர் ஒரு நூலினுள்ள ௨௪௦ வரிகளைக் கொண்ட இரு கூறுகளை நினைப்பாக்கத் தீர்மானித்து, ஒன்றைக் கூறு கூறாகவும் மற்றதை முற்றாகவும் பன்முறைபடித்து, முற்றாகப் பன்முறை படித்த பகுதி விரைவில் முடிந்ததைக் கண்டார்.*

௩. பன்முறை படிக்கும்போது தொடுத்தேனும் ஆறி ஆறியேனும் படித்தல் உண்டு. தொடுத்துப் படித்தலினால் இளைப்புண்டாகிப் பயனைக் குறைக்கும். ஆறுவதினால் இளைப்பு நீங்கும்; படித்தது மனத்தில் நன்கு பதியும். ஆதலால், ஆறியாறிப் படித்தல் நன்று.

* இதன் விவரணம் பின்வருமாறு :—

| நினைப்பாக்கிய முறை | நினைப்பாக்கிய நாள் | செலவான நிமிஷம் |
|---|---|---|
| தினமும் ௩௦வரி பன்முறை படித்துப் பின்பு முழுவதும் பன்முறை படித்தல் | ௧௨ | ௪௫௧ |
| தினமும் முழுவதையும் ௫முறை வாசித்தல் | ௧௦ | ௫௪௮ |



ஒருவர் இருபது எண்களை நினைப்பாக்குதற்கு, ஒவ்வொரு முறையும் அரைநிமிஷம் ஓய்ந்து பதினொருமுறை வாசிக்க வேண்டியிருந்தது. ஒவ்வொருமுறையும் ஐந்து நிமிஷம் ஓய்ந்து ஆறு முறையும், பத்துநிமிஷம் ஓய்ந்து ஐந்து முறையும் வாசிக்க வேண்டியிருந்தது. ஆறிஆறி வாசித்தல் தக்கமுறை என்பதற்கு இது அநுபவசாட்சியாகும். நினைப்பாக்கவேண்டிய விஷயம் நீளமானதாயின் ஆறும் நேரமும் நீண்டதாயிருத்தல் வேண்டும். ஒருவர் ஒரேதொகையான தனிச்சொற்களைக் கொண்ட மூன்று ஆவலிகளை வெவ்வேறு அளவான இடைநேரம் விட்டு ஒவ்வோர் ஆவலியையும் இருபத்துநான்கு முறை வாசித்தபின் தமக்கு நினைப்பிலிருந்த சொற்களின் தொகை இடைநேரத்துக்குத் தக்கதாய்க் கூடியுங் குறைந்தும் இருக்கக்கண்டார்.*

௪. நினைப்பாக்கும்போது பாராமற் சொல்லுதல் மிகச் சிறந்த ஓர் உபாயம். விஷயத்தை நினைப்பாக்குகில் ஒருமுறை வாசித்தவுடனே பாராமற் சொல்லிப் பார்க்கலாம். விஷயத்தையேயன்றிச் சொற்களையும் நினைப்பாக்குகில் நினைப்பு வன்மைக்குத் தக்கதாயும் விஷயத்தின் அளவுக்குத் தக்கதாயும் சிலமுறை வாசித்த பின்பு பாராமற் சொல்லலாம். பாராமற் சொல்லும்போது தடக்குவனவற்றைப் பார்க்கையில்,

* இதன் விவரணம் பின்வருமாறு:—

| படித்தமுறை. | | | | | நினைப்பாக்கிய சொற்கள். |
|---|---|---|---|---|---|
| நாளொன்றுக்கு | ௮ | முறையாக | ௩ | நாள்......... | ௧௮ |
| ,, | ௬ | ,, | ௪ | ,, ......... | ௩௯ |
| ,, | ௨ | ,, | ௧௨ | ,, ......... | ௫௩ |

அவற்றிலே அவதானம் அதிகமாகச் சென்று அவற்றை மனத்திலே நன்றாகப் பதித்து விடும். இதனாலே அவைகள் நினைப்பிலிருத்தல் சுலபமாகும். ஒரேயளவு ஆற்றலுடைய ஐந்துபேர் தனித்தனி ௧௭௦ சொற்களைக் கொண்ட ஐந்து கதைகளை ஒன்பது நிமிஷம் வெவ்வேறு முறையாக வாசித்தபோது பாராமற் சொல்லுதலால் நன்மையுண்டென்பது காணப்பட்டது.*

௫. ஒரு பாடத்தை முதன் முறை படித்த பின்பு அன்றைக்கே அதைத் திரும்பப் படித்தல் நினைப்புக்குப் பெருந்துணையாகும்.† அப்படிச் செய்யாவிட்டால் அதில் ஒரு பெரும்பாகம் மறதியாய்விடும். அன்றைக்கே திரும்பப் படித்தாலும் அதன் சில பாகங்கள் சிலநாட்களில் மறதியாய் விடும். ஆதலால் அது

| *வாசித்த முறை | வாசித்த வுடனே நினைப்பிலிருந்த சொற்கள் | நாலுமணித்தியாலத்தின் பின் நினைப்பிலிருந்த சொற்கள் |
|---|---|---|
| முழு நேரமும் வாசித்தல் | ௩௫ | ௧௬ |
| ௧/௫ நேரம் பாராமற் சொல்லல் | ௩௭ | ௧௯ |
| ௨/௫ ,, | ௪௧ | ௨௫ |
| ௩/௫ ,, | ௪௨ | ௨௬ |
| ௪/௫ ,, | ௪௨ | ௨௬ |

† "காய்ச்சின உடனே இரும்பை அடி" என்பது பழமொழி.



நெடுநாளைக்கு நினைப்பில் இருக்கவேண்டுமாயின் அதைப் பின்னும் படிக்கவேண்டும்.

தொடர்பில்லாத சொற்களை நினைத்தற்கு நினைப்பு வன்மை மாத்திரம் வேண்டப்படும். உதாரணமாக வா, யாழ்ப்பாணம், கருமை, சினம், கத்தரி என்னுஞ் சொற்கள் தொடர்பில்லாதவை. விவேகிகள் இவற்றினுந் தொடர்புகளைக் கண்டு நினைத்தலை இலகுப்படுத்துவர்.

## மறப்பு

புதிய விஷயங்களை நினைத்தற்குப் பழைய விஷங்களுட் சிலவற்றை மறத்தல் அவசியம். ஆதலால் விவேகிகள் தேவையில்லாதவற்றை மறந்துவிடுவர். அவதானம் அதிகஞ் செல்லாவிடினும் திரும்ப நினையாவிடினும் மறதியுண்டாகும். மறப்பு முதலில் விரைவாயும் பின்பு மெல்லவாயும் வரும். வசனங்களும், பொருட்டொடர்பற்றவைகளும், கூறு கூறாக நினைப்பாக்கப்பட்டவைகளும் இலகுவில் மறதியாய் விடும்.

## வினாக்கள்

௧. ஒருவனுடைய மனத்தொழில்பொதுவாகஎப்போதும் ஒரேயளவினதாய் இருத்தற்குக் காரணம் யாது? சில சமயங்களிலே அது குறைதற்குக் காரணம் யாது?

௨. மனவாற்றலை அளத்தல் எவ்வாறு?

௩. அவதானமாவது யாது? அவதானத்தை ஏற்றுதல் எவ்வாறு? பார்த்தெழுதும்போது பிழைவிடுதற்குக் காரணம் யாது?

௪. இளைப்புக்கும் அலுப்புக்கும் வேற்றுமை யாது? இவற்றை எவ்வாறு தீர்க்கலாம்?

ரு. பாம்பைக்கண்டு அஞ்சிய ஒருவன் அது தூரத்தியதாகக் கனுக்காணுதற்குக் காரணம் யாது?

சு. நிலைத்தல் நினைப்புக்குத் துணையாதல் எவ்வாறு?

எ. நினைப்பை இலகுப் படுத்துவன யாவை (உ)?

அ. அறிந்த ஒன்றை நினைப்பாக்குவன யாவை (௩)?

கூ. வேண்டிய இடத்திலே அவதானத்தை அதிகமாகச் செலுத்துதற்கு உபாயம் யாது?

க0. எவ்வகையானவற்றை நினைத்தற்கு நினைப்புவன்மை மாத்திரம் வேண்டியது?

# பதினைந்தாம் அதிகாரம்

## தன்மை

தன்மையின் கூறுகள்—மனப்பான்மை—மனக்கோலம்—மெய்க்கூறு—மனத்திண்மை—அறிவு.

### தன்மையின் கூறுகள்

ஒருவனுடைய தன்மை எப்படிப்பட்டதென்று வரையறுத்துச் சொல்லுகில், அவனுடைய ஆற்றல் முதலியவற்றில் ஒவ்வொன்றின் அளவையுஞ் சொல்லல் வேண்டும். எதுபோலவெனில், ஓர் ஆசிரியர் ஒரு மாணுக்கனுடைய படிப்பு இப்படிப்பட்டதென்று அறிவிக்கில், அவனுடைய அறிவு இலக்கியத்தில் நூற்றுக்கு ஐம்பது, இலக்கணத்தில் நூற்றுக்குத் தொண்ணூற்ருறு, கணிதத்தில் நூற்றுக்கு நாற்பது, சரித்திரத்தில் நூற்றுக்கு முப்பது என்று இப்படியாக ஒவ்வொரு பாடத்திலும் அவனுடைய அறிவின் அளவைச் சொல்லுதல் போலாம்.

ஆகவே, ஒருவனுடைய தன்மையைச் சொல்லுகில் அவனுடைய ஊக்கங்களின் வன்மையையும், மனமுயற்சியின் அளவையும், அகங்காரத்திண்மையையும், சுவைகளின் அதிர்ச்சியையும், உடலின் தன்மையையும், அறியும் நுண்மையையும், நினைப்புறுதியையும் இவ்வளவென்று சொல்லல்வேண்டும். இவைகள் ஒவ்வொன்றையும் அளத்தல் கூடுமாயின், ஒருவனுடைய தன்மை இப்படிப்பட்டதென்று சொல்லுமிடத்து, அவனுடைய உணவூக்கம் நூற்றுக்குத் தொண்ணூற்ருறு ஒதுங்கூக்கம் நூற்றுக்கு முப்பது என்று இப்படியாக ஒவ்வோர் ஊக்கத்தின் வன்மையையும், அவனுடைய

நேர்மை நூற்றுக்கு எண்பது இரக்கம் நூற்றுக்கு அறுபது என்று பற்றுக்களின் அளவையும், அகங்கார வன்மை நூற்றுக்கு எழுபது மனவாற்றல் நூற்றுக்குத் தொண்ணூற்றாறு என்று ஆற்றல்களின் அளவையுந் தனித்தனி அறிந்து சொல்லல்வேண்டும்.

இவற்றுட் சிலவற்றை அளக்கும் முறைகள் அறியப்பட்டு ஆளப்பட்டு வருகின்றன. காலகதியில் யாவற்றையும் அளத்தல் கூடியதாகலாம். அப்போது, ஒவ்வொருவருடைய தன்மையையும் கணக்காகச் சொல்லுதல் கூடும். அதுவரையும், அளக்கமாட்டாதவற்றை வகுப்புகளாகப் பிரித்துச் சொல்லுதலே சாலும். நல்லவன் தீயவனென்றும், உறுதியுள்ளவன் உறுதியற்றவனென்றும், சாந்தமுள்ளவன் சாந்தமற்றவனென்றும், நேர்மையுள்ளவன் நேர்மையற்றவனென்றும் ஒவ்வொரு குணத்தையும் இருவகைப் படுத்தி மனிதருடைய தன்மையைச் சொல்வது வழக்கம். இப்படி வகைப்படுத்துமிடத்து ஒருவனுக்கே நல்லவன் உறுதியுள்ளவன் சாந்தமுள்ளவன் நேர்மையுள்ளவன் என்று பலபேர்கள் வந்துசேருதல்கூடும். பண்டைக்காலத்து அகநூலாசிரியர்களுட் சிலர் சிற்சில குணங்கள் இப்படியாக ஒன்றோடொன்று தொடர்புடையனவாய் இருத்தலைக் கண்டு, தொடர்புடையவற்றை ஒவ்வோர் கூட்டமாக்கிப் போலும் மூன்று கூட்டங்களைக் கண்டனர்.* அவைகள் சத்துவமும் இராசசமும் தாமசமுமாம்.

ஒருவன் நல்லவனாயும் உறுதியுள்ளவனாயும் நேர்மையுள்ளவனாயும் இருந்தால் அவன் சத்துவவகுப்பைச்

* சில சாத்திரங்கள் இவ்வாறின்றிச் சத்துவம் இராசசம் தாமசம் ஆகிய மூன்றும் பிரகிருதியின் கூறுகள் என்று கூறும்.



சேர்ந்தவன் என்பர்.* ஆயினும் இவைகள் பெரும்பிரிவுகளாய்ப் போதிய வரையறையின்றி விரிந்திருத்தலால், இவைகளொவ்வொன்றையும் மூவகைப்படுத்தி, சத்துவத்திற் சத்துவம், சத்துவத்தில் இராசசம், சத்துவத்தில் தாமசம் முதலாகக் குணங்களை ஒன்பதாக்கினர்.

இக்காலத்து அகநூல்வல்லோரும் ஒன்றோடொன்று தொடர்புடைய தன்மைகளை ஒருங்கு சேர்க்க முயல்கின்றனர். அம்முயற்சி இன்னும் முற்றுப்பெறாமையாலும், ஆற்றல்களை அளக்கும் முறைகள் சீராகாமையாலும், அவைகள் அளவால் வேறுபடும் வகைகள் மாத்திரம் இங்கு சொல்லத்தகும்.

## மனப்பான்மை

ஊக்கவன்மைகளின் அளவு மனப்பான்மையெனப்படும். மனப்பான்மையால் மனிதருக்கிடையே வேறுபாடிருத்தலை யாவரும் அறிவரென்பது சாமானிய சனங்களின் பேச்சிலிருந்து விளங்குகின்றது. "இவன் சாப்பாட்டிராமன்", "இவன் அடிபிடிகாரன்," "இவன் கெறுப்பிடித்தவன்"† என்று சிற்சிலரைப் பார்த்து வேறு சிலர் சொல்லுதலைக் கேட்கிறோம். இவர்களுள்,

* சத்துவகுணத்தின் கூறுகளாவன:— மனவுறுதி, பொறுமை, இந்திரிய அடக்கம், நன்முயற்சி, சாமர்த்தியம், நேர்மை, சாந்தம், திருப்தி, பெருமகிழ்ச்சி, இனிமை, சீவகாருண்ணியம், மோட்ச ஆசை முதலியவைகளாம்.

இராசசகுணத்தின் கூறுகளாவன:— கடினம், உலகஇன்பஆசை, இடம்பாசாரம், தயவின்மை, அகந்தை, மமதை, வஞ்சனை, போகவிச்சை தயவின்மை முதலியவைகளாம்.

தாமசகுணத்தின் கூறுகளாவன.— அறிவீனம், பிறருக்கிடர்செய்தல், இழிவானவாழ்க்கை, சோம்பல், திருப்தியின்மை, தீய உணவிலாசை, அதிக நித்திரை முதலியனவாம்.

† கர்வமுள்ளவன் என்பது கருத்து

சாப்பாட்டிராமனில் உணவூக்கமும், அடிபிடிகாரனிற் போரூக்கமும், கர்வமுள்ளவனில் முதன்மையூக்கமும் மற்றைய ஊக்கங்களினும்வ லிமையாற் கூடியவைகளாம்.

ஒவ்வொருவனிடத்தும் ஒவ்வொரு நேரத்தில் அவனுடைய தேவைக்குத் தக்கபடி ஒரு ஊக்கம் வலிதாயும் மற்றவைகள் தூக்கமாயுமிருக்கும். சாப்பாட்டிராமனுக்கு வயிறுநிறைந்தவுடனே உணவூக்கஞ்சோர்ந்து போம். அப்போது, உறக்கவூக்கம் உணவூக்கத்திலும் ஆயிரம் மடங்கு வலியுடையதாகத் தோன்றும். அப்படியாயின், ஒருவனை ஊணனென்று சொல்லுவதென்னையெனின், அவனுடைய ஊக்கங்கள் ஒவ்வொன்றன் முழுவலியையும் கணக்கிடும்போது, உணவூக்கத்தின் முழுவலி மற்றவைகளிலுங் கூடியிருத்தலாலென்க. ஊணருள்ளும் உணவூக்க முழுவலி மிகக்கூடினவனே ஊரிலே ஊணனெனப் பேர் பெறுகின்றான்.

ஊக்கங்கள் முழுவன்மையைக் காட்டுதற்குச் சந்தர்ப்பங்கள் நேராவிடில், மனப்பான்மையை உள்ளபடி அளத்தல் இயலாது. மிகப்பயந்தவனொருவன், பயப்படவேண்டிய சந்தர்ப்பம் வராததினாலே, பயப்படாதவன் போலத் தோன்றுவான். அடிபிடிகாரனொருவன், அடிபிடிக்குச் சந்தர்ப்பம் வராததினாலே, சாதுவாகத் தோன்றுவான். ஆதலால் வேண்டிய சந்தர்ப்பம்நிகழாவழி, ஒருவனுடைய மனப்பான்மையை அறுத்துக் கூறுதல் தவறாகும்.*

* இது போலவே சந்தர்ப்பக் கொடுமையினாலே நல்லோர் அறநெறியினின்றும் விலகுதல் கூடும். அப்படி விலகுதலினாலே அவர்களைத் தீயோரென்னல் தகாது. தர்மர் அசுவத்தாமா என்னும் யானை இறந்ததென்று சொல்லியது தவறாயினும், அதனாலே அவர் தீயவராகார்.



மனப்பான்மையானது ஊக்கங்களைப்பற்றி வருவதாதலால் அது பெரும்பாலும் ஒவ்வொருவரிலும் இயல்பாயமைந்த தோன்றும். ஆயினும் பழக்க வழக்கங்களாலும் சந்தர்ப்பங்களாலும் ஊக்கங்கள் வலி குறைதலும் கூடுதலும் உண்டு.*

ஒருவனுடைய ஒதுங்கூக்கம் இயல்பிலே அற்பமாயுள்ளதாயினும், அவன் சிறுவயசிலே முதியோர்களாற் பலமுறையும் பயப்படுத்தப்பட்டும் அச்சம் அதிகமுடையாரோடு கூடிவாழ்ந்தும் வந்தானாயின் அவனிலே பயம் அதிகமாகத் தோன்றும். சிலரிலே கலவியூக்கம் இயல்பிலே மட்டாய் இருப்பினும், சிறுவயதிலே அதற்குச் சார்பான கதைகளிலும் புத்தகங்களிலும் அதிகமாகப் பொழுது போக்கினால், பிற்காலத்திலே அவ்வூக்கம் வலிமிகுந்து நிற்கும். பயிற்சியினாலே வலிமிகும் வேறோர் ஊக்கம் அகந்தை. ஒரு குழந்தையினுடைய எண்ணத்துக்கெல்லாம் தாய்தந்தையர் இணங்கி அவனைப் பெருமைப்படுத்தி வந்தால், அவனிலே அகந்தையானது வலியேறி எல்லையில்லாத அதிகார ஆசையையும், வீணான டம்பப்பிரியத்தையும், மற்றவர்களோடு காலங் கழிக்கவிடாத கர்வத்தையும் உண்டாக்கும்.

சிலஊக்கங்களின் வன்மைக்கு இரத்தத்திலுள்ள சிலசத்துகள் துணையாகின்றன. கலவிக்கருவியிலுண்டாகும் ஒருசத்து இரத்தத்தோடு சேர்ந்து கலவியூக்கத்தைக் கூர்மைப்படுத்து கின்றது. இரத்தத்திலுண்டாகும் ஒரு வேற்றுமை உணவூக்கத்தைக் கூர்மைப்படுத்துகின்றது.

* மனப்பான்மையானது பொதுப்பட இயல்பாயமைந்ததோன்றாதலால், நயமில்லாத மனப்பான்மை யுடையோரை இகழுதல் தவறாகும். 'பழிப்பன பகரேல்'' என்ற திருவாக்கும் இதற்குப் பிரமாணமாகின்றது.

இவைகளையன்றிச் சில உணவுவகைகளும் ஔடதங்களும் நோய்களும் சரீரபலவீனமும் சில ஊக்கங்களுக்குத் துணையாகின்றன. சரீராரோக்கியமும் பலமும் மனப்பான்மையைத் தராசுபோல நிறுத்தத்தக்கவை.

சிற்சிலரிலே சிற்சில ஊக்கங்கள் மற்றவைகளினும் வலிமிக்கவைகளாய் நிற்கும். மற்றையோரில் ஊக்கங்கள் யாவும் முன்பின் ஒத்தவன்மை யுடையவைகளாய் இருக்கும்.

### மனக்கோலம்

ஊக்கவன்மைக்குப்பின் சிந்திக்கத் தக்கது முயலல் வன்மை. இதனால் வரும் வேறுபாடுகள் மனக்கோலம் எனப்படும். மனக்கோலம் முத்திறப்படும்.

ஒருதொழிலைச் செய்தற்குத் துணிந்தபின்பு, சிலர் அதைச் செய்தற்குப் பரபரப்பார்கள். வேறுசிலர் அதை ஆறுதலாகச் செய்யத் தொடங்குவார்கள். பரபரப்பவர்கள் பொறுமையற்றவர்கள். அவர்களிலே அகமுயற்சி தீவிரமாயிருக்கும். அப்படியான ஒருவனைப் பார்த்து "இவன் ஒரு பரபரத்தவன்" என்பர். அமைதி பயிற்சியால் வரத்தக்கதாயினும், சிலரில் அது கூடியும் வேறுசிலரிற் குறைந்தும் இயல்பாயமைந்துள்ளது.

அகமுயற்சியின் தன்மை தொழிலின் ஆரம்பத்திலே வேறுபடுதலை யன்றித் தொழில் ஆரம்பித்தபின்பும் வேறுபடும். பரபரப்புள்ளவர்களிற் சிலர் ஒரு தொழிலைத் தொடங்கிவிட்டால், அதற்கு எவ்வகைத் தடைகள் வந்தாலும் அவற்றை நீக்கி அத்தொழிலை முடித்துவிடுவார்கள். அத்தொழில் செய்தற்கிடையில், அவசியமான பிறதொழில்கள் செய்யவேண்டி வந்தால் அவற்றை முடித்துவிட்டு, முதலெடுத்துக்கொண்ட தொழிலைச்



செய்வார்கள். இவர்களுடைய மனக்கோலம் விடாமுயற்சி யெனப்படும். பரபரப்புள்ளவர்களுள் வேறு சிலர் தொழிலைச் செய்யத் தொடங்கிய பின்பு ஏதாயினும் தடை உண்டாதலைக் கண்டால், அவ்வளவோடு அத்தொழிலைக் கைவிட்டுவிடுவார்கள். அதை முடித்தற்கு முதலில் உண்டான பரபரப்பு பின்பு தோன்றாது. இவர்களுடைய மனக்கோலம் நிலையின்மை யெனப்படும்.

மனக்கோலத்தின் மூன்றாவது கூறு இன்பதுன்பங்களாலே தாக்கப்படும் அளவு. சிலர் தொழில் செய்யும்போது, யாராவது உற்சாகப்படுத்தினால், அவர்களுடைய அகமுயற்சி யேறும். அவர்களுடைய தொழிலிலே குற்றஞ்சொன்னால், அகமுயற்சி குறையும்; தொழில் விரைவாக நிறைவேறி வந்தாற் பெருமுயற்சி செய்வார்கள்; தாமதப்பட்டால் முயற்சியைத் தளரவிடுவார்கள். இவர்களுடைய மனக்கோலம் ஈடாட்டம் எனப்படும். வேறு சிலர் மற்றவர்கள் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும், தொழில் விரைவாக நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும் ஒரேயளவு அகமுயற்சியுடையவராய் இருப்பர். இவர்களுடைய மனக்கோலம் அசையாமை எனப்படும். இனி, சிலர் இன்பத்தினால் அசையாராயினும் துன்பத்தினால் ஈடாடுவர். வேறு சிலர் இன்பத்தினால் ஈடாடுவராயினும் துன்பத்தினால் ஈடாடார்.

இங்ஙனமாக மனக்கோலம் முக்கூறுடைமையால், ஒருவனுடைய மனக்கோலத்தை அளக்கில் ஒவ்வொரு கூற்றிலும் அவன் எத்தன்மையன் என்பதை அறிதல் வேண்டும். ஒவ்வொரு கூறும் இரண்டாகப் பிரிதலால் மனக்கோலம் எட்டு வகைப்படும்.

### மெய்க்கூறு

சுவைகளாலும் இரத்தத்தோடு சேருஞ் சிலபொருள்களாலும் சரீரநிலை வேறுபடும். இப்படி யுண்டாகும் வேறுபாடுகள் மெய்க்கூறுகளெனப்படும். சிலரிலே கோபம் துக்கம் மகிழ்ச்சி முதலிய சுவைகள் பலமாகத் தோன்றும்; வேறு சிலரிலே அற்பமாகத் தோன்றும். இந்த வேற்றுமையைக் கொண்டு மனிதரைப் புறநோக்கர் அகநோக்கர் என இருபாலாக வகுப்பர். சிலருக்கு அற்ப துக்கம் வந்தவுடனே முகம் சோர்ந்து இருண்டு போம்; பேச்சு வலிகுறையும்; சரீரம் தூக்கமடையும். இவர்கள் புறநோக்கர்கள். வேறு சிலரிலே எவ்வளவு துக்கமிருந்தாலும் முகவாட்டமேனும் சரீரத்தளர்ச்சியேனும் தூக்கமேனும் அதிகமாகத் தோற்ற மாட்டா. இவர்கள் அகநோக்கர்கள். இவர்களிலே சுவைகள் உள்ளே நின்று புத்தியை அதிட்டித்து முயற்சியைச் செய்யும். இந்த வேற்றுமை நாடிகளின் தன்மைகளைப் பற்றியிருத்தலால், இது இயற்கையில் அமைந்ததாதல் வேண்டும்.

அன்றியும் ஒரே பிதாமாதாக்களுடைய பிள்ளைகளுக்குச் சகவாசம் ஒரே தன்மைத்தாயிருக்கவும், சிலர் கடும் புறநோக்கராயும் வேறுசிலர் கடும் அகநோக்கராயும் இருத்தலினாலும் இந்தத் தன்மை இயற்கையில் அமைந்ததென்பது பெறப்படும். ஆயினும் இத்தன்மை பயிற்சியினால் மாறுதலடையத் தக்கது. சகவாசம் வாய்க்குமானால் புறநோக்கர்கள் சுவைகளாலுண்டாகும் மெய்ப்பாடுகளைக் குறைத்துவிடுவார்கள். அகநோக்கர்கள் புறநோக்கரோடு சேர்வதினாலே சுவைகளை அதிகமாகக் காட்டிவருவார்கள்.

இரத்தத்திலே தோன்றும் ஒருவகைச் சத்தினாற்



சில மெய்ப்பாடுகள் கூருதல் ஆராய்ச்சியால் அறியப்பட்டது. ஓர் அகநோக்கருக்கு மதுசாரம் என்னும் பதார்த்தத்தை அற்பமற்பமாக ஊட்டிவர, அவருடைய மெய்ப்பாடுகள் படிப்படியாய் வலியேறும். இறுதியிலே அவர் ஒரு கடும் புறநோக்கராகத் தோன்றுவார்.* இதிலிருந்து அகநோக்கு புறநோக்கென்ற பேதத்துக்குக் காரணம் இரத்தத்தில் இயல்பாயுள்ள "மதுசாரம்" என்று கொள்ளக்கிடக்கின்றது.

இம் மதுசாரமேயன்றிச் சில ஊற்றுப்பைகளிலிருந்து இரத்தத்துக்குச் செல்லுஞ் சாரங்களும் உடற்கூறுகளைத்தாக்கிச் சில சுவைகளைக் கூர்மைப்படுத்துகின்றன. தொண்டையிலே கேடயவடிவமான ஓர் ஊற்றுப்பை யுண்டு. இதைக் கேடயப்பை யென்போம். இக் கேடயஊற்று நாடிமண்டலம்முழுவதையும் தாக்கத்தக்க ஒன்று. இது அநேக சுவைகளைப் பலப்பிப்பது. இதன் குணம் காஞ்சிரை மது முதலியவற்றின் குணத்தைப் போன்றது. இது இரசாயன சாஸ்திரிகளால் ஆராயப்பட்டு இன்னபொருளென்று அறியப்பட்டிருக்கிறது†. இந்த ஊற்று ஒருவனிலே குறையுமானால், அவனுக்குச் சோம்பல் உண்டாகும். சிறுவயசிலே இது குறைந்தால், சரீரவளர்ச்சி குன்றும். அப்படியானவர்களுக்கு இந்தச் சத்தை வைத்தியர்கள் (செம்மறியாட்டிலிருந்து) எடுத்து மருந்தாகக் கொடுக்கிறார்கள். இந்த ஊற்று அதிகப்படில் அளவுக்குமிஞ்சின முயற்சியும் பதைபதைப்பும் உண்டாகும்.

* இதனாற்போலும் முன்னோர் கள்ளைச் "சொல்விளம்பி" என்றனர்.

‡ இதன்ஒருகூறு (ஆங்கிலத்தில்) "அயடீன்" எனப்படும். இது கடல் நீரில் உண்டு.

சலாசயத்தின்மேலுள்ள ஊற்று இரத்தாசயத்தையுந் தசைநார்களையும் பலப்படுத்துகிறது. இது தடைபட்டால் இரத்தாசயபலவீனத்தினால் மரணஞ் சம்பவிக்கும். இது கோபத்துக்கும் அச்சத்துக்கும் துணையாதல் முன்னதிகாரங்களிற் காட்டப்பட்டது.

மூளையின் அடியிலே தலையோட்டுக்குள்ளே வேறோர் ஊற்றுண்டு. அது கேடைய ஊற்றைப் போன்றது. அது குறைந்தால் உடம்பிலே கொழுப்பேறும், தொழில் குறையும்; சிறு வயதிலே குறைந்தால் வளர்ச்சி குன்றும் இது அதிகப்பட்டால் உடம்பு அளவுக்குமிஞ்சி வளரும். உடம்பு வளர்ச்சி அடைந்தபின் அதிகப்பட்டால், கை கால் முகம் ஆகிய இவை அளவுக்குமிஞ்சிப் பருக்கும். இப்படியாக அநேக ஊற்றுக்கருவிகள் அரிய தொழில்களைச் செய்துகொண்டு ஒன்றுக்கொன்று துணையாகி உடலையும் உடல்முயற்சியையும் உளமுயற்சியையும் பாதிக்கின்றன.

இரத்தத்திலே ஊற்றுகளேயன்றித் தேய்வுப் பொருள்களுஞ் சேருகின்றன. இவைகள் அதிகமாகச் சேருதலினாலே இளைப்பென்னும் மெய்ப்பாடு உண்டாகும். தேய்வுப்பொருள்களாவன உடலிலே தொழில் நடைபெறும்போது அத்தொழிலினாலே தசையிலும் நாடிகளிலும் ஏனைய பகுதிகளிலும் தேய்ந்து போகுங் கூறுகளாம். இவற்றை இரத்தம் கொண்டுசென்று சுவாசப்பை சலப்பை முதலியவற்றால் உடம்பிலிருந்து நீக்குகின்றது. கடுந்தொழில் செய்யும்போது, இவைகள் இரத்தத்திலே மட்டுக்குமிஞ்சிச் சேரும். அப்போது மூளையும் நாடிகளும் சில கருவிகளும் சோர்வடையும்.



## மனத்திண்மை

அகங்காரவன்மை மனத்திண்மை யெனப்படும். இது மனிதனுடைய தன்மையின் கூறுகளுள் முதன்மை பெற்று மற்றெவ்வகைக் குணக்கூற்றையும் உயர்த்தவும் தாழ்த்தவுந் தக்கது. ஒருவனுடைய ஏனைய குணக்கூறுகள் எப்படிப்பட்டனவாயிருப்பினும், அவன் அகங்காரவன்மையாற் கூடியவனாயின் அவன் விரும்பியதை முடிக்கத்தக்கவனாவான்.* முயலற்குறைவினால் உறுதியற்ற தன்மையையுடையவனும், அகங்காரவன்மையுடையவனாயின் வேண்டியபோது மனத்தை உறுதிப்படுத்துவான்; இயல்பிலே எவ்வளவு பரபரப்பிருந்தாலும் அந்தப் பரபரப்பை யடக்கி அமைதியாய் இருந்து தொழில் செய்வான்; எவ்வளவு புறநோக்கனாயிருந்தாலும், தன்னுடைய பேச்சையும் முகத்தையும் சரீர அதிர்ச்சியையும் அடக்கி அகநோக்கனாகத் தோற்றத்தக்கவனாவான். அகங்காரம் வலிகுறையில், இயல்பாக உறுதிப்பாடுடையவனும் எடுத்ததொழிலை நிறைவேற்றாமற் சோரவிட்டு விடுவான். ஆதலால், ஒருவனுடைய மற்றைய குணக்கூறுகள் எப்படியிருந்தாலும், அகங்காரம் வலியுடையதாயின், அவன் எடுத்ததொழிலை முடித்தற்குத் தனக்குள்ள ஆற்றல் முழுவதையும் உபயோகிப்பான். அகங்காரவலி குறைந்தவர்கள் தம் முழு ஆற்றலையும் உபயோகிக்கமாட்டார்கள். அவர்களுடைய ஆற்றலின் எல்லை அவர்களுக்கே தெரியவராது. அவர்ளுக்குப் பெரும் நோய்களேனும் இடர்களேனும் வந்த காலத்தில் மாத்

* "மனமுண்டானால் இடமுண்டு" என்பதில் மனமென்பது அகங்காரம்.

திரம் அவர்கள் தங்கள் ஆற்றல்கள் எவ்வளவின என்பதை ஒருவாறறிவார்கள்.

தொழில் நிறைவேற்றுதற்கேயன்றி ஊக்கங்களையும் பற்றுக்களையும் அடக்குதற்கும் அகங்காரவன்மை வேண்டப்படும். தீயபழக்கங்களைப் பழகினவர்களிற் பலர் அவற்றாலுண்டாகுந் தீமைகளை நன்குணர்ந்து அவற்றைவிட விரும்பியும், அகங்காரவன்மை போதாமையால் அவற்றுக்கு நித்திய அடிமைகளாய் இருக்கிறார்கள். ஊக்கவன்மையினாலே ஒரு தொழிலில் எவ்வளவு விருப்பமுண்டானாலும், அது செய்யலாகாதென்று கண்டவன் அகங்காரவன்மையுடையவனாகில் அவ்விருப்பத்தை யடக்கி அத்தொழிலை விலக்குவான்.

அகங்காரவன்மை நன்மைக்கு உதவுவதுபோலவே தீமைக்கும் உதவும். அவ்வன்மையுடையோன் ஒருவன் ஒரு தீயதொழிலைச் செய்யத் துணிபு செய்தானாயின், யார் தடுத்தாலும், அதனால் என்ன தீமை வருவதாயினும், அதைச் செய்வான்.

அகங்காரவன்மை எவ்வாறுண்டாவதெனில், அது ஒவ்வொருவரினும் இயல்பாயமைந்துள்ளது. விவேகம் மனிதரிலே வெவ்வேறளவினதாயிருப்பது போல, அகங்கார வன்மையும் வெவ்வேறளவினதாயிருக்கிறது. இவ்வன்மையை அளக்கும் முறையை அகநூல்வல்லோர் ஆராய்ந்தறிந்து கையாண்டு வருகின்றனர்.

அகங்காரம் எப்போதும் முழு வலியோடு நிற்பதன்று. ஒரு பூவையெடுத்தற்குச் சீரபலம் முழுவதும் உபயோகிக்கப்படாதிருத்தல்போல, எளிதாகச் செய்யத்தக்க தொழில்களுக்கு அகங்காரத்தின் முழுவன்மையும் வேண்டப்படாது. பசித்தபோது உண்ணுதற்கு



அகங்காரவன்மை அற்பமாகவே வேண்டப்படும். கடும்பசி வந்தபோது உண்ணாதிருத்தற்கு அகங்காரவன்மை அதிகம் வேண்டும். சீரபலம் குறைவில்லாதிருக்கும்போது ஒரு தொழிலைச் செய்துகொண்டு போதற்கு அகங்காரவன்மை முழுவதும் வேண்டப்படாது. மனமும் உடலும் இளைத்த நேரத்திலே தொழிலைச் செய்தற்கு அவ்வன்மை அதிகமாக வேண்டப்படும்.

மனத்திண்மையுடையவனது பற்றுக்களை அறிந்துகொண்டால், அவன் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எப்படி நடந்துகொள்ளுவானென்பது முன்னமே சொல்லத்தக்கதாயிருக்கும். நிலையான பற்றும் அகங்காரவன்மையும் இல்லாதவன் ஒரு சந்தர்ப்பத்திலே எப்படி நடந்துகொள்வானென்பது சொல்லமுடியாதது.

மேலே கூறிய மனக்கோலம் மனப்பான்மை மெய்ப்பாடு மனத்திண்மை ஆகிய நான்கும்* ஒருவனுடைய குணத்தின் அங்கங்கள் எனப்படும். இவைகள் நான்கும் மனிதனுடைய உடல்நிலை மனநிலை ஆகிய இருநிலைகளாலும் வருவன. இவைகள் பிறப்பிலே அமைந்தவைகளாயினும், செயற்கையால் மாறுதல் அடையத்தக்கவை. பெற்றோரும் ஆசிரியரும் நண்பரும் இவற்றை மாற்றும் ஆற்றலுடையவர்கள். இம்மூவருள்ளும் பெற்றோரது† வளர்ப்பே மிகப்பிரதானமானது. "தொட்டிலிற்

* அறிவும் வன்மையும் மனிதனுடைய குணத்தின் ஓர் அங்கமாயினும், வழக்கத்திலே அதை ஓர் அங்கமாகக் கருதுவதில்லை. இவ்வதிகாரத்திலே தன்மையென்றது இவ்வகன்ற பொருளையுடைய குணத்தையாம். வழக்கமான பொருளில் வரும் குணமும் அறிவும் சேர்ந்து தன்மையாகும்.

† தாய் தந்தையருடைய ஒற்றுமைக்கேடு பிள்ளைகளுக்குப் பெருங் கேட்டை விளைவிக்கும்.

பழக்கம் சுடுகாடு மட்டும்" என்ற பழமொழி இதற்குச் சான்றாகும்.

### அறிவு

அறிவும் மனிதனுடைய தன்மைகளுட் பிரதானமான ஒரு கூறு. அறிவென்பது விவேகத்தையும் விவேகத்தாலறியப்படுவதையும் குறிக்கும். விவேகம் மனிதரில் அளவினாலன்றி ஆழம் விரைவு என்னும் பாகுபாடுகளாலும் பேதப்படும். மனத்திண்மையேறியவர்களது விவேகம் ஆழமாயும், மனத்திண்மை குறைந்தவர்களது விவேகம் விரைவாயும் இருக்கும். ஆழமான விவேகமுடையோர் அமைதியும் தாழ்மையும் காரியத்தைச் சாதிக்கும் வன்மையும் நெடுநேரம் மனமுயற்சி செய்யும் ஆற்றலும் ஆழமான சுவைகளும் உடையராகக் காணப்படுகின்றனர். விரைவான விவேகமுடையோர் தற்பெருமையும் நுண்ணிய அறிவும் கூடிய சரீரமுயற்சியும் கடுஞ்சுவையும் இன்பவேட்கையும் பொருந்தியவராயிருக்கிறார்கள்.

### வினாக்கள்

க. குணத்தின் கூறுகள் எவை?
உ. மனப்பான்மை திருந்துதல் எவ்வாறு?
ங. மனக்கோலம் எண்வகைப்படுதல் எவ்வாறு?
ச. புறநோக்கின் காரணம் யாது?
ரு. கேடய ஊற்றின் தொழில்கள் எவை?
சு. மனத்திண்மையின் பயன் யாது? மனத்திண்மையும் கூர்ந்தமதியும் உள்ளவர்கள் எப்படிப் பட்டவராயிருக்கிறார்கள்?
எ. தன்மையின் கூறுகள் எவை (உ)?

அகநூல் முற்றிற்று.

---

# அகநூற் சொல்லகராதி

---

| | |
|---|---|
| அகக்காட்சி | introspection |
| அகங்காரம் | will |
| அகநோக்கு | introversion |
| அகமுயற்சி, முயலல் | conation |
| அசைநாடி | motor nerve |
| அண்மைச்சார்பு | association by contiguity |
| அலுப்பு | subjective fatigue |
| அவதானம் | attention |
| அறப்பற்று | sentiment for ideals |
| அறிதல் | cognition |
| ஆதாரவிதி | postulate |
| ஆற்றல் | energy |
| இச்சாமூலம் | innate propensity |
| இயற்கைக் காண்டல் | observation |
| இல்பொருட்காட்சி | hallucination |
| இளைப்பு | fatigue |
| இறைமைப்பற்று | master sentiment |
| இன்பம் | pleasure |
| ஊக்கத்தொழில் | instinctive action |
| ஊக்கம் | instinct |
| அருவருப்பு, | of disgust |
| ஆராய்வு, | ,, curiosity |
| இடப்பெயர்ச்சி, | ,, migration |
| ஈட்டல், | ,, hoarding |
| உணவு, | ,, food-seeking |
| உறக்க, | ,, sleep |

| | |
|---|---|
| ஒதுங்கு, | of escape |
| கட்டல், | ,, building |
| காதல், | ,, sex |
| பணிவு, | ,, submisson |
| மகவுக்காப்பு, | parental, |
| கூட்டு, | gregarious, |
| துணைதேடல், | help-seeking, |
| பின்பற்றல், | imitative, |
| போர், | fighting, |
| முதன்மை, | self-assertive, |
| ஊசல் | oscillation |
| ஊற்று | gland, secretion of a gland |
| எண்ணத்தொழில் | deliberate action |
| எண்ணுதெழுதல் | automatic writing |
| ஒப்புமைச் சார்பு | association by similarity |
| கற்பனை | imagination |
| சாத்திர, | scientific, |
| செய்யுட், | poetical, |
| காண்டல் | experience, observation |
| சேடய ஊற்று | thyroid gland |
| சகவேதனை, சகரச | sympathy, sympathetic |
| சரிப்படுத்தல் | rationalising |
| சீத்தல், தூய்மை செய்தல் | sublimation |
| சுவை | emotion |
| செயறகைக் காண்டல் | experiment |
| தற்பெருமை | pride |
| தன்மதிப்பு | self-reverence |
| தன்மை, புருடத்துவம் | personality |
| தாக்கங்கள் | affections |
| திரிபுக்காட்சி | illusion |



| | |
|---|---|
| துணிதல் | willing |
| துன்பம் | unpleasure |
| தேவை | want, wanting |
| தொடர்பு | relation |
| ஒப்புமை, | of similarity |
| குறி, | ,, evidence |
| கூட்ட, | ,, conjunction |
| சினை, | ,, constitution |
| பண்பு, | ,, quality |
| மானச, | ,, objectivity |
| தொடர்புப் பொருள் | correlate |
| தொடர்பூக்கம் | conditioned instinct* |
| நயத்தல் | appreciation |
| நாடிமூலம் | nerve cell |
| நிலைத்தல் | inertia |
| நினைப்பு | memory |
| பகற்கனவு | day-dream |
| பற்று | sentiment |
| பிரதி | response |
| பிரதித்தொழில் | reflex action |
| பிரயோகம் | application |
| உண்மை, | real, |
| போலி, | formal |
| பின்னல் | complex |
| புலனுடி | sensory nerve |
| புறநோக்கு | extroversion |
| பொய்யடக்கம் | repression |
| பொறிக்காட்சி | sensation |
| மறைதொழில் | sub-conscious activity |

* also called conditioned reflex.

| | |
|---|---|
| மனக்கோள் | concept |
| மனத்திண்மை | will-power |
| மனப்பான்மை | disposition |
| மனம் | mind |
| மானதக்காட்சி | perception |
| முரண் | conflict |
| முழுவசியம் | hypnotism |
| முறை | method |
| மெய்க்கூறு | temperament |
| வடிவம் | form |
| வாதம் | school of philosophy |
| அகவுடற்சேய்மை, | psychophysical parallelism |
| அகவுடற்றொடர்பு, | psychophysical interaction |
| இன்ப, | hedonism |
| சட, | behaviourism |
| நிழல், | epiphenomenalism |
| விரிவு | evolution |
| விரும்பல் | desiring |
| விவேகம் | intelligence |
| வேதனைகள் | feelings |
| மனக்கோலம் | temper |

